# காரியதரிசி

(நாவல்)

ஆசிரியர்:

சங்கரராம்





கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் : : சென்னை – 4

# முன்னுரை

**உலகம்** பல விதம். அவ்வாறே வாழ்க்கையின் போராட்டங்களும். இப்போராட்டங்களும் சமூகத்துக்குத் தக்கவாறு மாறுபடுகின்றன. மேல் நாட்டாருக்குச் சகஜமாய் இருக்கும் சில பழக்க வழக்கங்கள் நமக்கு வெறுப்பை உண்டாக்குகின்றன. நம்மவற்றைப்பற்றி அவர்களும் அதே மாதிரி நினைத்தால் அதில் பிசகு இல்லை. ஆயினும், மனித வர்க்கத்துக்கே அலாதியாகக் கூடப்பிறந்த குணதிசயங்கள், ஒருவன் எச்சமூகத்தைச் சேர்ந்தவனானாலும், அவனைக் கட்டுப்படுத்துகின்றன. இக்கட்டுப்பாட்டின் அடிவேர்தான் கலை என்று சொல்லவேண்டும். ஆகவே, கலைக்கு விளைவிக்கும் தீங்கோ, நன்மையோ உலக சமூகத்தையே பாதிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

கதை சொல்வதும் முக்கியமான கலைகளில் ஒன்றானகையால், அக்கலையில் ஈடுபட்டிருப்பவர்களுடைய பொறுப்பையும் கடமையையும் வற்புறுத்திச் சொல்ல வேண்டுமா?

லட்சியம் இல்லாத கலை கூலிக்குச் செய்யும் வேலையாகும். ஆனால் லட்சியம் ஒன்று மாத்திரம் இருந்துவிட்டால் ஒரு கற்பனை கலையாகிவிடுமா என்று கேட்க வேண்டாம். உணர்ச்சிச் சுவையற்ற கற்பனைக்குக் கலை என்ற பெயரே தகாது. கோடித் துன்பங்களை அநுபவித்து, இன்றைக்கும் நமது பண்பு குலையாததற்குக் காரணம், நம் கலைகள் உயர்தரக் கருத்தும் சுவையும் கலந்து பரிமளிப்பதினால்தான்.

இந்நாட்டில், ஸ்ரீ ரமணபகவானைப் போன்ற மகரிஷிகள் தோன்றியதற்கும், மகாத்மா காந்தியைப் போன்ற கர்மயோகிகள் உதித்ததற்கும், மற்றும் பல மகான்கள் அவதரிக்கக்கூடும் என்ற நம்பிக்கைக்கும் இதைத் தவிர வேறு காரணம் ஏது?

ஆனால் மேல்நாட்டாரில் அநேகர், முக்கியமாக அமெரிக்கர், சுவையையே குறியாக வைத்துக் கொண்டு, சுபாவமாக நேரிடக்கூடாத விஷயங்களை யும், மயிர்க்குச்சிடும் சம்பவங்களையும் புகவிட்டு மனத்தை மயக்குகிறார்கள். இதனால் ஏராளமான திரவிய லாபம் கிடைக்கும். ஆனால் இது பண்புக்கும் கலைக்கும் செய்யும் சேவையன்று; தீங்குதான். ஆகவே, இவ்விஷயங்களில் நாமும் அவர்களைப் பின்பற்றினால் நமது பண்பும் கலையும் நிச்சயமாகச் சீரழிந்துபோகும். பிற்காலத்தில், நம் நாடு உலகத்துக்கே ஒரு வழிகாட்டி யாக இருக்குமென்று ஆசைப்படுவது நிராசையாகும்.

மேற்கூறிய கருத்துக்களை இந்தக் கதையில் நானும் கைக்கொள்ள முயன்றேன். என் முயற்சி எவ்வளவு தூரம் வெற்றி அடைந்ததென்பதை வாசகர்களே நிர்ணயிக்க வேண்டும்.

இப்புத்தகத்தின் முன்பதிப்பைப் பாராட்டி எழுதிய வாசகர்களுக்கு என் நன்றி. இப்பொழுது வெளிவருவது இரண்டாம் பதிப்பு.

இந்த நவீனத்தை முதலில் தொடர் கதையாகப் பிரசுரித்த ‘ஆனந்த விகடன்’ பத்திராதிபருக்கு என் நன்றி உரியதாகும்.

**சங்கரராம்.**




# பொருள் அடக்கம்

பக்கம்

1. பெண் பிறப்பு — 1
2. கல்யாண ஏற்பாடு — 6
3. ஜானகிராம ஐயர் — 15
4. 'மனைவி இறந்தால் மணமகன்' — 29
5. பெற்ற மனம் — 39
6. புக்ககம் — 45
7. பட்டண வாசம் — 59
8. ஒரு பிரசங்கத்தின் விளைவு — 68
9. தோழியின் பிரிவு — 77
10. மகனும் மகளும் — 88
11. பச்சாத்தாபம் — 103
12. தொழில் துவக்கம் — 115
13. விமலா — 129
14. அடியும் அன்பும் — 138
15. இளம் தம்பதிகள் — 150
16. தோழியின் வருகை — 159
17. லோக மராமத்து — 168

18. மதிக்குத் தக்கின வாழ்வு 178

19. குழப்பம் 189

20. தூஷணை 200

21. அலட்சியம் 209

22. தாய்க்கு ஏற்ற மகள் 219

23. குடும்பம் கலைந்தது 228

24. விசாலாக்ஷியின் கடிதங்கள் 235

25. விமலாவின் குறைகள் 242

26. தலைக்கு வந்தது 250

27. பட்ட காலிலே படும் 260

28. சமர்ப்பணம் 265



# 1

# பெண் பிறப்பு

அண்ணுசாமி ஐயர் வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு, வாழைப்பட்டையைச் சீவிக்கொண் டிருந்தார். அவர் க்ஷவரம் செய்துகொண்டு சில மாதங்கள் இருக்கும். நரைத்தும் நரைக்காமலும் இருந்த உரோமம் அவர் முகமெல்லாம் வேலம்முள்போல் சிலிர்த்து நின்றது. தோற்றத்தில் ஒரே வியாகூலம். ஓசை செய்யாமல் வாய் அடிக்கடி ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில், சுமார் பதினைந்து வயதுள்ள அவருடைய புதல்வி வந்து, ''வெள்ளைப்பூண்டு வாங்கிக்கொண்டு வரச்சொல்லறு, அப்பா'' என்று வெகு நிதானமாய்ச் சொன்னுள். தாய்த்தன்மை பெண் இனத்தின் இயல்புதான். ஆயினும், விசாலாக்ஷியின் 'கொட்டாங்கச்சி' போன்ற கண்களில் இந்த அன்னைப் பரிவு பொங்கி வழிந்தது.

அவளைக் கண்டதும், இருதயத்தில் முள் தைத்தாற் போல் அண்ணுசாமி ஐயரின் முகம் ஒருகணம் துடித்தது. ''இதோ வாங்கிண்டு வறேன், அம்மா. வந்து அப்புறம் தச்சுக்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டு, பட்டைகளை அடுக்கிக் கட்டினுர். அப்பொழுது தெரு வழியே போய்க்கொண் டிருந்த வீரராகவ ஐயர் சற்றுத் தயங்கி, ''என்னையா, ஆத்துலே எப்படி இருக்கு?'' என்று விசாரித்தார்.

"பிரசவம் ஆயிடுத்தே!" என்றார் அண்ணுசாமி ஐயர்.

"என்ன குழந்தை?" என்று அவர் ஆவலோடு கேட்டார்.

"நம்மாத்துப் பிரசவத்தைக் கேட்கணுமா? ஒரு மா மாங்கம் போயும் அதே பெண்தான்" என்றார் அண்ணு சாமி ஐயர், அதிருப்தியை அடக்க முடியாதவர் போல்.

"அட ராமா! ஆறுவதும் பெண்ணு?—ஓய், உமக்கு தசை அடிக்கப் போறதுங்காணும். நீர் வேணும்னால் பாரும். ஆறுப் பெருகப் போறதையா!" என்று அவர் உற்சாகப்படுத்தினார்.

அண்ணுசாமி ஐயர் மௌனமாய் உள்ளே சென்று பட்டைகளை வைத்துவிட்டு வந்தார். வீரராகவ ஐயரும் கடைத்தெருப் பக்கமே போகவேண்டியிருந்ததால், இருவரும் சேர்ந்து நடந்தனர்.

"இந்தத் தடவை புழக்கடை மனையிலே எவ்வளவு நெல்லு காணும்?" என்று வீரராகவஐயர் உருக்கத்தோடு விசாரித்தார்.

"என்னத்தைக் காணும், ஐயா! பத்துக் கலம் கிடைத்தால் ஜாஸ்தி. யாரு மூக்கிலே வைக்கிறது?" என்று அண்ணுசாமி ஐயர் பெருமூச்சு விட்டார்.

"ஒண்ணைக் கலியாணம் பண்ணி அனுப்பிச்சோமானால், இன்னொண்ணு கூடவே பிறந்துடறது. ஏன் ஐயா, இந்தக் குட்டி விசாலாக்ஷிக்கு நல்ல வரனாய் ஒண்ணு கிடைக்க மாட்டேங்கிறதே! கொஞ்சம் பாரும் ஐயா. அவள் தெய்வம்னா, தெய்வமாச்சே! எவ்வளவு பொறுமை, எவ்வளவு சாந்தம்! நன்னா விவரம் தெரிஞ்சுடுத்து. வீட்டுப் பொறுப்பு எல்லாம் அவளுக்கே. குழந்தை மனஸு ரொம்பக் கஷ்டப்படறது" என்று அவர் வருந்தினார்.

"நீர் திடீர்னு ரெட்டி பண்ணையை விட்டிருக்கப் படாது" என்றார் வீரராகவ ஐயர்.

"விடாமல் என்ன செய்யறது? அவன் பிள்ளை எவ்வளவு துஷ்டன், தெரியுமா? கொஞ்சங்கூட மட்டு மரியாதை கிடையாது. அவன் வீட்டு நாயும் நானும் ஒண்ணுன்னு வச்சுட்டான். அவன் அதிகாரம் இல்லாதது வரையிலும் காலத்தைத் தள்ளினேன்! சே! சுத்தக் கேப்புமாறி ஐயா, அவன் . . . அவனண்டை வேலை செய்யறதைக் காட்டிலும், மனுஷன் குத்திண்டு சாகலாம்."

"சரி, இப்போ மேலே என்ன செய்யப் போறீர்?"

"என்னத்தைச் செய்யறது! பகவான் விட்ட வழி விடட்டும்—நேத்து, காளைக் கன்னே அறுபது ரூபாய்க்கு வித்தீராமே. இந்த மூடைக்கு, பத்து, அஞ்சு இருந்தால் கொடுமே, ஐயா. மனை அறுத்ததும் நெல்லை வித்துக் கொடுத்துடறேன்."

"ஐயோ, அதை அப்படியே வாய்தாவுக்குக் கட்டியாகணும். இந்த வாய்தா எழவு இல்லாதபோனால், நான் அதை விற்கவே மாட்டேன், அப்பாயி செட்டி கடையிலே வேணும்னால் சாமான் வாங்கித்தரேன்."

"சரி, அதையாவது செய்யும்!"

இவ்வளவாவது கிடைத்ததே என்று அண்ணுசாமி ஐயருக்குச் சந்தோஷம்.

பிறகு, இருவரும் கடைத்தெருவை நோக்கிச் சென்றார்கள். போகும் வழியில், சாலையை ஒட்டினாற்போல் பல தென்னந்தோப்புகள் இருந்தன. அவைகளில், அங்கங்கே கள் இறக்கப்பட்டுக்கொண்டு இருந்தது. தோப்பில் நின்றுகொண்டிருந்த இரண்டு பிராமணர்களைக் கண்டதும், அண்ணுசாமி ஐயருக்குக் கோபம் பொங்கி வந்தது. "என்ன அக்கிரமம், ஐயா! இவர்கள் கள்ளுக் குத்தகை எடுக்கிறதா? குடியை ஒழிக்கணும்னு எத்தனையோ மகான்கள் கஷ்டப்படறபோது, இந்தப் பாவிகள் இது மூலமாய்ப் பணம் சம்பாதிக்கணும்னு பார்க்கிறாளே!" என்றார்.

"அட, எவ்வளவோ அக்கிரமங்களிலே இதொண்ணு! இந்தக் காலத்துலே, பணந்தானே ஐயா, பிரதானம்?" என்றார் வீரராகவ ஐயர்.

இவ்வாறு, இவ்விருவரும் பேசிக்கொண்டே போய்க் கொண்டிருக்கும்பொழுது தோப்பில் நின்றுகொண்டிருந்தவர்கள், இவர்களைப்பற்றித் தூஷிக்க ஆரம்பித்தார்கள்.

"அவன் மூஞ்சியைப் பாரேண்டா, பிரம்மஹத்தி மாதிரி!" என்றான் ராமு. அவனுடைய நடை உடை முதலிய தோரணைகளிலிருந்து, அவனே முதலாளி போலக் காணப்பட்டது.

"அவனுக்கு ஆம்படையாள் எப்படி அமைந்திருக்காள், பாரேன்" என்றான் அவன் சகா சுப்பண்ணா.

"அட, அந்தப் பொண்களும் அவளையே கொண்டிருக்குடா. மூத்தவளைத்தான் சமையல்காரனுக்குக் கொடுத்தான்.—"

"கொடுக்கிறபோது, சமையல்காரன்னு தெரியாது. பாக்கி இரண்டு பேரையும் சுமாரான இடங்களிலேயே கொடுத்துட்டான்" என்றான் சுப்பண்ணா.

"என்ன சுமார்?—இரண்டாங் கலியாணமும் மூணாங் கலியாணமும்!"

"சே, சே, மூணும் கல்யாணம் ஒண்ணும் கிடையாது; ஆனால் இப்போ கலியாணத்துக்கு இருக்கே நாலாவது, அதன் கண்ணைப் பார்த்தயோ? அந்தக் கண்ணழகு ஒண்ணே போதுண்டா. ரொம்பச் சிகப்புன்னு சொல்றத்துக்கு இல்லை. இருந்தாலும் முகத்துலே என்ன தேஜஸு? அதன் கண்ணைப் பார்த்திண்டு இருந்தாலே போருமே.—யார் கொடுத்து வச்சிருக்கானோ?" என்று ஏங்கியவாறு அவன் சொன்னான்.

"இதோ பாரு, சுப்பண்ணா. நான் ஐந்து ரூபாய் கொடுத்துடறேன். எனக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்துடச் சொல்லேன்."

"என்ன ஆசைடா! பெண்டாட்டியும் மூணு குழந்தையும் இருக்க உனக்குப் பெண்ணை வேறே கொடுக்க மாட்டாளா? இது உங்காத்துக்காரி காதிலே விழுந்தான்னு தெரியும்!" என்றான் சுப்பண்ணா.

"அட, நான் அவளைச் சரிப்படுத்திக்கிறேன். இந்தப் பரதேசிப் பயலுக்கு என்னைவிட நல்ல மாப்பிள்ளை கிடைச்சுடப் போறானோ? பல்லுப்போய், கண்ணு போய், தள்ளாடற கிழத்துக்குத் தள்ளுவான். அவள் ஒழுங்காயிருக்கிறது எங்கே?" என்று ராமு அற்பத்தனமாகச் சொன்னான்.

"சே! சே! அவன் பெண்களெல்லாம் ரொம்ப சாதுக்கள்டா. இது வரையிலும் ஒண்ணும் வழிதப்பிப் போகவில்லை. எவ்வளவு அடக்க ஒடுக்கம்!—நீ என்னடா!"

"அட, அதற்காகத்தான் நான் பண்ணிக்கிறேங்கிறேன்" என்றான் ராமு சிரித்துக்கொண்டு.

"ஆமாண்டா, உனக்குத்தான் கொடுக்கக் காத்திண்டிருக்கான்."

"சரி, வேண்டாம். எந்தக் கிழவன் காலிலேயாவது கட்டச் சொல்லு. எள்ளுருண்டை சாஸ்திரி வந்திருக்கான் தெரியுமோன்னோ? பெண்களுக்காகப் பீராஞ்சிண்டு இருக்கான். இந்தப் பிச்சு அண்ணாசாமிக்கு, 'இப்படிப் பண்றேன், அப்படிப் பண்றேன்' னு சொல்லிட்டு நடுவிலே தான் தரகை அடிச்சிண்டு போகப் போறான். ஒழியட்டும்!" என்று ராமு கணக்கைக் கவனிக்க ஆரம்பித்தான்.

# 2

## கல்யாண ஏற்பாடு

மறுநாள் காலையிலேயே எள்ளுருண்டை சாஸ்திரி அண்ணுசாமி ஐயரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் பார்வைக்கு எள்ளுருண்டைபோல் இருந்ததோடு, அந்தத் தின்பண்டத்திலும் அதிக ஆசை உள்ளவர். ஆனால் அவருடைய உண்மையான பெயர் கணபதி சாஸ்திரி. அந்த வட்டாரத்துக்கெல்லாம் ஜகஜ்ஜாலன் என்று பெயர் போனவர்; அவர் பார்க்காத நகரம் கிடையாது; சுற்றுத கிராமம் கிடையாது: அவர் செய்து வைத்த கல்யாணங்களுக்குக் கணக்கே இல்லை. அண்ணுசாமி ஐயரோடு அவர் திண்ணையில் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண் டிருந்தபொழுது, அவர் சம்பாஷணையைக் கேட்பதற்காகவே சிலர் கூட்டம் கூடினர். சிறிது நேரம் கழித்து, ஏகாந்தமாய்ப் பேச அண்ணுசாமி ஐயரைச் சாஸ்திரி உள்ளே அழைத்துக்கொண்டு சென்றுர். விசாலாக்ஷி சுறுசுறுப்புடன் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள்.

"ஆத்திலே அசௌகரியமாய் இருக்கிறதாலே, உங்களைச் சாப்பிடச் சொல்றத்துக்குக்கூட இல்லை" என்று அண்ணுசாமி ஐயர் மன்னிப்புக் கேட்பதுபோல் சொன்னுர்.

"அதனுலே என்ன? அவாத்துலே சாப்பிடாத போனுல், வெங்கிட்டு வேறே கோபிச்சுப்பான். சரி, நான் சொன்ன விஷயத்தை மட்டும் யோசிச்சுப் பாரும். இன்னும் நான் அவரோடே விவரங்கள் ஒண்ணும் பேசல்லே. அவர் சிறுதாயாரண்டை பிரஸ்தாபிச்சதோடே சரி. இப் போ உங்கள் குழந்தையை நேரிலே பார்த்ததுக்கு அப்புறந்தான் எனக்கு இதை எப்படியாவது முடிச்சுட ணும்னு படறது."

"வயசு நாற்பத்தஞ்சுக்கு மேலே இருக்காதுங்க றேள். ஆனல், பார்வைக்கு எப்படி இருப்பாரோ?" என்முர் அண்ணுசாமி ஐயர்,

'பார்த்தவா நாற்பதுக்கு மேலே மதிக்கமாட்டாள். ரொம்ப உயரமும் இல்லே, ரொம்பக் குட்டையும் இல்லே, சிகப்புலே சேந்தாப்படிதான் சொல்லணும். ரொம்ப சாத்விகம், நல்ல மட்டு மரியாதை; முகத்துலே ராஜகளே வீசும். ஸ்வாமி!—அதெல்லாம் ஒண்ணும் சொல்ல வேண்டியதில்லே. இது முடிஞ்சால், உங்கள் பெண் அதிருஷ்டக்காரிதான். இதோடு உம்ம கஷ்டமும் நிவர்த்திதான். போமேன்! கட்டாயம் கைதூக்கி விட்டுடுவார். ரொம்ப தாராள மனசு; ஏதோ ஸ்வாமி புண்ணியத்துலே அது கைகூடணும்'' என்று சொல்லிக் கொண்டே, குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண் டிருந்த விசாலாக்ஷியைக் கவனித்தார். அவளும், வாய் திறவாமல், விஷயங்களேக் காது கொடுத்துக் கேட்டு, தன் விழிகளால் தகப்பஞரையும் சாஸ்திரியையும் மாறி மாறிப் பார்த்து, அவர்களுடைய முகபாவங்களே உணர முயன்ருள்.

சாஸ்திரி விடை பெற்றுக்கொண்டு போனதும், அண்ணுசாமி ஐயர் பிரசவ அறையண்டை உட்கார்ந்து கொண்டு, தமது மனேவியினிடம் விஷயங்களே நிதானமாக எடுத்துச் சொன்ஞர். உள்ளிருந்தவாறே, அந்த அம்மாள் பலஹீனக் குரலில் சில சம்சயங்களே நிவர்த்தி செய்து கொள்ளும்பொருட்டு, ஏதேதோ கேள்விகளேக் கேட்டுக் கொண்டிருந்தாள். "நமக்குப் போகவரச் செலவெல்லாம் கொடுத்து, கல்யாணப் பொறுப்பையும் பார்த்திண்டு, கையிலேயும் ஆயிரம்ருபாய் வாங்கித் தரேன்னு சொல்ருர்'' என்ருர் அண்ணுசாமி ஐயர்.

"இவ்வளவு தூரம் செய்யணும்ஞல், அதுலே ஏதா வது இருக்கணும். என்ன ஒச்சம், ஊனம் இருக்கோ, யாருக்குத் தெரியும்? அவரை நேரிலே பார்க்காதே

நீங்கள் எதுக்கும் வார்த்தை கொடுக்காதங்கோ'' என்ருள் அவர் மனைவி சீதாலக்ஷ்மி அம்மாள்.

''பின்னே பார்க்காதயா எதையும் செய்வேன். அதுலே சங்கதி என்னன்ருல், அவருக்குச் செலவு ஒண்ணும் கிடையாதாம். பணத்துக்குக் குறைவு இல்லை. அவர் இருக்கிற வீடே முப்பதினுயிரம் பொறுமாம். அதைத் தவிர்த்து, இன்னும் இரண்டு சொந்த வீடுகள் இருக்காம்! சம்பளம் மாசம் ஆயிரம் ரூபாய்! பணத்தை ஏன் அவர் லக்ஷ்யம் பண்ணணும்? அவர் முக்கியமாப் பார்க்கிறது குலம் கோத்திரந்தானும். நம்மாத்துப் பெரிய குட்டிகள் மூணும் புக்காத்துல கௌரவமாய்க் குடித்தனம் செய்யறதை நாலு பேர் சொல்லிக்க மாட்டாளா? அதுவும் தவிர, விசாலாக்ஷியைப் பண்ணிக்கிறதுக்கு அவர் கொடுத்து வச்சிருக்கணு மேன்னு சாஸ்திரிகளே சொல்ருர். அவர் பெண்ணைப் பார்த்துட்டால் நிச்சயம் ஆனுப்போலேதான் என்கிருர்.''

''அவர் இங்கே வருராமா?'' என்று ஆவலோடு சீதாலக்ஷ்மி கேட்டாள்.

''அவருக்கு எவ்வளவோ காரியங்கள்! நினைச்சாப் போல் வர முடியாதாம். புண்ணியாவாசனமெல்லாம் நடந்தப்புறம், என்னையும் விசாலாக்ஷியையும் சாஸ்திரிகள் பட்டணத்துக்கு அழைச்சுண்டு போறேன்னு சொல்ருர். போகவரச் செலவை அவரே கொடுத்துடுவார். இது எல்லாத்துக்கும் சௌகரியமாய் இருக்கும்னு தோண்றது. நீ என்ன சொல்றே?''

''சரி, அப்படியே செய்யுங்கோ! ஒரு விதமாய் வார்த்தை கொடுக்கிறதுக்கு முந்தி, நாலையும் நன்ன யோசிச்சுப் பாருங்கோ. அதுக்கு மேலே நான் என்ன சொல்லப்போறேன்'' என்று அவள் சொன்னபொழுது, அவள் தொனியில் ஒலித்த துக்கத்தை விவரிக்க முடியாது.

"பின்னே, யோசிக்காதயா செய்வேன்? குழந்தையைப் பார்த்தால் அவர் விடமாட்டார்னு சாஸ்திரிகள் சொல்றூர்.'' பிறகு குரலைத் தாழ்த்தி, "கையிலே முழுசாய் ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொடுத்திடறேன்னு சொல்றூர்: அதுலேயிருந்து காலணுக்கூடத் தொட வேண்டியதில்லையாம். எனக்கு என்னன்னுல், அப்படியே அதைக் கொடுத்து, 'காளிப்பறம்பை'யைப் போக்கியத்துலேயிருந்து திருப்பிண்டுடலாம்னு. சொந்தமாய்ச் சாகுபடி செஞ்சால் ஐம்பது கலம் கூடக் காணும். தங்கமான நிலமாச்சே; அதோடே, நம்ப கஷ்டமே நிவர்த்தியாயிடும். சம்பந்தம் ஏற்பட்டுட்டால், இன்னும் எவ்வளவோ உபகாரம் செய்வார்னு சொல்றூர்.''

"சுவாமி என்ன என்ன நினைச்சுண்டு இருக்காரோ!" என்று சீதாலக்ஷ்மி பரத் தியானமாகச் சொன்னுள்.

"எல்லாம் நல்லதைத்தான் செய்யப்போறூர்: சோதிச்சது போராதா? சரி, நான் போய் ஸ்ரீநிவாசம் பிள்ளையைப் பார்த்துட்டு வறேன். ஒரு வாழைத் தார் தரேன்னு சொன்னூர்'' என்று சொல்லிவிட்டு, அண்ணுசாமி ஐயர் வெளியே சென்றூர்.

விசாலாக்ஷி வாய் திறவாமல், வீட்டு வேலையைச் செய்துகொண்டிருந்தபோதிலும், அவள் மனமெல்லாம் தன் பெற்றோர்கள் பேசிக்கொண்ட விஷயத்திலேயே சுழன்றுகொண்டிருந்தது. தன்னை அறியாமல் அவளுக்கு ஓர் உற்சாகம் உண்டாயிற்று. தனக்குக் கணவராகப் போகிறவருக்கு ஆயிரம் ரூபாய் சம்பளமா! ஆயிரம் ரூபாயை ஒரு தரங்கூட அவள் சேர்ந்தாற்போல் பார்த்ததில்லையே! அவ்வளவு பெரிய மனிதரோடு எப்படிப் பழகுவது! இதை நினைத்தபோது ஒருவிதமான பயமும் உண்டாயிற்று. ஆனுல் தன் கல்யாணத்தால் அவர்களுடைய கஷ்டங்கள் எல்லாம் நிச்சயமாய்த் தீர்ந்துவிடும் என்று அப்பா சொன்னுரே. இதைவிட அவளுக்குப் பரந்த இந்த உலகில் என்ன வேண்டும்? தன் தாய்தந்தையர்கள் சுகப்

படுவதற்காக, எந்தக் கஷ்டத்தைத்தான் அவள் அநுப விக்கக்கூடாது? அப்பாவையும் அம்மாவையும் மனம் குளிர வைக்கும் பாக்கியம் அவளுக்குக் கிடைக்க வேண்டுமே! முதலில் சற்றுப் பயமாய்த்தான் இருக்கும்: பிறகு எல்லாம் சரியாய்ப் போய்விடும். மேல்தெருக் கனகம் இல்லையா? அவளும் இரண்டாவதாகத்தான் வாழ்க்கைப்பட்டாள். அவளுக்கு இப்பொழுது ஏற்பட்ட பெருமையைச் சொல்லி முடியாதே! தன் தம்பியைப் படிப்பிக்கத் தன்னிடமே வைத்துக்கொண்டு விட்டாளே. அவளால் அவளுடைய பெற்றோர்களுக்கு எவ்வளவு அநுகூலம்! தனக்கும் அவ்விதமான சந்தர்ப்பம் கிடைக்க வேண்டுமென்று ஏங்கினாள். 'சுவாமி. எப்படியாவது இந்தக் கல்யாணத்தை முடித்துவைக்க வேண்டும்' என்று அவள் பிரார்த்தித்தாள். மனப் பிடித்தம் என்னவோ, கல்யாணத்தின் பலாபலன்கள் என்னவோ, அவளுக்கு ஒன்றும் தெரியாது. தெரிந்துகொள்ளவும் அவள் இச்சைப்படவில்லை. அவள் மனத்தை உறுத்திய விஷயம் ஒன்றே. எப்படியாவது தன் பெற்றோர்கள் வறுமையி லிருந்து நீங்கவேண்டியதுதான். அதற்காக அவள் வேண்டுமானால், தன் உயிரையும் சமர்ப்பணம் செய்யத் தயாராக இருந்தாள்!

பேச்சுத் தவறாமல் ஒரு வாரத்துக்குப் பிறகு, எள்ளுருண்டை சாஸ்திரி வந்து சேர்ந்தார்.

அண்ணுசாமி ஐயர், தமது மனைவி சீதாலக்ஷ்மியின் அபிப்பிராயங்களையும் ஆலோசனைகளையும் ஒரு தடவைக் குப் பத்துத் தடவையாகக் கேட்டுக்கொண்டார். தன் மன நிலைமையைத் தானே அறியாதவள்போல் அவள் கஷ்டப்பட்டாள். சம்பந்தத்தை உத்தேசிக்கும்பொழுது, உடனே முடித்துவிட வேண்டும் என்ற ஆத்திரம் இருந் தது. ஆனால்,—மாப்பிள்ளை பார்வைக்கு மிகவும் குரூபி யாகவும், வயதில் அதிகம் முதிர்ந்தவனாகவும் இருந்தால்

என்ன செய்வது? இவ்விஷயத்தை மட்டும் நன்ருய்க் கவனிக்கும்படி பலவாறு தன் கணவருக்கு அவள் வற்புறுத்திச் சொன்னுள். தானும் சென்னைக்குப் போகவேண்டும் என்ற ஆசை அவளுக்கு இருந்தது. ஆனுல், பல காரணங்களால் அது சாத்தியப்படவில்லை. பிறகு, அவளை ஒருவிதமாகச் சமாதானப்படுத்திவிட்டு, அண்ணுசாமி ஐயர் விசாலாக்ஷியை மட்டும் அழைத்துக் கொண்டு சாஸ்திரியுடன் சென்னைக்குப் புறப்பட்டார்.

முந்தியே ஏற்பாடு செய்தவாறு, சாஸ்திரி நேராகக் கல்யாணம் செய்துகொள்ளப்போகும் ஞானகிராமையர் வீட்டுக்கு அவர்களை அழைத்துக்கொண்டு போகாமல், புரசைவாக்கத்தில் இருந்த அவருடைய சிறிய தாயார் காமாக்ஷி அம்மாள் வீட்டுக்கு அழைத்துச் சென்ருர். அந்த அம்மாள் அவர்களை மிகவும் மரியாதையுடன் வரவேற்ருள். சுமார் அறுபத்தைந்து வயதுள்ள விதவை. ஆனுல் கட்டுமஸ்தான சரீரம். இன்னும் ஒரு பல்கூட ஆடவும் இல்லை, தேயவும் இல்லை. வாக்சாதுரியத்துக்கும் குறைவே இல்லை. அறியாதவர்கள், அவள் பிராயத்தைப் பத்து வயது தள்ளியே மதிப்பிடுவார்கள்.

"ஞானகிராமன் கல்யாணமே வேண்டாம்னு ஒரே பிடிவாதமாய் இருக்கான்! ஆனுல் சாஸ்திரிகள் சொன்னதுலேயிருந்து, எனக்கு எப்படியாவது இதை முடிச்சுடணும்னு பட்டுடுத்து" என்று அவள் பொதுவாகச் சொன்னுள்.

"ஏன், நான் சொன்னதுலே ஏதாவது பிசகு இருந்தால் சொல்லுங்களேன்" என்ருர் சாஸ்திரி.

"ஒரு பிசகும் இல்லை. குழந்தை பசு சாதுவாய் இருக்காள். அவள் சாத்விகத்துக்குத் தகுந்தாப்போலத் தான் பகவானும் அனுக்கிரகம் பண்ணப் போருர். எங்கள் ஞானகிராமன் எவ்வளவு நல்லவனே, நான் சொல்லிக்கப்படாது. சாயங்காலம் பார்க்கிறபோது, உங்க

ளுக்கே தெரியும்: ஆனல் அவன் பெண்ணும் பிள்ளையும் அவனைக் கொஞ்சங்கூடக் கொள்ளல்லே; எல்லாம் தாயைக் கொண்டிருக்குகள்."

"என்னம்மா, நீங்கள் சொல்றது? அப்படி அவாள் ஒண்ணும் துஷ்டாள் இல்லையே!" என்று சாஸ்திரி குறுக்கிட்டார்.

"அட ராமா! நான் துஷ்டாள்னு சொல்லலையே! இந்தக் காலத்துக் குட்டிகளே ஒரு தினுசு. எல்லாம் அலக்ஷ்யம், வாய்த்துடுக்கு. சின்னவாள் பெரியவாள் என்கிற மரியாதை கிடையாது. அவ்வளவுதானே ஒழிய மத்தப்படி ஒண்ணும் கிடையாது. மகா கோழை மனசாக்கும்! இரண்டும், யார் எதைக் கேட்டாலும் அப்படியே எடுத்துக் கொடுத்துடும். அந்தத் தாராளத்துக்கெல்லாம் அப்பனைக் கொண்டிருக்குகள். பிள்ளைதான் மூத்தவன், இப்போ சீமையிலே பெரிய டாக்டர் பரீக்ஷைக்குப் படிச்சிண்டிருக்கான், — இதையெல்லாம் சாஸ்திரிகள் சொல்லியிருப்பாரே!" என்று அண்ணசாமி ஐயரைப் பார்த்துக் காமாக்ஷி அம்மாள் சொன்னள்.

"எல்லாம் சொன்னர், அம்மா! பெண்கூட டில்லியிலே இருக்கிறதாகவும், அவள் புருஷனுக்குக்கூடப் பெரிய உத்தியோகமின்னும் சொன்னர்" என்ருர் அண்ணசாமி ஐயர்.

"தங்கத்து ஆம்படையானுக்கு ஐந்நூறு ரூபாய் சம்பளம். ரெண்டாயிரம் வரையிலும் ஆகும்னு சொல்ருள். அதெல்லாம் ஒண்ணும் குறைவில்லே. நாராயணன் மட்டும் சோடையா? இங்கே பட்டணத்துலே இருக்கிற டாக்டர் பரீக்ஷை எல்லாம் பாசு பண்ணி ஆயிடுத்து. வேணும்னல் இங்கேயே பெரிய உத்தியோகம் கொடுத்திருப்பா. ஆனல் - அது என்னமோ சொல்ருளே, எனக்குத் தெரியல்லேயே - இந்த 'ஆபரேஷன்' பண்றதுலே

சகலத்தையும் தெரிஞ்சுண்டு வந்துடணும்னு சீமைக்குப் போயிருக்கான். பகு புத்திசாலி. அவன் எல்லாரையும் மிஞ்சிடுவான்போல் இருக்கு. மாசம் ஆயிரக் கணக்கிலேதான் சம்பாதிக்கப்போருன்."

"எல்லாம் பூர்வ ஜன்மத்துலே செஞ்சிருந்ததன் பலன்" என்று அண்ணுசாமி ஐயர் வேதாந்தமாகச் சொன்ஞர்.

"அதுலே, பாயிண்டு என்னன்ஞல், அண்ணுசாமி ஐயர்! தங்கம்மாளும் நாராயணனும் அவா அப்பா கிட்டேயிருந்து ஒண்ணும் எதிர்பார்க்க மாட்டாள். அவாளே நாலு பேருக்குச் செய்யறத்துக்குச் சக்தாளாய் இருக்கிறபோது, ஒருத்தர் தயவு அவாளுக்கு என்னத்துக்கு ஐயா—அட, அப்பாவாத்தான் இருக்கட்டும், வேறு யாராய்த்தான் இருக்கட்டுமே!"

"சாஸ்திரிகளே, சரியாச் சொன்னீர்!" என்று காமாக்ஷி அம்மாள் ஆமோதித்தாள். பிறகு, அண்ணுசாமி ஐயரை நோக்கி, "ஸ்வாமி புண்ணியத்துலே, ஜானகிராமன் சம்மதிச்சு இந்தக் கல்யாணம் முடிஞ்சு, இந்தக் குழந்தை வயத்துலேயும் ஒரு புழு உற்பத்தியாஞல், அவள்தான் பாக்கியசாலி; இதுக்கு ஜானகிராமனும் கொடுத்து வச்சிருக்கணும்."

"நீங்கள் 'பிளான்' போட்டபடியேதான் நடக்கப் போறது. ஏன் கவலைப்படறேள்?" என்ருர் சாஸ்திரி.

இந்தச் சம்பாஷணையை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த விசாலாக்ஷிக்கு ஏதோ ஒரு கனவு உலகில் சஞ்சரிப்பதுபோல் இருந்தது. அன்றைத் தினம் அவளாலே ஊகிக்க முடியாத ஒரு பிரம்மாண்டமான மாறுதல் அவள் வாழ்க்கையில் புகப்போவதுபோல் காணப்பட்டது.

தன் தகப்பனுர் எப்பொழுதுமே 'வாய் இல்லா'ப் பூச்சி. இப்பொழுது காமாக்ஷி அம்மாளைக் கண்டு, ஒரு

பெட்டிப் பாம்புபோல் அவர் அடங்கிக் கிடப்பதைப் பார்த்தால், அவளுக்கு எவ்விதத்திலும் தைரியமாவது உற்சாகமாவது உண்டாகவில்லை.

ஸ்நானபான ஆகாராதிகள் முடிந்ததும், காமாக்ஷி அம்மாள் விசாலாக்ஷியை அன்புடன் அழைத்து, தலை வாரிப் பின்னல் போட்டாள். பிறகு, இருந்ததைக் கொண்டு அவளை அலங்கரித்தாள்.

''நகை, நட்டு யாருக்கு?—அழகு இல்லாதவாளுக் குன்னு?'' என்று சொல்லும்போது, காமாக்ஷி அம்மாளின் உள்ளப் பூரிப்பு அவள் முகத்திலும் தாண்டவம் ஆடிற்று; இதைக் காண, விசாலாக்ஷிக்கு ஏதோ ஒரு மன மயக்கம் ஏற்பட்டது, ஒரு சமயம், தங்கள் கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்துக்கு இரட்டை மாட்டு வண்டியில் பிரயாணம் செய்தபொழுது, வண்டி குடை கவிழ்ந்து, அவள் கீழே உருண்டு, திக்கு முக்காடித் திகைத்த ஞாபகம் இப்பொழுது வந்தது.

ஆனால், இரண்டுக்கும் எவ்வளவு வித்தியாசம்! கன்னிவாய்க்காலையும் காவேரியையும் போல் அல்லவா இருந்தன! அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. தன்னைக் காப்பாற்றும்படியும் தைரியம் கொடுக்கும்படியும் அவள் மனம் அடிக்கடி தன் கிராம தேவதையாகிய அங்காளம்மனை வேண்டிக்கொண்டது. சமுக மனப்பான்மை எவ்வளவோ மாறுதல் அடைந்த இன்றைத் தினத்திலும் விசாலாக்ஷியைப் போன்ற பேதைகள் இருக்கும்பொழுது, இருபது வருஷங்களுக்கு முன் அவள் அப்பாவியாய்த் தவித்ததில் என்ன ஆச்சரியம்?

விசாலாக்ஷி முதலானோர் வந்ததுமே ஜானகிராம ஐயருக்குத் தகவல் தெரிவித்திருந்தது. அன்றைக்குச் சர்க்கார் ஆபீஸுகள் மூடப்பட்டதால், ஜானகிராம ஐயர் வீட்டிலேதான் இருந்தார். பிற்பகலில், காமாக்ஷி அம்மாள், தான் முன்னதாகவே சென்று அவர்களுக்கு

மோட்டார் வண்டியை அனுப்புவதாயும், டிரைவர் அவர்களுக்கு யாதொரு கஷ்டமும் இன்றி ஜானகிராம ஐயர் வீட்டுக்கு அவர்களை அழைத்துக் கொண்டுவந்து விடுவான் என்றும் சொல்லி, விடை பெற்றுக்கொண்டு சென்றுள்.

# 3

## ஜானகிராம ஐயர்

ஜானகிராம ஐயருடைய வீடு பழைய காலத்துக் கட்டிடம். ரெயில் வண்டியைப்போல் ஒன்றன்பின் ஒன்ருகப் பல கட்டுகள் இருந்தன. ஆனல் வலுவுக்கு ஒன்றும் குறைவு இல்லை. மேலே நான்கு மேடைகள் கூடக் கட்டலாம். அதனுல், மொட்டை மாடியாக இருந்த இடத்தில், தற்காலத்துச் செளகரியத்துக்கு ஏற்றவாறு, காற்ருேட்டமாகச் சில அறைகள், ஒரு பெரிய ஹால், மூன்று 'வெராண்டா'க்கள் முதலியவற்றை அவர் கட்டிக்கொண்டார்; சாப்பாட்டு வேளை தவிர்த்து. மற்ற நேரத்தை எல்லாம் அவர் அநேகமாய் மேடைமீதே கழித்து வந்தார். வாசற்புறம் ஒரு பாரிஜாத மரம் இருந்தது. ஓங்கி வளர்ந்திருந்த இரண்டு தென்னைகள் வீட்டின் புராதனத்துக்கு அறிகுறிகளாக விளங்கின. வீட்டுக்கு எப்பொழுதும் பச்சைக் காவியையே அடித்து வந்ததால், அதற்குப் 'பச்சை வீடு' என்ற பெயர் தெரு ஜனங்களால் வைக்கப்பட்டது.

மேடையில் ஹாலில், மின்சாரப் பங்காவைப் போட்டுக்கொண்டு, ஜானகிராம ஐயர் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். எதிரில் மேஜையின்மீது இருந்த காபிப் பாத்திரங்களைச் சமையற்காரன் எடுத்துக் கொண்டிருந்தான். ஐயரின் திருஷ்டி சுவரில் மாட்டி

யிருந்த கடிகாரத்தின்மீது சென்றது. மணி மூன்று. சிற்றம்மை எந்த நிமிஷத்தில் வேண்டுமானாலும் வரலாம். அவள் வந்தால், வேலை செய்தாற்போல்தான்! பக்கத்தில் முக்காலி மீதிருந்த ஆபீஸுக் கட்டுகளோ, எல்லாம் முக்கியமானவை. மறுநாள் ஆபீஸுக்குப் போவதற்கு முன் ஒரு வழியாக ஒழிக்க வேண்டியவை. இருந்தாலும் ஒரு மனுஷன் எவ்வளவுதான் உழைக்கிறது! ஆபீஸ் இல்லை என்ற பெயரே ஒழிய, வேலை மட்டும் ஒன்றுக்கு இரண்டு மடங்கு. உள்ளூறச் சபித்துக்கொண்டு, அவர் இடத்தை விட்டு எழுந்து, ஹாலைத் தாண்டி வெளியே சென்றார். மனத்துக்குக் குழப்பமாவது சோர்வாவது ஏற்படும்பொழுதெல்லாம் அவர் மொட்டை மாடியில் உலாவுவது வழக்கம். ஹாலிலிருந்து வீட்டுக் கோடி வரையிலும், அறுபது அடி நீளத்துக்கு மொட்டை மாடி தான். அதற்கப்பால், சிறிது காலி நிலம் இருந்தது. அங்கே பிரம்மாண்டமான மாமரம் ஒன்று, நெட்டிலிங்க மரம்போல், வானத்தைத் தொட யத்தனிப்பதுபோல் வளர்ந்திருந்தது. அதன் நிழல் அவ்விடத்தையெல்லாம் மூடிக்கொண் டிருந்ததால், வேறு எந்தச் செடிகளும் அங்கே தலையெடுக்க முடியவில்லை. சுவர் ஓரத்தில் ஒரு புளிச்சைக் காய்ச் செடி மட்டும் சிறிது ஜீவகளையோடு இருந்தது. மாமரத்தில் பல நாரைகள் வாசம் செய்து வந்தன. சமீபத்தில் இருந்த ஒரு மசூதியைச் சேர்ந் தாற்போல், நவாப் காலத்தில் கட்டப்பட்ட ஒரு விஸ்தார மான தடாகம் இருந்தது. பகலெல்லாம் இங்கே இரை தேடுவதும், இரவில் மரத்தின்மீது தங்குவதும் அந்த நாரைகளுக்கு வழக்கம். சில வேளைகளில் அவை இறக்கை களை அடித்துக்கொண்டு கொக்கரிப்பது மிக உபத்திரவ மாக இருக்கும். ஆனால் மாமரத்தை வெட்டினாலொழிய அவைகளைத் துரத்துவது அசாத்தியமாய் இருந்தது. "எந்தக் காலத்தில் வைத்த பயிரோ, அந்தப் பாவத்தை

நாம் கட்டிக்கொள்வானேன்?'' என்று அவர் அந்த எண்ணத்தை விட்டுவிட்டார்.

நிதானமாய் நடந்துகொண் டிருந்தபொழுது, கைப்பிடிச்சுவர் ஓரமாய், கித்தான் கிழிந்து மழையில் நனைந்து, வெயிலில் உலர்ந்தவாறு கிடந்த ஒரு சாய்வு நாற்காலி அவர் கண்ணில் பட்டது. உடனே பழைய ஞாபகங்கள் எல்லாம் ஒருங்கே அவர் மனத்தில் குவிந்தன. என்ன ஆச்சரியம்! அவள் இறந்து இன்னும் மூன்று மாதங்கள் கூடப் பூர்த்தியாகவில்லை. அதற்குள் அவளோடு வாழ்ந்ததே ஒரு கனவுபோல் ஆகிவிட்டதே! படுக்கையில் விழும் வரையில், அவள் உட்கார்ந்துவந்த நாற்காலி அல்லவா அது? 'நோயாளி உபயோகித்ததை மற்றவர் யாரும் உபயோகிக்கக் கூடாது' என்ற காரணத்தால் அல்லவா அதற்கு அந்தக் கதி வந்தது? இவ்வுலகில் நோய் யாருக்குத்தான் வராது? பார்க்கப்போனால் இவ்வுலகுக்கு யார்தான் அவசியம்? ''மங்களம், உன்னை விட்டு நான் எப்படி உயிரோடு இருப்பேன்!'' என்று அவர் புலம்பவில்லையா? ஆனால் அவளுடைய மரணத்தால் எது நின்றுவிட்டது? வாஸ்தவந்தான்; சில நாள் மனம் தவித்தது - இப்போதும் நினைத்தால் 'பகீர்' என்றுதான் இருந்தது - ஆனால், எந்த விஷயத்திலும் ஒரு மாறுதலையும் காணோமே! வழக்கம்போல் வேளாவேளைக்கு ஆகாரந்தான். ஆபீஸுக்குப் போய்க் குனிந்ததலை நிமிராமல் உழைப்பது எப்பொழுதும் மாதிரியே. இருந்தாலும் அந்தப் பாவி ஆதியிலிருந்தே சற்று ஜாக்கிரதையாய் இருந்திருந்தால், இந்த விபத்து நேர்ந்திருக்காதே! மருந்தைச் சாப்பிடும்படி எவ்வளவு அடித்துக்கொண்டார்? அவள் சொன்ன பேச்சைக் கேட்டாளா? அவர் வார்த்தையை யார்தான் மதித்தார்கள்? எல்லார் சொற்படியும் அவர் கேட்க வேண்டும். ஆனால் அவர் சொற்படி யாரும் ஒரு முறையாவது கேட்கக் கூடாது. அது அவர் செய்த பாவம்.

ஜானகிராம ஐயர் ஆபீஸ் வேலையையும் அசட்டை செய்து, முன்னும் பின்னுமாக உலாவ ஆரம்பித்தார். குள்ளமான பேர்வழி; ஆனல் கட்டுமுட்டான சரீரம். உபகாரச் சம்பளம் பெறுவதற்கு இன்னும் இரண்டு வருஷங்களே பாக்கி இருந்தபோதிலும், காலத்தின் ஓட்டம் அவரை அதிகம் பாதித்ததாகத் தெரியவில்லை; ஒட்டக் கத்தரித்திருந்த தலையில் நரை இங்கும் அங்கு மாகத் தோன்றியது; ஆரோக்கிய லக்ஷ்மி அவரிடம் பரி பூர்ண கடாக்ஷத்தை வைத்திருந்தாள் என்பதும் நன்கு புலப்பட்டது. சிவப்பு நிறமாக இருந்தபோதிலும் முகத் தில் ஒருவிதமான வசீகரமும் காணப்படவில்லை. கீறின கோட்டுக்கு மீருமல், இட்ட கட்டளையைப் பயபக்தி யுடன் எள்ளளவும் பிசகின்றி நிறைவேற்றுவதே அவர் வாழ்க்கையின் லட்சியம்போல் தோன்றியது. இருபத் தைந்து ரூபாயிலிருந்து எண்ணூறு வரையிலும் அவரைத் தூக்கிவிட்டது அவருடைய பணிவும் தாழ்மையுமேதான். எவ்வளவோ மேல் அதிகாரிகள் அவரைக் கோபித்துக் கொண்டதும் உண்டு; தாறுமாறுமாய்ப் பேசினதும் உண்டு. ஆனல், எதற்கும் அவர் வாயைத் திறந்தது இல்லை. இந்தப் பணிவின் பலனுக, 'தோட்டியிலிருந்து தொண்டைமான்' வரையிலும், அவர்மீது ஒருவிதமான 'பரிதாபம்' ஏற்பட்டது. அவரோடு பால்யத்தில் ஏக காலத்தில் வேலையில் அமர்ந்த சேவகன் கோவிந்தராஜுலு அடிக்கடி சொல்வதுபோல், அவருக்குக் கோபம் என்பது இன்னதென்று இதுவரையிலும் தெரியாது. இன்றைக் கும் தமக்கு ஏதாவது விஷயம் ஒரு குமாஸ்தாவினிட மிருந்து தெரியவேண்டுமானல் அவர் தாமே அவன் இடத் துக்குச் சென்றுவிடுவார். பால்ய முறுக்கினல் தமக்குக் கீழ்ப்படிந்த உத்தியோகஸ்தன் எவனுவது கொடுத்த வேலையைச் செய்ய மறுத்தால், 'சிவனே' என்று அவர் அதையும் தாமே கவனித்துக்கொள்வார். பிறர் மனத்தை

எக்காரணத்தினுலும் புண்படுத்தக் கூடாது என்பது அவருடைய எண்ணம். ஆனுல், உண்மையில் சுபாவத்திலேயே அவருக்கு அபிப்பிராய பேதத்தின் மூலம் பிறர் சொல்லுக்காவது ஏவலுக்காவது மறுத்து நடக்கும் சக்தி மிகக் குறைவு. கொஞ்ச நஞ்சம் இருந்ததும், சர்க்காருக்கு இருபத்தெட்டு வருஷம் 'மாடல்' ஊழியனுகச் சேவை செய்ததனுல், அடியோடு நசித்துவிட்டது.

கடிகாரம் மணி அடித்தது. மூன்றரை ஆகிவிட்டது. சரி, இனி அன்றைக்கு வேலைசெய்ய முடியாதென்று தெரிந்தது. சிற்றம்மையோடு பேசத்தான் சரியாய் இருக்கும். அவள் ஒருத்தி! சும்மா இருக்கமாட்டாள். எதையாவது கிளறிவிட்டுக்கொண்டே இருப்பாள்; ஆனுல், அவள் செய்வதெல்லாம் தம்மீதுள்ள பூர்ண அபிமானத்தால்தான் என்பது அவருக்குத் தெரியும். இருந்தாலும், இந்த மறு விவாகத்தை அவள் ஏன் கிளப்பவேண்டும்? பேசினுல், சாஸ்திரத்தைக் கொண்டுவருவாள். அதையும் சற்று நம்பத்தான் வேண்டியிருந்தது. இருந்தாலும்— அவ்வளவு திடீரென்று பெண்ணைக்கூடவா அழைத்துக் கொண்டு வந்துவிட வேண்டும்? அவளோடு வாதாடுவது கஷ்டம். ஏதோ எல்லாம் தர்மசங்கடமாய் இருந்தது. அவர் மனம் இவ்வாறு குழம்பிக்கொண்டு இருந்த பொழுதே, "ஜானகிராமா, எங்கே இருக்கே?" என்று அவளுடைய குரல் கணீர் என்று கேட்டது.

ஜானகிராம ஐயர் பணிவுடன், தாம் மாடியில் இருப்பதைச் சிற்றம்மைக்குத் தெரிவித்தார். இரைக்க இரைக்க மாடிப் படிகள் ஏறி, காமாக்ஷி அம்மாள் மேலே வந்தாள். ஒரு நாற்காலியில் அமர்ந்துகொண்டே, "ஏண்டா உடம்பைத் திறந்து போட்டிண்டு இருக்கே? ஒரு சட்டையைக் கிட்டையைப் போட்டுக்கப்படாதோ? சரி, அவாள் அங்கே காத்திண்டு இருக்காள். உன் டிரைவர் எப்போதான் வரப்போருன்?" என்ருள்.

"இன்னிக்கு அவனுக்குப் பண்டிகை, சித்தி. நேத்தே நான் சொன்னேனே. இல்லாதபோனல் உனக்கு வண்டியை அனுப்ப மாட்டேனு?''

"வண்டி வரும்னு அவாளுக்குச் சொல்லிட்டு வந்திருக் கேனடா?''

"அதனுலே என்ன, அவன் நாலரை மணிக்கெல்லாம் வந்துடறேன்னு சொல்லி இருக்கான். வருஷத்துக்கு ஒரு நாள், பாவம், கட்டாயம் வந்திடுவான். பேச்சுத் தவற மாட்டான்.''

"சரி, வந்தவுடனே அனுப்பிச்சுடு. பெண்ணைப் பார்த் தேன்—இதோ பாரு, அந்தப் பெண்ணு உங்காத்துக்கு வரதுக்கு நீ எவ்வளவோ தபஸு பண்ணி இருக்கணும். முகத்துலே களை சொட்டறது; குணமோ அமிருத குணம்—''

"நீ என்ன சித்தி, இதெல்லாம் ஒன்றும் வேண்டாம் னுல் கேட்க மாட்டேங்கறே!'' என்று ஜானகிராம ஐயர் முகத்தைச் சுளித்து வேதனையுடன் சொன்னுர்.

"வேண்டாமாவதுடா! உனக்கு என்னடா தெரியும்? உங்கப்பா சாகறப்போ வயசு தொண்ணூத்திரெண்டு, எங்கள் கும்பல் மட்டும் லேசா? உங்கம்மா ஒருத்திதான் அறுபத்திஞலு வயசுக்கே அல்பாயுசாய்ப் போனுள்—'' இதைக் கேட்க ஜானகிராம ஐயருக்குப் புன்முறுவல் வந்தது.

"சிரிக்கிறயே!'' என்று சொல்லிக்கொண்டு அவள் தொடர்ந்தாள்.

"இன்னும் நாற்பது வருஷம் வீட்டுக்கு ஒரு நாதி இல்லாதே நீ காலத்தைத் தள்ளப்போறயா? இல்லாத போனுல், அந்த சீனிவாசக் கிழவன் எவளோ ஒருத்தியைக் கட்டிண்டு சந்தி சிரிக்கிருனே, அதுமாதிரி இருக்கப் போறயா? சாஸ்திரம் எல்லாம் பேசறயே. பார்யை இல் லாத போனுல், நல்லது பொல்லாது எதுக்கும் பலன்

கிடையாதுன்னு நீயே சொல்றயே! அப்பா அம்மா தெவசங்கூட நிறக்காதூன்னயே அன்னிக்கு; இதுக்கு என்ன சொல்றே?''

"எனக்கு ஒண்ணும் புரியல்லே'' என்றூர் ஜானகிராம ஐயர். அது சத்தியமான பேச்சு. இந்து மதத்தில் காலக் கிரமத்தில் நுழைக்கப்பட்டிருந்த குயுக்திகளுடன் கூடிய பலவித ஆசாரங்களில் அவருக்கு நம்பிக்கை உண்டு. மறு விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்ற அவா அவருக்கு இல்லை. ஆனால் சிற்றம்மையின் போதனைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாமல் தவித்தார். அவைகளில் சிலவற்றை அவர் ஆமோதிக்கும்படியாகவும் இருந்தது. இருவருக்கும் வெகு நேரம் வாக்குவாதம் நடந்துகொண்டே இருந்தது. விவாதத்தில் காமாக்ஷி அம்மாளின் கையே ஓங்கி இருந்ததென்று சொல்ல வேண்டியதில்லை.

கடைசியாகச் சிற்றம்மையின் வார்த்தைக்கு மீறி நடக்கச் சக்தியற்றவராய், "அப்போ, பண்ணிக்கணும்னு சொல்றயா?'' என்று ஜானகிராம ஐயர் தாழ்மையுடன் கேட்டார்.

''அதிலே சந்தேகம் வேறயா? பண்ணிக்கத்தாண்டா வேணும்! உனக்கு நல்லது பொல்லாது என்ன தெரியும்? நீ உண்டு, உன் ஆபீஸ் உண்டு. அதோடே சரி. எதையும் சூட்டோடு சூடாய்ச் செஞ்சால்தான் பிரயோஜனம் உண்டு. வீட்டைத் தேடிவந்த லக்ஷ்மியை அடிச்சுத் துரத்துவாளோ! நான் இதை முடிச்சிப்பிட்டுத்தான் வேறே காரியம் பார்க்கப்போறேன். இன்னிக்கி எட்டாம் நாளே முகூர்த்தம் இருக்குன்னு சாஸ்திரிகள் சொல்றூர். இரண்டாம் பேருக்குத் தெரியாமே, நாலு பிராமணுளை வச்சிண்டு செஞ்சுட்டால் போச்சு'' என்று அவள் சொல்லிக்கொண் டிருந்தபொழுதே, டிரைவர் வந்தான். உடனே புரசைவாக்கம் சென்று 'எள்ளுருண்டை சாஸ்திரி

முதலானவர்களை அழைத்துக்கொண்டு வரும்படி அவள் கட்டளையிட்டாள்.

அரை மணி நேரத்துக்கெல்லாம் மோட்டார் வண்டி வந்து சேர்ந்தது. சாஸ்திரி முதலில் இறங்கி, அண்ணு சாமி ஐயரையும் விசாலாக்ஷியையும் நிதானமாக இறக்கிஞர். விசாலக்ஷிக்கு உள்ளூர ஒருவிதச் சமாதானமும் ஏற்படவில்லை. குனிந்த தலையுடன் பட்டிக்குத் துரத்தப்படும் செம்மறியாடு போல் தந்தையைப் பின்பற்றிஞள். காமாக்ஷி அம்மாளின் ஆரவாரத்துக்கு அளவே இல்லை. ஜானகிராம ஐயர் அண்ணுசாமி ஐயரையும் விசாலாக்ஷியையும் பார்த்துப் பார்த்துத் திகைத்தார். எல்லாரும் மாடிக்குச் சென்றனர். விசாலாக்ஷி, நாற்காலியில் உட்கார நாணத்தால் நடுங்கியபோதிலும், காமாக்ஷியம்மாள் அவளை ஜானகிராம ஐயரின் பார்வைக்கு நேராக ஒன்றில் அமர்த்தி வைத்தாள்.

விசாலாக்ஷயின் வேதனையைச் சொல்லி முடியாது. கடைக்கண்ணுல் அடிக்கடி தன் தந்தையின் முகத்தைப் பார்த்தாள். ஜானகிராம ஐயரோ, விசாலாக்ஷியைப் பார்த்தது முதல் ஏதோ ஆலோசனையில் ஆழ்ந்தவாறு புலப்பட்டார். சம்பாஷணையில் கலந்துகொண்டதுபோல் காணப்பட்ட போதிலும் அவர் மனம் எங்கெங்கோ சஞ்சரித்துக்கொண் டிருந்தது. சிற்றம்மையின் அபிப்பிராயங்களிலும் நியாயம் இருப்பதாகத் தோன்றியது. இந்தத் தருணத்தில் தற்செயலாய்த் தலையை நிமிர்த்திய விசாலாக்ஷியின் விழிகளைக் காணவே அவருக்குத் தம்மையும் அறியாமல் ஒரு 'சபலம்' ஏற்பட்டதென்றே சொல்ல வேண்டும். ஆனுல் ஜானகிராம ஐயரின்மீது வீணுகக் குறை கூறக் கூடாது. அவர் வாழ்க்கையில் என்றும் நெறி தவறி நடந்தவரல்ல. மறு கணமே அவள் தன் மகளினும் சிறியவள் என்பதை உணர்ந்தார். அவர் மனக் குழப்பத்தின் ஸூட்சுமங்களெல்லாம் காமாக்ஷியம்மா

ளுக்குத் தெரியாவிட்டால், வேறு யாருக்குத் தெரியும்? அவள் எழுந்து, எள்ளுருண்டை சாஸ்திரியைத் தனியாக அழைத்துச் சென்று, ரகசியமாகச் சில விஷயங்களைச் சொன்னுள். பிறகு, அன்று இரவு அவர்கள் எல்லாரும் அங்கே தங்கவேண்டுமென்றும், தான் சமையலுக்கு ஏற்பாடு செய்யக் கீழே போவதாகவும் சொல்லி அன்புடன் விசாலாக்ஷியையும் அழைத்துக் கொண்டு சென்ருள்.

''நீங்களே போறதைப் பார்த்தால், பெரிய விருந்து போல் இருக்கு!'' என்று சாஸ்திரி பற்களைக் காட்டினுர்.

''பின்னே செய்ய வேண்டாமா, சாஸ்திரிகளே? அவரோ சம்பந்தி. விசாலமோ எங்காத்துக் குழந்தை'' என்று அன்புடன் விசாலாக்ஷியைத் தட்டிக் கொடுத்துக் கொண்டு போனுள்.

சாஸ்திரி, தங்களுக்குச் சம்பந்தமில்லாத லோக விவகாரங்களில் சம்பாஷணையைக் கிளப்பி, வெகு நேரம் வரையில் வம்படித்துக்கொண்டிருந்தார். கீழே காமாக்ஷி அம்மாளின் அதிகாரத் துவனி கேட்டுக்கொண்டே இருந்தது.

அஸ்தமன சமயமானதும் சாஸ்திரி, ''சரி, சந்தியா காலம் ஆயிடுத்து; கர்மானுஷ்டானத்தைக் கவனிக்கணும்.—என்ன, அண்ணுசாமி ஐயர்வாள், எல்லாம் 'ஸெட்டில்' ஆனுப்போலேதான். உங்களுக்குத்தான் அந்த அம்மாள் உதாரகுணத்தைப்பத்தி நான் அப்பவே சொல்லி இருக்கேனே. எல்லாச் செலவையும் ஒப்புக் கொண்டு, உங்கள் கையிலே ஆயிரத்துக்குப் பதிலாய் ஆயிரத்து ஐந்நூறு ரூபாயைக் கொடுப்பதாகச் சொல்லி விட்டார்! என்ன தாராளம், பாருங்கோ! நீங்கள் போக்கியத்துலே இருந்த நிலத்தைத் திருப்ப ஆயிரம் ரூபாய் இருந்தால் போரும்னு சொன்னேள். ஐந்நூறு சேர்ந்தே வந்துடுத்து போங்கள்—'' என்ருர்.

இப்பொழுது ஜானகிராம ஐயர், "இது என்னது, சாஸ்திரிகளே!" என்று, தம்மைப் பொருட்படுத்தவில்லை என்ற பாவத்தோடு குறுக்கிட்டார்.

ஆனால் எள்ளுருண்டை சாஸ்திரி, அவர் மனத்தை அறிந்தும், அறியாதவர்போல்பாசாங்குசெய்து, "என்ன செலவு ஜாஸ்தி ஆயிடுத்தேன்னு யோசிக்கிறேளா?"—சித்தி நாலையும் நினைத்துத்தான் செஞ்சிருக்காள். அந்த அம்மாளுக்குத் தெரியாதது என்ன இருக்கு? இதுக்குத்தான் அநுபவசாலிகளான பெரியவாள் வேணும்னு சொல்றது. எல்லாப் பாரத்தையும் அவாள் வகிக்கிறபோது, நாம் ஏதுக்குக் கவலைப்படணும்? நீங்கள் ஒண்ணையும் யோசிக்கவேண்டாம். நீங்கள் ஹாய்யாய் ராஜா வாட்டம் இருங்கள் — சரி, அண்ணுசாமி ஐயர்வாள், வாருங்களேன்! கீழே போகலாம். காலாகாலத்துலே சந்தியைப் பண்ணலாம்" என்று சொல்லிக்கொண்டு, ஜானகிராம ஐயருக்கு மேலேபேச இடங்கொடுக்காமல் அண்ணுசாமி ஐயருடன் அவர் கீழே சென்றார்.

ஜானகிராம ஐயர் நாற்காலியை விட்டு நகராமல் சிந்தித்தவாறு உட்கார்ந்திருந்தார். எதிர் வீட்டில், 'கல கல' வென்று சிரித்துக்கொண்டு வாசற்புறம் இருந்த மாடிப்படிகள் ஏறுபவர்களின் குரல் கேட்டது. ஒரு நிமிஷத்துக்கெல்லாம் வீராசாமி நாயுடுவின் பெண் சுசீலா தன் தாயை அழைத்துக்கொண்டுவந்து, வராந்தாவில் ஒரு பிரம்பு நாற்காலியில் அமர்த்தினாள்; பிறகு தன் கையிலிருந்த ஒரு நீண்ட சட்டையை அவளுக்குப் போட்டுவிட முயன்றாள். அது குளிர் தேசங்களில் ஆடவர்கள், உலாவப் போகும்பொழுது அணிந்துகொள்ளும் சட்டை. சுசீலாவின் தாயார் இரட்டைநாடி மனுஷியாதலால், அதைச் சுலபமாய்ப் போட்டுவிட முடியவில்லை. சுசீலா விழுந்து விழுந்து சிரித்துக்கொண்டே இருந்தாள். அவள் தாயாருக்குச் சற்று வேதனையாக இருந்த போதிலும், தன்

மகளின் ஆனந்தத்தில் தானும் ஈடுபட்டிருந்தாள். இந்தச் சமயத்தில் வீராசாமி நாயுடுவும் மேலே வந்தார். தம் மனைவியின் கோலத்தைப் பார்த்து, அவருக்கும் சிரிப்பை அடக்க முடியவில்லை.

''அவள் படுத்தற பாட்டைப் பாருங்க?—ஆமாம், நீங்களும் சிரியுங்க. உங்கள் மகளாக்கொண்டு இவ்வளவு காரியத்தைப் பண்ணிட்டாள்!' என்று அந்த அம்மாள் குறை சொன்னாளே தவிர, அவள் வாயெல்லாம் பல்லாகத் தோன்றியது.

''கொஞ்சம் பொறு, அம்மா!—எல்லாப் பொத்தானையும் போடவேண்டாமா? ஊம்— இப்போ நீ 'வாக்' புறப்படணும்!'' என்று சொல்லிக்கொண்டே இடி இடி என்று சிரித்தாள்.

இந்தக் கூத்துக்களை எல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஜானகிராம ஐயர் புன்முறுவலுடன் தாமும் தெரு ஓரமாக வந்தார்.

அந்தத் தெரு பண்டைக் காலத்தில் ஏற்பட்டது. பன்னிரண்டு அடி அகலத்துக்குமேல் இராது. எதிர்வீட்டுக்காரர்கள் மேடையிலிருந்தே பேசிக்கொள்ளலாம்.

''சுசீலாவுக்குப் பொழுது போகல்லை போலிருக்கு'' என்றார் ஐயர் ஹாஸ்யமாக.

''அதுக்குத்தான் அவள் அம்மாள் ஒருத்தி இருக்காளே. விளையாட்டுப் புத்தி இன்னும் கொஞ்சங்கூடப் போகவில்லை. இவளும் தங்கமும் ஹேட்டையும் பூட்டையும் போட்டுக்கொண்டு கிளம்பியது உங்களுக்கு ஞாபகம் இருக்குதோ, இல்லையோ?'' என்றார் வீராசாமி நாயுடு ஆனந்தத்தோடு.

''நன்னா இருக்கு'' என்றார் ஐயர் புன்முறுவலுடன்.

''தங்கம் மாதிரி ஆகுமா? அவளுக்கு எவ்வளவு வீட்டுப் பொறுப்பு! இப்போ இரண்டு குழந்தைகளும் ஆச்சு—

இவளுக்கு இன்னும் கலியாணமே—'' என்று சுசீலாவின் தாயார் ஆரம்பித்தாள்.

''சரி, போதும் அம்மா! உன் சாமர்த்தியம் எல்லாருக்கும் தெரியும்'' என்று தாயை அடக்கி, 'தங்கம் ஏப்ரல் மாசத்துலே வராளாமே, மாமா? எனக்கு நேத்து லெட்டர் வந்தது'' என்று ஐயரைப் பார்த்துச் சுசீலா சொன்னாள். ஐயர் குடும்பத்தார் அனைவரையும் முறை வைத்து அழைப்பது அவளுக்கு வழக்கம்.

''ஆமாம் அம்மா. எனக்கும் எழுதியிருக்காள்'' என்று சொல்லும்போதே, ஐயர் முகத்தில் அவரை அறியாமல் ஒரு விகாரம் ஏற்பட்டது.

''புரசவாக்கத்துலேருந்து சின்னம்மா வந்திருக்காங்க போல் இருக்குதே!'' என்றார் நாயுடு.

''இன்னும் யாராரோ வந்திருக்காள், நாயினா. தங்கம் இருந்தால் என்னை அழைச்சுச் சாப்பாடு போடுவாள்'' என்று சுசீலா ஏங்கினாற்போல் நடித்தாள்.

''இப்போ மட்டும் நீ வரப்படாதா?'' என்றார் ஐயர் அசட்டுச் சிரிப்புடன்.

''ஐயோ, புரசவாக்கத்துப் பாட்டியைக் கண்டால் எனக்குப் பயம்'' என்றாள் சுசீலா.

அந்தகாரமாகிவிட்டபடியால் நாயுடு மின்சார விளக்கைப் போட்டு, ஜோதிக்கு நமஸ்கரித்தார். ஐயரும் உள்ளே சென்றார். ஆளுக்கு ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, சுசீலாவும் அவள் பெற்றோர்களும் வராந்தாவில் பேசிக்கொண் டிருந்தார்கள்.

நாயுடுகாருவுக்கும் சொந்த வீடுதான். அவர் பாட்டனார் சம்பாதித்து வைத்த ஆஸ்தி. இவ்விரண்டு எதிர் வீட்டுக் குடும்பங்களும் இரண்டு தலைமுறைகளாகப் பழகியவர்கள். நல்லது பொல்லாததுக்கு ஒருவரை ஒருவர் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். தங்கம்மாள் புக்ககம் போகும்வரையில், சுசீலாவை ஸதா அவர்கள் வீட்டி

லேயே காணலாம். சுசீலா நல்ல அழகி மட்டும் அல்ல; மிகக் கூர்மையான புத்தியுடையவள். ஒரு நிமிஷமாவது வீணுய்க் காலத்தைக் கழிக்கமாட்டாள். எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து அறிந்து கொள்ளவேண்டும் என்ற அவா உள்ளவள்: வாக்கு, நடை, உடை, பாவனைகளிலும் பெரும் போக்கிலும் அவளுடைய உயர்குலம் நன்கு புலப்பட்டது. அவளும் தங்கமும் சேர்ந்து பள்ளிக்குப் போகும் காலத்தில், அவ்விருவரும் உறவினர்கள் என்றே அனைவரும் நினைத்தார்கள். அவளோடு நெருங்கிப் பழகாதவர்கள் அவளுடைய உத்தண்ட குணத்தைத் 'துடுக்கு மிடுக்கு' என்று சொல்லுவார்கள். மொத்தத்தில் அவள் ஊர் அக்கப்போரையெல்லாம் தனதாகப் பாவிப்பவள்.

"ஏதோ ஒரு பொண்ணு கூட வந்திருக்கு, அம்மா!" என்ருள் சுசீலா.

"சொந்தக்காரங்களாய் இருப்பாங்க" என்ருள் அவள் தாயார்.

"இதுவரையிலும், அவாள் இங்கே வந்து போனது இல்லை. அது எனக்கு நன்ருத் தெரியும்.—அதோ, அந்த ஐயரைப் பாரேன்! தாத்தா பொடிக்குடுக்கை யாவுட்டமல்ல இருக்கார். அவர் சினிமாவிலே சேரலாம். நல்ல துட்டு கிடைக்கும்.—அம்மாடியோ! தொண்டையைப் பாரு! என்று சுசீலா எள்ளுருண்டை சாஸ்திரிகளை வர்ணித்துக்கொண்டு இருந்தபோதே, அவரும் அண்ணுசாமி ஐயரும் விளக்கு வெளிச்சத்திலிருந்து தெருவோரமாய் மொட்டை மாடியில் நின்றுகொண்டார்கள். சாஸ்திரி உற்சாகமாய், கையை ஆட்டிக்கொண்டு பேச ஆரம்பிக்கவே, சுசீலா வாயைத் திறக்கவில்லை.

"இந்தச் 'சான்ஸை' விட்டுட்டால் நீர் பைத்தியக்காரர்னுதான் சொல்வேன். இதுலே யோசிக்கிறதுக்கே இடமில்லை, ஐயா! கல்யாணமாயிட்டா பொண்தான்

எஜமானி; அவர் பகுசாது; பாவம், உம்ம பொண் வச்சுது தான் சட்டம்.'' (பிறகு குரலைத் தாழ்த்தி) ''நாளைக்கு நல்ல நாளாய் இருக்கு. ஒரு லக்கின பத்திரிகையாட்டம் எழுதி அதுலேயே உமக்குத் தர பணத்தையும் கண்டு இப்பவே உம்ம கையிலே பணத்தையும் கொடுத்துடறேன்னு அந்த அம்மா சொல்ருள். அடுத்த வாரத்திலேயே முகூர்த்தத்தையும் நடத்திவிட்டால் போச்சு, என்ன?''

இதற்கு அண்ணுசாமி ஐயர் தலையை அசைத்தார்.

சுசீலாவும் அவள் பெற்றேரர்களும் ஒருவரை ஒருவர் மௌனமாய்ப் பார்த்துக்கொண்டனர். "சரி, நாளைக்கு வேலைக்காரி முனியம்மாளைக் கேட்டால் எல்லாம் தெரிஞ்சுபோவுது'' என்று அவர்கள் சமாதானப்படுத்திக் கொண்டார்கள்.

"தெரியறது என்ன! சுசீலா, அந்த சாஸ்திரி தரகுக்காரன் போல இருக்குது. ஐயருக்கு இரண்டாம் தாரம் ஏற்பாடு ஆகுது'' என்ருர் நாயுடு.

"என்ன? என்ன—என்ன அக்கிரமம்! இந்த ஆண் பிள்ளைங்களைப்போலே—'' என்று அவர் மனைவி பிரமித்தாள்.

"இந்தப் பெண்பிள்ளைங்கபோலே, அதுவும் உன்னைப் போலே—'' என்று நாயுடு சிரித்தார். அவர் மகளும் அதில் கலந்துகொண்டாள்.

"அந்தப் பொண்ணு ரொம்பச் சின்னது, நயினு! நம்ம பத்மா அவ்வளவுதான் இருக்கும். பதினஞ்சு வயசு கூட இருக்காது'' என்ருள் சுசீலா.

''அப்படித்தான் இருக்கும். பின்னே ஐயருக்கு ஐம்பது வயதுன்னுல், நாப்பது வயது பெண்ணுக்கு எங்கே போறது?'' என்று அவர் சிரித்தார்.

''இதென்ன வேடிக்கையாய் இருக்கு! இதைப்பத்தித் தங்கம் எனக்கு ஒண்ணும் எழுதல்லையே! அவளுக்குத் தெரியாமலா இருக்கும்?''

"இருக்கலாம். இந்தக் குள்ள ஐயர் ஆட்டத்தையும் பாட்டத்தையும் பார்த்தால் அவர் என்ன வேணும்னாலும் செய்வார் போலிருக்குது!" என்றார் நாயுடு.

"அந்தப் புரசவாக்கத்துக் கிழவி மட்டும் லேசா, என்ன!" என்றாள் அவர் மனைவி.

"சரி, நான் எல்லாம் தெரிஞ்சுக்க மாட்டேன்—? தங்கத்துக்கு எழுதினால் குட்டு வெளிப்பட்டுப்போறது!" என்றாள் சுசீலா. பிறகு ஏதேதோ விஷயங்களைப்பற்றி அவர்கள் வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தார்கள்.

## 4

## 'மனைவி இறந்தால் மணமகன்'

அன்றிரவு காமாக்ஷியம்மாள் போட்ட 'பிளான்' நிறைவேறியது. எள்ளுருண்டை சாஸ்திரிக்கும் நல்ல தரகு குதிர்ந்தது. லாபம் கிடைத்த உற்சாகத்தில், மறு நாள் அண்ணுசாமி ஐயரையும், 'குழந்தை' விசாலாக்ஷியை யும் மோட்டார் வண்டியில் வைத்து, பட்டணத்தை ஒரு முறை சுற்றிப்பார்க்க ஏற்பாடு செய்தார்; அண்ணுசாமி ஐயர் அப்பாவியாதலால், பிரயாணத்தில் பணத்தைப் பறி கொடுத்து விடாமல், பத்திரமாய் அதை ஊர் கொண்டு போய்ச் சேர்க்கும் பொறுப்பையும் தாமே ஏற்றுக்கொண் டார். இரண்டு வாரங்களுக்குப் பிறகே ஒரு நல்ல முகூர்த்தநாள் இருந்ததால், அப்பொழுதேகல்யாணத்தை நடத்திவிடுவதாக நிச்சயிக்கப்பட்டது. பிறகு இரவு ஒன்பது மணி வண்டிக்கு ஆயிரத்தெட்டுக் கூழைக்கும்பிடு கள் போட்டுவிட்டு, அண்ணுசாமி ஐயரையும் விசாலாக்ஷி யையும் மோட்டார் வண்டியில் ஏற்றிக்கொண்டு, ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார்.

எதிர் வீட்டில் சுசீலாவுக்கு எம்.ஏ. பரீக்ஷை முடிந்து விட்டபடியால், காமாக்ஷியம்மாளின் அட்டகாசங்களை

யெல்லாம் உற்றுக் கவனிக்க அவகாசம் ஏற்பட்டது. ஒவ்வொன்றாக எல்லா விஷயங்களையும் அவள் கிரகித்தாள். அந்தச் சிறு பெண்ணுக்கு அவர்கள் விளைக்கப்போகும் தீங்கை நினைக்கும்போது அவளுக்கு உடம்பு எரிந்துபோயிற்று. அவளை "விசாலம், விசாலம்" என்று காமாக்ஷியம்மாள் கூவிக்குலாவியது அவள் செவியில் விழாமல் இல்லை. என்ன அக்கிரமம்! ஜானகிராம ஐயருக்குத்தான் புத்தி எங்கே போயிற்று? அந்தப் பெண் ஊருக்குப் போய்விட்டாலும் அவளுடைய உருவம் தன் கண்முன் நிற்பதுபோல் இருந்தது. ஒரு தரம் பார்த்த பிறகு, அவளை யார்தான் மறப்பார்கள்? எவ்வளவு சாந்தம்! அந்தச் சாந்தமே அவளுக்கு ஓர் அலாதியான அழகைக் கொடுத்ததே! அந்த விழிகளில்தான் எவ்வளவு அன்பு!—எவ்வளவு இரக்கம்!—அட, பாவிகளா! அவளை ஏன் இப்படிப் பலிகொடுக்க முன்வந்தீர்கள்?—எல்லாம் பணத்துக்காகவா?—பணம்!—பணம்! பண வெறி பிடித்தவர்கள் உருப்பட்டாற் போல்தான். அதைத் தடுப்பதற்குச் சட்டம் ஒன்றும் இல்லை என்று 'நாயிஞ'வும் சொல்லிவிட்டார். ஸ்திரீ சங்கம் ஏதோ அழுதுகொண்டு கிடந்தது! இப்படிப்பட்ட அக்கிரமங்கள் நடைபெறுமல் அவர்கள் பார்க்க வேண்டாமா? அந்தப் பெண்ணுந்தான் இவ்வளவு பேதையாய் இருக்கவேண்டுமா? இவ்வளவு கிழவனைக் கட்டிக் கொள்ளமாட்டேன் என்று தைரியமாய்ச் சொல்லக் கூடாதோ? அவள் என்னவோ, அந்தக் கல்யாணத்தை மறியல் செய்யக்கூடத் தயார். ஆனல் பெற்றோர்கள் விடமாட்டார்கள். அவளுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஏதோ ஒரு யோசனை வந்தது. மளமளவென்று காகிதம், பேனவை எடுத்தாள்; நாலு பக்கம் வரிந்து தள்ளினுள். ஒரு முறை படித்துப் பார்த்தாள்; மற்றொரு சிறு துண்டில், இன்னும் கொஞ்சம் சேர்த்தாள். பிறகு, அன்றைத் தபாலுக்கே சேரும்படி

அதைத் தங்கத்தின் விலாசத்துக்கு டில்லிக்கு அனுப்பினாள்.

ஒரு வாரம் கழிந்தது. தங்கத்தினிடமிருந்து எந்த நிமிஷத்திலும் பதில் வரலாமென்று அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால், அதற்குள் காமாக்ஷி அம்மாள் புரசைவாக்கத்திலிருந்து வந்து, ஜானகிராம ஐயர் வீட்டில் முகாம் போட்டுக்கொண்டு, கல்யாண ஏற்பாடு களைப் பலமாக செய்யத் தொடங்கினாள்; சாமான்கள் சேகரிக்கப்படும் வேகத்திலிருந்து முகூர்த்தம் வெகு சீக்கிரத்திலேயே நடைபெறும்போல் இருந்தது. பிறகு பல மூலங்களின் வழியாக, கல்யாணத்துக்கு இன்னும் ஆறே ஆறு தினங்கள்தாம் இருந்தன என்று தெரிந்துகொண்டு விட்டாள். தனக்குத் தங்கம் பதில் எழுதாமல் இருந்தது அவளுக்கு ஆச்சரியமாய் இருந்தது. என்ன செய்வது என்று தெரியாமல் அவள் சஞ்சலப்பட்டுக்கொண் டிருக்கையில், காமாக்ஷியம்மாள் தன்னை ஜாடை ஜாடையாய்த் தூஷிப்பதை அவள் ஊகித்துக்கொண்டாள். எப்பொழுதுமே, காமாக்ஷியம்மாளுக்குச் சுசீலாவைப் பிடிக்காது. ஆனால் இப்பொழுது ஏன் துவேஷம் இவ்வளவு முற்ற வேண்டுமென்று அவள் யோசித்துக்கொண் டிருக்கையில், டில்லியிலிருந்து கடிதம் வந்தது. வீட்டில் குழந்தைகளுக்கு உடம்பு சௌகரியமாய் இல்லாததால் அவளுக்கு விவரமாகப் பதில் எழுதத் தாமதமாயிற்று என்றும், ஆனால் தன் தகப்பனாருக்கு மாத்திரம் கஷ்டத் தோடு கஷ்டமாய், சுசீலாவின் கடிதம் கிடைத்த தினமே, மறு விவாகம் செய்துகொள்வதைப் போலப் பைத்தியக் காரத்தனம் கிடையாதென்றும், அவள் அதை அடியோடு மறுப்பதாகவும் எழுதியதைத் தங்கம் தெரிவித்திருந்தாள். இந்த விஷயத்தைக் குறித்து இங்கிலாந்திலிருந்த 'அண்ணா'வுக்கும் எழுதி, தகப்பனாருக்குப் புத்தி சொல்லும்படி அவனையும் தூண்டியிருப்பதாகவும் எழுதியிருந்தாள்.

காமாக்ஷியம்மாள் தன்மீது எரிந்து விழுந்ததற்குக் காரணம், சுசீலாவுக்கு இப்பொழுது தெரிந்தது. வந்த கடிதத்தை ஜானகிராம ஐயருக்குத் தெரியாமல் மறைத்து வைத்துவிட்டாளோ என்ற சந்தேகமும் பிறந்தது. ஏனெனில் ஏதாவது மனக் கலக்கம் ஏற்பட்டால் ஜானகிராம ஐயர் சும்மா இருக்கமாட்டார். அவர் முகமே அதைக் காட்டிக் கொடுத்துவிடும். ஆனால் அவரோ எப்பொழுதும்போல் நிதானமாய்த் தம் அலுவல்களைச் செய்துகொண்டிருந்தார். அவரையே நேரில் கேட்டுவிடுவது என்று தீர்மானித்தாள். பிறகு அவர் ஆபீஸுக்குப் புறப்பட்டுப் போகும்போது, தானும் ஏதோ வேலையாக வெளியே போவதுபோல், காமாக்ஷியம்மாளுக்குத் தெரியாமலே அவள் விசாரித்தாள்.

"ஒண்ணும் வரல்லையே, அம்மா!" என்று அவர் யதார்த்தமாக சொல்லிவிட்டு, பிறகு எதற்காகக் கேட்டாளோ என்று தெரியாமல் அவர் விழிக்கும்பொழுது, "சும்மாத்தான் கேட்டேன், மாமா" என்று அவள் சமாதானம் சொல்லி விடைபெற்றுக்கொண்டாள்.

கால் மணி நேரத்துக்கெல்லாம் தன் சாமர்த்தியத்தையெல்லாம் உபயோகித்துத் தங்கத்துக்கு ஒரு தந்தி அடித்தாள். அதிலுள்ள சமாசாரம், தங்கம் தன் தகப்பனுருக்குத் தந்திமூலம் கல்யாண மறுப்பைத் தெரிவிப்பதோடு, சீமையிலிருந்த தன் அண்ணன் டாக்டர் நாராயணனையும் அர்ஜண்டாக கேபிள் கொடுக்கும்படி செய்யவேண்டும் என்பதுதான். கல்யாணத் தேதியும் தெரிவிக்கப்பட்டது.

கல்யாண நாள் நெருங்கிக்கொண்டே வந்தது. சுசீலாவும் கண் கொட்டாமல், தெரு வழியே போகும் தந்திச் சேவகன் ஒவ்வொருவனையும் கவனித்துக்கொண்டிருந்தாள். ஆனால் ஜானகிராம ஐயர் வீட்டுக்கு ஒரு தந்தியும் வரவில்லை. தன்னால் இந்த அக்கிரம விவாகத்தைத்

தடுக்க முடியாதென்ற அவநம்பிக்கை அவளுக்கு அதிகரிக்க அதிகரிக்க, ஆத்திரம் மட்டும் பொங்கிப்போயிற்று. மாடியில் வராந்தாவில் உட்கார்ந்தவாறு, காமாக்ஷி அம்மாளையும் தோற்கடிப்பதுபோல் ஜாடையாய் இரைய ஆரம்பித்தாள். அவள் உருட்டலையும் மிரட்டலையும் கண்டு, காமாக்ஷியம்மாள் அவள் கண்ணில் படாமல் திரிந்தாள்.

"எல்லாம்போக, இந்தச் சனியனுக்கு என்ன வந்தது? மூணு முடிச்சுப் போடறவரையிலும் வாயைத் திறக்கப் படாது" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டாள்.

வைதிகர்களைத் தவிர வேறு யாரையும் அழைக்கக் கூடாதென்று அவள் அபிப்பிராயப்பட்டாள். இல்லாவிட்டால், வம்பை விலைக்கு வாங்குவதுபோல் ஆகும். இரண்டாம் பேருக்குத் தெரியாமல், ஏதோ ஒரு பண்டிகை பருவத்தைப்போல், கல்யாணத்தை முடித்து விடுவதுதான் நலம் என்று அவளுக்குப் பட்டது; வேண்டுமானால், பத்துக்கு முப்பதாய் வைதிகர்களை வைத்துக் கொள்வது என்று நிச்சயித்துக் கொண்டாள். அவர்களுக்கு வேண்டியது தக்ஷிணைதானே!

கல்யாணத்துக்கு முதல் நாளும் வந்துவிட்டது. தன் தாயார் பேச்சையும் கேட்காமல் சுசீலா பதைத்ததுதான் வீண். காலை சுமார் எட்டு மணிக்கெல்லாம் எள்ளுருண்டை சாஸ்திரி, அண்ணுசாமி ஐயரைக் குடும்ப சகிதமாய் அழைத்துக்கொண்டு வந்து இறங்கினார்.

பட்டை பட்டையாய் விபூதி இட்டுக்கொண்டு, உச்சிக் குடுமியுடன் மணையில் உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்த ஜானகிராம ஐயர் வந்தவர்கள் அனைவருக்கும் பூர்ண தரிசனம் அளித்தார். அண்ணுசாமி ஐயரின் மனைவி சீதாலக்ஷ்மி அம்மாள், முதலில் அவரை யாரோ என்று நினைத்தாள். பிறகு, தனக்கு மருமகனாகப் போகிறவர் அவர்தான் என்று தெரிந்ததும், அவள்

இருதயத்தில் 'சுருக்' என்று ஒரு முள் புதைந்தது; தன் கணவரைத் தலையெடுத்துப் பார்த்தாள். அந்த அப்பாவி மனிதர் பேதை போல் விழித்தார். இதற்குள் எழுந்து நடமாடிய ஜானகிராம ஐயரைச் சீதாலக்ஷ்மி அம்மாள். தலை குனிந்தவாறு இருந்த போதிலும், பற்பல விதமாக உற்றுக் கவனித்தாள், அவர் சாது என்பதில் சந்தேகமே இல்லை; அவருடைய ஆரோக்கியத்துக்கும் குறைவே இல்லை. எள்ளுருண்டை சாஸ்திரி சொன்னதெல்லாம் சரியாகத்தான் இருந்தது.—ஆனால் வயதில் மட்டும் புரட்டல் இருந்தது. அதைத் தன் புருஷன் அல்லவா தெரிந்துகொண்டிருக்க வேண்டும்? சரி, இனி என்ன செய்வது? எல்லாம் ஒன்றுபோல் அமையுமா? இனிமேல் தங்களைத் தரித்திரம் பாதிக்காது.—ஆனால், அதற்கு விசாலாக்ஷியையா....? மேலே நினைக்க இஷ்டம் இல்லை; எண்ணங்களை அடக்கிக் கொண்டாள். எப்பொழுதுமே அவளுக்கு விசாலாக்ஷியின் மீது அபார அன்பு. இப்போது அந்த அன்போடு, என்றைக்கும் தன்னால் தீர்க்கமுடியாத ஒரு கடனுக்கு ஆளாக்கிவிட்டாள் என்ற எண்ணம் வந்துவிட்டது. கண் கலங்காமல் சமாளித்துக் கொண்டாள். விடுதி அறையில் நுழைந்ததும் தன் அருமைப் புதல்வியைக் கட்டி அணைத்துக்கொண்டாள். எதற்காக என்று விசாலாக்ஷிக்கு எப்படித் தெரியும்?

அண்ணுசாமி ஐயரின் மூத்த குமாரிகளில் ஒருத்தியே கல்யாணத்துக்கு வர முடிந்தது. அதற்காக, தம் பக்கமும் சில சுற்றத்தார் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தால், அவர் பணச்செலவையும் பாராமல், விருத்தாப்பியரான தம் அத்தானையும் அவர் மனைவியையுங்கூட அழைத்து வந்தார். எல்லாரும் கிராமவாசிகள் ஆனதால், முதலில் எல்லாருக்கும் ஒரு கூட்டில் அடைபட்ட உணர்ச்சி வந்தது. ஆனால், காமாக்ஷியம்மாளின் அன்பார்ந்த வரவேற்பாலும், எள்ளுருண்டை சாஸ்திரி

களின் ஆசார உபசாரங்களாலும் மெள்ள மெள்ள அவர்களால் சகஜமாய் நடந்துகொள்ள முடிந்தது. விசாலாக்ஷியின் தங்கை பாகீரதி விசாலாக்ஷியை விட்டு ஒரு நிமிஷமும் பிரிந்திருந்ததில்லை; விசாலாக்ஷியைவிட நான்கு வயதுதான் சின்னவள். மற்றத் தமக்கைகள் புக்ககம் சென்றதைக் குறித்து அவள் கவலைப்படவில்லை. ஆனால் விசாலாக்ஷி தன்னை விட்டுவிட்டுப் போய்விடுவாள் என்று நினைக்கும்போதே, அவளுக்குப் பயமாய் இருந்தது. விசாலாக்ஷியின் பக்கத்தில் உட்கார்ந்து ரகசியமாக ஏதேதோ கேள்விகளைக் கேட்டாள்.

மறுநாள் காலையில், வைதிகர்களால் வீடு நிறைந்து விட்டது. ஹோமத்தின் புகையும், மந்திர கோஷமும் மனத்துக்கு ஒருவித பிரமையை உண்டாக்கின. "இதைக் கொண்டு வா, அதைக் கொண்டு வா" என்று அட்டகாசத்துடன் அதிகாரம் செய்துகொண்டிருந்த எள்ளுருண்டை சாஸ்திரியின் குரல் மட்டும் ஓங்கி நின்றது. ஜானகிராம ஐயரும் விசாலாக்ஷியும் மணையில் அமர்ந்திருந்தார்கள். சாஸ்திரப்படி, ஓர் எழுத்துக்கூடப் பிசகாமல், ஜானகிராம ஐயர் உபாத்தியாயர் சொல்லிய மந்திரங்களை உச்சரித்துக்கொண்டிருந்தார். காமாக்ஷி அம்மாளின் முகத்தில் பெருமையும் ஆனந்தமும் தாண்டவமாடின. ஒன்பதாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்த தன் பேரன் எதையோ கொடுக்கும்படி வற்புறுத்தியதையும் அவள் சட்டை செய்யவில்லை. இன்னும் தாலி கட்ட அரை மணி நேரந்தான் இருந்தது. எல்லாம் அவளுடைய 'பிளான்' பிரகாரமே நடந்துகொண்டிருந்தது.

கல்யாண கிருகத்தில் இப்படி இருக்க, எதிர் வீட்டில், கீழே வாசல் அறையில், சுசீலா முக வாட்டத்தோடு, ஜன்னலைக் கொஞ்சமாகத் திறந்து வைத்துக்கொண்டு, தன் முகத்தைக் காட்டாமல் நடவடிக்கைகளைக் கவனித்தாள். தான் நினைத்த காரியத்தை நிறைவேற்றுவதைக்

குறித்து அவளுக்கு அடக்க முடியாத துக்கம். இந்தச் சமூகத்துக்கும் விமோசனம் ஏற்படுமா என்று ஏங்கினாள். ஜானகிராம ஐயர் படித்தவராம்! அவர் படிப்பை நெருப்பில் போட! அவருக்கும் ஆயிரம் ரூபாய் சம்பளம் கொடுப்பதென்றால், அந்த ராஜாங்கத்துக்கே யோக்கியதை இல்லாமல் இருக்கவேண்டும். அந்தப் பெண்ணை, அவளைப் பெற்றவர்களோ, கடவுளே! அவளுக்கு வந்த ஆத்திரத்தில், மண்ணெண்ணெயை ஊற்றி, அந்த வீட்டையே எரித்து விடவேண்டும் போல இருந்தது.

அவள் இவ்வாறு தத்தளித்துக்கொண்டிருக்கையில், தந்திச் சேவகன் எதிர் விட்டு வாசலில் வந்து நின்று, சைக்கிள் மணியை ஓயாமல் அடித்தான். அவனைப் பார்த்து, முதலில் ஓடி வந்தவன் காமாக்ஷியம்மாளின் பேரன்தான். ஜானகிராம ஐயருக்குத் தந்தி என்றதும், "அவர் பூசையிலே இருக்காரே?" என்றான் அவன்.

"கையெழுத்துப் போட்டு நீ வாங்கிக்கோ, தம்பி!" என்று தந்தியையும், பென்ஸிலுடன் கையெழுத்துப் போட வேண்டிய காகிதத்தையும் சேவகன் நீட்டினான். பையன் தந்தியை வாங்கிக்கொண்டு, சேவகனை அனுப்பி விட்டான். இதற்குள் எல்லாரும் பையனைச் சூழ்ந்து கொண்டார்கள். தந்தி என்றால் எல்லாருக்கும் இப்பொழுதே பயம்; அதுவும் அந்தக் காலத்தில் கேட்க வேண்டுமா? விபத்துக்குத் தவிர வேறொன்றுக்கும் அதை உபயோகிப்பதில்லை என்ற நம்பிக்கை.

"மாமாவுக்கு வந்திருக்கு, மாமா தான் உடைக்கணும்" என்று அவன் கும்பலைத் தாண்டிக்கொண்டு மனையில் இருந்த ஜானகிராம ஐயரிடம் கொடுக்கப் போனான். "இந்தச் சனியனை இங்கே அழைச்சுண்டு வந்தேனே!" என்று காமாக்ஷியம்மாள் நொந்துகொண்டிருக்கும் போதே, "படிடா, நீதான் உடைச்சு வாசியேன்!" என்று எள்ளுருண்டை சாஸ்திரி அதட்டினார்.

பிறகு, பையன் பின்வருமாறு, ஆங்கிலத்தில் எழுதியிருந்ததைத் தட்டுத் தடங்காமல் வாசித்துவிட்டான்: "கல்யாணத்தை நிறுத்துங்கள். பைத்தியக்காரத்தனம். துர்ப்போதனையின் விளைவு. நடத்தினால் தாயோடு தகப்பனும் இறந்தானென்று நினைத்துக் கொள்வேன். —தங்கம்."

ஆங்கிலத்தில் சொன்னதைத் தெரிந்து கொள்ள முடியாமல் தவித்த அநேகருக்கு, சகாயம் செய்யவேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடு, தமிழிலும் விளக்கமாய்ச் சொன்னான் பையன்!

எல்லாரும் பிரமித்துவிட்டார்கள். ஆனால் காமாக்ஷி அம்மாளுக்கு மட்டும் மனஉறுதி நீங்கவில்லை. "கிடக்கிறது, கழுதை! காரியத்தைப் பாரும், சாஸ்திரிகளே! துர்ப்போதனையாம்-துர்ப்போதனை! அதுக்குன்னு யாரோ தூபம் போட்டிருக்காள்? எல்லாம் ஆசைதான்; செல்லமடிச்சிண்டு, சொத்தை எல்லாம் கபளீகரம் பண்ணணும்னு—வேறென்ன? அவள் அம்மா சீதனம் கொண்டு வந்தது என்ன கெட்டுப்போச்சு? ஆம்படையாள் செத்தால் புருஷன் மாப்பிள்ளைதான். இதுலே என்ன தப்பு!" பிறகு சீதாலக்ஷ்மி அம்மாளைப் பார்த்து, "அப்பனாவது, பொண்ணாவது, எல்லாம் பணந்தான்! நீங்கள் ஒண்ணும் கவலைப்படாதங்கோ. இந்தக் கலகம் எல்லாம் செய்யறது யாரோ எனக்குத் தெரியும். இதோ.." என்று குரலைத் தாழ்த்தி, எதிர் வீட்டின் பக்கமாக இரு கைகளையும் நீட்டிக்கொண்டு, "இந்த ஆத்துலே ஒரு தத்தாரி இருக்கு. அது செஞ்ச வேலையாக்கும்!" என்றாள்.

பிறகு உரத்த குரலில் எள்ளுருண்டை சாஸ்திரியைத் துரிதப்படுத்தினாள். "சட்டுப் புட்டுனு ஆகட்டுமே. முகூர்த்தம் தப்பிப் போகப்போகிறது. இந்தத் தங்கம் இருக்காளே, அவள் நாளைக்கு விசாலம் கையைத்தான் பார்க்கணும். அதுக்குத்தான் இவ்வளவு சண்டையும்,

வேறென்ன?—ஊம், ஆகட்டும், ஆகட்டும்'' என்று தூண்டினாள். மந்திர கோஷமும் மேளச்சத்தமும் சம்பாஷணைக்கு இடம் கொடுக்காமல் பலமாய் ஒலித்தன. சமிக்ஞைகளாலேயே காரியங்கள் நடந்தன:

தந்தியின் மூலம் சச்சரவு ஏற்பட்டுவிட்டதென்றும், அதனால் ஒருவேளை கல்யாணம் நின்றுவிட்டாலும் நின்று விடும் என்றும் ஆசைப்பட்டுக்கொண்டிருந்த சுசீலாவுக்குச் சில நிமிஷங்களுக்குள் "டம் டம், டம் டம்'' என்று தாலி கட்டும் மேள ஓசை கேட்டது. பெருமூச்சு விட்டு நாற்காலியில் சாய்ந்துகொண்டாள்.

தந்தியினால் ஏற்பட்ட கலக்கத்தைப் போக்கி, சீதா லக்ஷ்மி அம்மாளை மனம் குளிர வைக்க வேண்டியது தன்னுடைய கடமை என்று காமாக்ஷியம்மாள் கருதினாள். அதற்காகத் திட்டத்துக்கு மேற்படியாகவே பணத்தைச் செலவழித்து, விலை உயர்ந்த ஜவுளி வகையராக்களை அவர்களுக்குச் சமர்ப்பித்தாள். சீதாலக்ஷ்மியம்மாளுக்கும் மனம் பூரித்ததென்றே சொல்ல வேண்டும். தனக்கும் தன் குழந்தைகளுக்கும் இவ்வளவு அற்புதமான ஆடைகளை அணியும் பாக்கியம் கிடைக்குமென்று அவள் நினைக்கவே இல்லை. அன்றைத்தினம் நடத்திய விருந்தின் சிறப்பு ஒன்றே போதுமே! பிற்பகலில், காமாக்ஷியம்மாள் அவளுக்கு வீட்டிலிருந்த ஒவ்வோர் இடத்தையும் காட்டி, அங்கிருந்த விதம் விதமான வெள்ளி பித்தளை சாமான்கள், நகை நட்டுகள், எல்லாவற்றுக்கும் சொந்தக்காரி விசாலம்தான் என்று சொன்னபொழுது, சீதாலக்ஷ்மி அம்மாளுக்கு மன மகிழ்ச்சி உண்டாகத்தான் செய்தது.

அன்றிரவு, காமாக்ஷியம்மாள் சம்பந்திமார்களை ஒரு மாதம் இருந்து போகும்படி சொன்னதற்கு அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு, விசாலாக்ஷியையும் அவளுக்குத் துணையாக அவள் தங்கை பாகீரதியையும் பட்டணத்தில் கொஞ்சகாலம் விட்டு வைக்கும்படி அவள்

கேட்டுக்கொண்டாள். அதற்கும், சீதாலக்ஷ்மி அம்மாள் இணங்கவில்லை.

"எங்களுக்கு அந்த வழக்கம் இல்லை. அதுவும் தவிர, என் குழந்தைகள் சமாசாரம் எனக்குத் தெரியும். இன்னும் இரண்டு மூணுமாசத்திலே பெரியவள் ஆய்விடுவாள். நான் குழந்தையைத் தனியாய் எப்படி விடறது, சொல்லுங்கோ! நாலஞ்சு மாசம் போனால், தானே வந்து இருக்கப் போறாள்" என்றாள்.

"சரி, அப்படியே செய்யுங்கோ, அப்போதாவது பாகீரதியை அவளுக்குத் துணையா விட்டு வையுங்கோ. இரண்டும் இணை பிரியாமல் இருக்கு: இங்கேதான் என்ன பிக்கு பிடுங்கல் இருக்கு? ஒண்ணுக்கொண்ணு ஒத்தாசையாய் இருக்கட்டுமே.—அவளுக்குந்தான் பட்டணத்திலேயே ஒரு பணக்கார ஆம்படையான் கிடைக்கட்டுமே!' என்று காமாக்ஷியம்மாள் பெருமையாகச் சொல்லிக் கொண்டாள்.

அடுத்த புதன்கிழமை நல்ல நாளாக இருக்கவே, அண்ணுசாமி ஐயர் தம் குடும்பத்தார் எல்லாரையும் அழைத்துக்கொண்டு, கிராமத்துக்குப் பிரயாணமானார்.

## 5

## பெற்ற மனம்

காமாக்ஷியம்மாளுக்குக் கல்யாணம் கார்த்திகை ஆனகாலத்துக்கும் இப்போதைக்கும் இடையில் ஐம்பது வருஷங்கள்தான் இருந்தன! ஆகவே, காலத்துக்குத் தக்கவாறு, அவளுடைய மனப்பான்மை மாறாததற்கு அவள் மேல் எப்படிக் குற்றம் சாட்டுவது? சாகிற காலத்தில் 'சங்கரா, சங்கரா' என்பது போல்தான். உண்மையிலேயே அவள் ஜானகிராம ஐயருக்கு ஒரு பெரிய நன்மையைச் செய்து விட்டதாக நினைத்தாள். இரண்டும்

கெட்டானுன ஜானகிராம ஐயரைப் போன்ற ஒரு வாயில்லாப் பூச்சி அவளுக்கு அகப்பட்டுக்கொள்ளவே, எடுத்த காரியத்தைச் செய்து முடித்தோமென்று அவளுக்குப் பெருமை அடித்துக்கொள்ள முடிந்தது. வீட்டை ஒழுங்கு செய்துவிட்டு, குடித்தனம் செய்ய விசாலாக்ஷி சீக்கிரமே வந்துவிடுவாள் என்று மகனுக்குத் தைரியம் சொல்லி, அவள் தன் இருப்பிடத்துக்குச் சென்ருள்.

மறுபடியும் ஜானகிராம ஐயருக்குத் தனிமையாகக் காலம் தள்ள நேர்ந்தது.

ஒரு நாள் காலையில் காபியை அருந்தியவாறு, அவர் தமது வாழ்க்கையில் சில சம்பவங்களைப்பற்றி நினைக்கலானார்.—அல்லது, அந்த நினைவுகளே அவர் மனத்தில் வட்டமிட வந்தன என்று சொல்லலாம். அவர் இரண்டாம் தரம் மணமகனுய் ஒரு வாரந்தான் இருக்கும். என்ன ஆச்சரியம்! எவ்வளவு சீக்கிரத்தில் முடிந்துவிட்டது! 'விட்ட குறை, தொட்ட குறை' யில் பூர்ண நம்பிக்கை உள்ளவர் அவர். அந்தப் பெண்ணுக்கும் அவருக்கும் முற்பிறவியில் என்ன சம்பந்தமோ—யாருக்குத்தெரியும்? இருந்தாலும், அவர் வயது என்ன? அந்தப் பெண்ணின் வயது என்ன? அவருக்குப் பகுத்தறிவு இல்லையா? இதுவும் கொஞ்சம் வேதனையைத்தான் செய்தது. ஆனுல், பார்வை இல்லாதவன் எந்தச் சடங்கையும் செய்யத் தகுதியற்றவன் என்று பெரியோர் சொல்லி வந்தார்களே நினைக்க நினைக்க எல்லாம் தர்மசங்கடமாய் இருந்தது. சித்தியோ, சொல்ல வேண்டியதில்லை. எதையும் தன் இஷ்டப் பிரகாரமே நடத்தித்தீருவாள். ஆனுல் அவளும் தன்மேல் இருந்த அபிமானத்துக்குத்தானே கஷ்டப்பட்டாள்? அந்தக் குட்டி தங்கம் செய்த வேலையோ! தாலி கட்டும் சமயத்தில் சேரும்படி தந்தியை அடித்தாளே! அவள் எப்பொழுதும், தாயைப்போல் படபடப்புத்தான். ஆனுல், உள்ளூற அவள் இதயம் எவ்வளவு தங்கமானது

என்பது அவருக்குத் தெரியாதா? தகப்பனும் இறந்ததாகப் பாவித்துக் கொள்வேனென்று எழுத, அவளுக்கும் எவ்வளவு கோபம் வந்திருக்கவேண்டும்? ஒருவேளை, தான் செய்த காரியம் தவறுனதுதானே? தன் மகன் நாராயணனுக்காவது எப்பொழுதுமே ஒரு தனிப்போக்கு. ஆனால், குழந்தை தங்கத்துக்குத் தன் மேல் உயிர் ஆயிற்றே. வெகு காலம் வரையில், இரவு எவ்வளவு நேரமானாலும், தான் சாப்பிட்டு வரும் வரையில், 'கொட்டு, கொட்டு' என்று விழித்திருந்து, தன் விவகாரங்களையெல்லாம் சொல்லி, தன் மடியிலேயே தூங்கிவிடுவாளே. அப்படிப்பட்டவளுக்கு ஏன் இவ்வளவு கோபம் வரவேண்டும்? ஜானகிராம ஐயருக்கு ஒன்றும் புரியவில்லை. மனக்குழப்பம் அதிகரிக்க, அவர் எழுந்து உலாவினர்.

அப்பொழுது, வாசலில் சைக்கிள் மணி அடிப்பது கேட்டது. அடுத்த நிமிஷத்தில், தந்தி வந்திருப்பதாகச் சமையற்காரன் மேலே வந்து தகவல் சொன்னுன். இந்தத் தடவை ஏதோ விபரீதமான சமாசாரந்தான் என்று ஐயர் நடுங்கி, விழுந்தடித்துக்கொண்டு கீழே ஓடினர், கை நடுங்க, தந்தியை உடைத்துப் பார்த்தார். அது எக்காரணத்தினலோ நாலைந்து தினங்கள் தாமதிக்கப்பட்டுச் சீமையிலிருந்து வந்த 'கேபிள்'. மகன் நாராயணன் தெரிவித்தது: "நீங்களே நான்கு பேருக்குப் புத்திமதி சொல்வது போக, ஓர் அறியாப் பெண்ணை மணந்து கொள்வது தவறு. அவசரத்தில் செய்த பிழைக்கு ஆயுள் முழுவதும் நீடித்துத் துன்பப்பட வேண்டியிருக்கும்."

ஐயருக்குத் தலை சுழன்றது. நாராயணனும் அவசரக் குடுக்கைதான். ஆனால், எவ்வளவு அவசரமானாலும், ஒரு விஷயத்தின் உள் கருத்தை ஒரு நொடியில் அறிந்து கொள்ளக்கூடும் சக்தியுடையவன் அவன். அவனும்

மறுக்கவேண்டுமானுல், தான் செய்தது உண்மையில் தவறுதானே என்ற சந்தேகம் வந்துவிட்டது. அவருடைய கஷ்டத்தை யாரிடம் சொல்லிக்கொள்வது?

கையும் காகிதமுமாய் நின்றுகொண்டு திக்கற்ற நிலைமையில் தவிக்கும் வேதனையை அவர் முகமே எடுத்துக் காட்டியது. இந்தப் பரிதாபக் காட்சியை எதிர் வீட்டில் இருந்த சுசீலாவும் அவளுடைய தகப்பனுரும் பார்க்க நேர்ந்தது.

“கிழம் முழிக்கிறதைப் பாரு! பிராணனை விட்டுடப் போறதா, என்ன?” என்ருள் சுசீலா பரிகாசமாய்.

“சீ, தப்பு! அப்படியெல்லாம் சொல்லாதே. நடந்தது நடந்துபோச்சு. அவரை இன்னிக்கித்தானு எனக்குத் தெரியும்? கருமம் யாரை விடுது? அவர் கஷ்டப்படும் போது நாம் விட்டுக் கொடுக்கக் கூடாது. மூணு தலை முறையாய்த் தாய் பிள்ளையாட்டம் பழகிட்டோமே. அவர் எங்கே போப்போருரு, நாம் எங்கே போருேம்? அவர் மனது நோகும்படி நீ ஒண்ணும் செய்யக் கூடாது. —என்னு? தெரியுதா? அந்த கிழவி செஞ்ச தீங்கு இது. குறையைச் சொல்லிக்கிறதுக்குக்கூட ஆள் இல்லாமெ அவர் அழுதுக்கிட்டுக் கிடக்காரு, பாவம்! நான் அவரண்டை போறேன். நீயும் வந்தால் வா. ஆனுல் சிறு பிள்ளைத்தனமாய் மட்டும் நடந்துக்காதே!” என்று நாயுடு எச்சரித்துவிட்டு, எதிர் வீட்டுக்குப் போனுர். சுசீலா எல்லாவற்றுக்கும் தலையை அசைத்தாள். அவளுக்கு ஜானகிராம ஐயரைப் பார்த்தால் கோபம் ஒரு பக்கம், சிரிப்பு ஒருபக்கம். ‘நாயினு’ சொல்வதும் நியாயமாய்த்தான் இருந்தது. அவளுக்கு மட்டும் ‘மாமா’வைத் தெரியாதா?

அதுவும் தவிர, அந்தப் பெண் விசாலம் குடித்தனம் செய்ய வந்தவுடன், அவளோடு பழகி, சிநேகிதமாக இருக்க அவளுக்கு ஆசையாக இருந்தது; விசாலத்தைக் கண்டதிலிருந்தே அவள் மேல் அவளுக்கு ஓர் அபிமானம்

ஏற்பட்டுவிட்டது. இதை எல்லாம் உத்தேசித்து, 'மாமா' வோடு சண்டை போட்டுக் கொள்ளக் கூடாதென்று அவளுக்குப் பட்டது. நாயினு சொன்னுப்போல் இனி அவர் மனத்தை அடிக்கடி புண்படுத்துவதில் என்ன பிரயோஜனம்? ஆனுல், அந்தப் புரசைவாக்கம் கிழவியை மட்டும் இந்தப் பக்கம் வராமல் செய்துவிட வேண்டு மென்று தீர்மானித்துக்கொண்டாள்.

பிறகு, தலையை வாரிக்கொண்டு, அவளும் எதிர் வீட்டில் நுழைந்தாள். நாயினுவும் மாமாவும் மாடியில் இருந்ததாகத் தெரிந்தது; வெகு சகஜமாய் மேலே சென்ருள். அவளுக்குத் தெரியாத வீடா என்ன? மாமா முகத்தில் சோகம் தாண்டவம் ஆடியது. நாயினு கையில் ஒரு காகிதம் இருந்தது. அவளேக் கண்டதும், அசடு வழிய, ஜானகிராம ஐயர், "வா, அம்மா! வா, அம்மா!" என்று அன்புடன் வரவேற்ருர். "அந்த 'பங்ஷ'னுக்கு யாரையும் கூப்பிட வாண்டாம்னு — உம் — சொன்னுள். அதனுலேதான் உன்னேயும்.." என்று ஐயர் அவஸ்தைப் பட்டார்.

"அது கிடக்குதுங்க; இப்போ நாராயணனுக்கு நல்லா யோசிச்சு, அவனேச் சமாதானப் படுத்தும்படி பதில் எழுதுங்க" என்று நாயுடு மழுப்பினுர்.

"நாராயணனும் ஒரு 'கேபிள்' கொடுத்திருக்கான், அம்மா!...... சுசீலா கிட்டே அதைக் கொடுங்களேன்" என்று ஜானகிராம ஐயர் சொன்னபொழுது, அவள் ஐயரை ஒருமுறை பார்த்து, தகப்பனுரிடம் இருந்த காகிதத்தை வாங்கிக்கொண்டாள். 'மாமா' ஒன்றும் அவ்வளவு பைத்தியக்காரர் இல்லே என்று தெரிந்ததும், குறும்புத்தனமாக, "இன்னும் யார் கொடுத்திருக்கா மாமா?" என்று கேட்டாள்.

"தங்கமும்தான்."

"நான் அதைப் பார்க்கில்லேயே?"

"இதோ, அதையும் கொண்டுவறேன்" என்று ஜானகிராம ஐயர் பீரோவை திறந்து, பத்திரப்படுத்தப்பட்ட அந்தத் தந்தியையும் கொடுத்தார்.

சுசீலா, ஒவ்வொன்றையும் இரண்டு மூன்று தரம் படித்தாள். அவளை அறியாமல் புன்முறுவல் ததும்பியது.

ஜானகிராம ஐயர் அவள் தகப்பனாரிடம் முறையிட்டுக்கொண்டிருந்தார். "இவன் இப்படிச் சொல்றுன். அவள் நான் செத்தேன்னு எண்ணிண்டுடறேன் இங்கறுள்!.... இவாளுக்கு என்ன துரோகத்தை நான் செஞ்சுட்டேன்? என் குழந்தைகளே என்னை இப்படி ஒதுக்கி வச்சால், நான் யாரண்டை போய் அழுவேன், நாயுடுகாரு? அவன் கேட்கவேண்டியதுதான் அட்டி, உடனே வேண பணத்தை அனுப்பிச்சிண்டு இருக்கேனே. பரீக்ஷையிலே ஆனர்ஸோடே தேறிட்டாளும். எல்லாரும் மெச்சிண்டாளாம். அங்கேயே ஆஸ்பத்திரியிலே ஒரு ஸர்ஜனுய் வச்சுக்கத் தயாராய் இருக்கான்னு சமாசாரமெல்லாம், இரண்டு மாஸத்துக்கு முந்தி எழுதினுன். எனக்குச் சந்தோஷம் இல்லையா?—என் குழந்தை இல்லையா? தங்கத்துக்கு மட்டும் என்ன குறைவு பண்ணிட்டேன்? மனம் கோணுமல், கேட்டதையெல்லாம் கொடுத்திண்டு இருக்கேனே. என்னைச் சாகச் சொல்றுள்.—நான் அவளைத் தங்கமாய் வளர்த்தேனே. அவள் மேலே எறும்பு ஊரினுல்கூடப் பார்த்துச் சகிக்கமாட்டேனே! பெத்தவன் இல்லையா?" என்று மேலே பேச முடியாமல் கஷ்டப்பட்டார். பிறகு, சமாளித்துக்கொண்டு, "அம்மா, சுசீலா! நீதான் அவளுக்கு எழுதி, நல்ல வார்த்தை சொல்லி, புத்தியைத் திருப்பணும். வேறே யார் சொன்னுலும் அவள் கேட்க மாட்டாள். இந்த உபகாரம் செய்யாத போனுல், எனக்குச் சாந்தியே இருக்காது" என்று கெஞ்சாத குறையாய்க் கேட்டுக்கொண்டார்.

"நான் கட்டாயம் எழுதறேன், மாமா!—நீங்களும் எழுதுங்கோ" என்ருள் சுசீலா, இளகிய மனத்துடன்.

"நான் எழுதாமலா இருப்பேன்? இரண்டு பேருக்கும் எழுதறேன்!"

"அண்ணு எப்போ வருவாராம்?"

"அவன் கடுதாசிகளிலே அந்தச் சமாசாரமே இல்லே ஐரோப்பா பூரா சுத்தணும்னு இருக்காம். வியன்ஞ நகரத்துலே குறைஞ்சது மூணு மாசமாவது இருக்கப் போருனும். இருக்கிறதைப் பார்த்தால், இன்னும் ஒரு வருஷத்துக்கு இந்தப் பக்கம் திரும்ப மாட்டான் போலி ருக்கு. அதுவரையிலும் தங்கமும் எட்டிப் பார்க்காதே யிருந்தால் எனக்கு எப்படி இருக்கும், சொல்லு!"

"நான் அவளுக்கு விவரமாய் எழுதறேன், மாமா!" என்று உறுதிமொழி சொல்லிவிட்டு, தகப்பனுருடன் தன் வீட்டுக்கு வந்துவிட்டாள்.

# 6

# புக்ககம்

சுசீலாவுக்கும் தங்கத்துக்கும் பல கடிதங்கள் போக்கு வரவாயின. சுசீலா எவ்வளவு போதித்தும் தங்கம் தன் அண்ணு சீமையிலிருந்து திரும்பி வந்த பிறகு தான் அந்த வீட்டில் கால் வைப்பதாகக் கண்டிப்பாய் எழுதி விட்டாள். அவள் பிடிவாதத்தால் சுசீலாவுக்கும் கோபந்தான் வந்தது. ஆனுல் என்ன செய்ய முடியும்?

இதற்குள் தன் பெற்ருேர்கள் தன் விவாகத்தைக் குறித்துத் தீவிரமாகச் செய்த ஏற்பாடுகள் அவள் மனத்துக்குக் கவலேயைக் கொடுத்தன. மிகவும் பொருத்த மான சம்பந்தங்கள் என்று அவள் 'நாயினு' நினேத்த இரண்டொரு வரன்களேயும் அவள் தட்டிவிட்டாள். அவள் உத்தேசம் அவளுடைய தகப்பனுருக்குத் தெரி

யாமல் போகவில்லை. ஆயினும், உலக அநுபவமுள்ள வராதலால், ஆஸ்தி பாஸ்திகளைப்பற்றியும் கவனிக்க வேண்டுமே என்று யோசித்துக்கொண் டிருந்தார். இந்த நிலைமையில், மாதர் சங்கத்தில் இதுவரையிலும் சாதாரண மெம்பராக இருந்த சுபத்திரா பூஷைய நாயுடு, இப்பொழுது உதவி காரியதரிசி ஆக்கப்பட்டாள். அந்த அம்மாள் நாயுடுவின் குடும்பத்துக்கு நெருங்கிய பந்து. சங்கத்துக்கு ஏராளமாய் அங்கத்தினர்களைச் சேர்க்கவேண்டிய வேலையில் ஈடுபட்டிருந்ததால், அவள் சுசீலாவையும் ஒரு மெம்பர் ஆக்கினுள். சுசீலாவுக்கும் பொழுதைப் போக்குவதற்கும், தன் அளவற்ற ஊக்கத்தைப் பயன்படுத்துவதற்கும் இப்போது அவகாசம் கிடைத்தது.

ஜானகிராம ஐயருக்கு மறு விவாகம் நடந்து மூன்று மாதங்கள் இருக்கும். ஒரு நாள் காலையில் ஆபீஸ் காகிதங்களைப் புரட்டிக்கொண்டு இருக்கும்பொழுது, 'மாமனுர்' அண்ணுசாமி ஐயர் திடீரென்று வந்து சேர்ந்தார். இரண்டு தடவை வந்து போகவே, மதராஸ் பிரயாணம் அவருக்கு வெகு சுலபமாய்ப் போய்விட்டது. விசாலம் புஷ்பவதி ஆகிவிட்டாள் என்றும், நாள் நக்ஷத்திரங்கள் எல்லாம் மிகவும் நன்ருய் இருந்தனவென்றும் நற்செய்தியைத் தெரிவித்தார்.

"அடுத்த மாசமே ஒரு நல்ல நாளைப் பார்த்து, அழைச்சிண்டு வந்து ஆத்தோடே ஆமாய், முகூர்த்தத்தை நடத்திடலாம்னு இருக்கேன்'—குழந்தை தனியாய் இருந்து பழக்கமில்லை. அதனுலே, எங்க ஆத்துக்காரி ஒரு பத்து நாள் இருந்துட்டுப் போனுல் தேவலைன்னு அபிப்பிராயப்படருள்.—"

"அதென்ன அப்படிச் சொல்றேள்? பத்து நாள் என்ன, இரண்டு மாசம் இருந்தால்கூட எனக்குச் சந்தோஷந்தான். இங்கே எனக்குத்தான் யார் இருக்

காள்?—பாகீரதியை இங்கே விட்டுட்டுப் போருப் போலே சொன்னேளே, அதுக்கு ஒண்ணும் ஆக்ஷேபணை இல்லையே?''

"ஆக்ஷேபணை—இல்லை'' என்று அண்ணுசாமி ஐயர் இழுத்தார்.

"சித்திகூட அப்படித்தான் சொன்னுள். எங்களுக்கும் இஷ்டந்தான். ஒண்ணுக்கொண்ணு துணையாய் இருக்கும். ஆனுல், உங்கள் சௌகரியம் எப்படியோ? உங்களுக்கு இஷ்டமில்லாததைச் செய்யப்படாதுன்னு எங்காத்துக்காரி தயங்கருள்.''

"அட, ராமா! அது எனக்கு எவ்வளவோ சௌகரியமாச்சே! என் மேலே ஏன் அந்த மாதிரி அபிப்பிராயம் வரணும்?'' என்று ஜானகிராம ஐயர் வருத்தப்பட்டார்.

"அடாடா! நீங்கள் ஒண்ணும் வித்தியாசமாய் எண்ணிக்காதங்கோ! உங்களைப்பத்தி நாங்கள் என்ன பேசிக்கிருேமோ, அதை உங்களுக்கு நேரிலே சொல்லப்படாது. அது முகஸ்துதி ஆயிடும். உங்களுக்கு இடைஞ்சல் பண்ணப்படாதுங்கிறதைத் தவிர வேருெண்ணுமில்லை. சித்தி, ஏதோ வாய் வார்த்தைக்குச் சொல்லியிருக்கலாம். நாளைக்கு, பெண்ணைக் கொடுத்துட்டு எங்கள் வீட்டுப் பாரத்தை எல்லாம் உங்கள்மேலே தள்ளருப்போலே சொன்னுல், மனசுக்குக் கஷ்டமா யிருக்குமேன்னுதான் அவள் பயப்படருள்.''

"ஒருத்தர் பாரத்தை இன்னெருத்தர் தாங்க முடியுமா? எல்லாத்தையும் தாங்கறத்துக்கும் பகவான் ஒருத்தர் இருக்காரே. இதைப்பத்தி வீணுய்க் கவலைப்பட வேண்டாம்னு சொல்லுங்கோ. நான் ஆபீஸுக்குப் போயிட்டால், விசாலம் தனியாய் உட்கார்ந்திருக்கணுமே. கூட பாகீரதி இருந்தால் எவ்வளவு சௌகரியமா யிருக்கும்! எங்க சித்தி நல்லவள்தான். ஆனுல் அவள் சொன்னதெல்லாம் வேதவாக்குன்னு

நினைச்சிண்டுடாதங்கோ.'' (ஐயருக்கு எங்கிருந்தோ தைரியம் வந்துவிட்டது.) "அவளுக்கு அறியாய உத்தண்டம், தான் பிடிச்ச முயலுக்கு மூணே காலுதான். நல்லதையும் செய்வாள். கெட்டதையும் செய்வாள். எல்லாம் ஒரு பேக்காத்து அடிச்சாப்போலதான். நிதானமே கிடையாது. இதோ பாருங்கோ. இந்த எதிர் வீட்டிலே இருக்கிற நாயுடு குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் இன்னிக்கி நேத்திக்கிப் பழக்கம் இல்லே. உத்தமமான மனுஷாள். நல்லது பொல்லாததுக்கு உயிரைக் கொடுப்பா, அவாளைக் கண்டால் இவளுக்குப் பிடிக்காது. வந்தபோதெல்லாம் அவா மேலே எரிஞ்சு எரிஞ்சு விழவேண்டியதுதான். இது எனக்கு தர்ம சங்கடம். இந்த எழவுக்கு நான் எங்கே போய் முட்டிக்கிறது?'' என்று ஜானகிராம ஐயர் நொந்துகொண்டார். அவர் பேச்சு அண்ணுசாமி ஐயருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. ''அப்போ அடுத்த மாசம் விசாலத்தை அழைச்சிண்டு வரதைப்பத்தி அந்த அம்மாகிட்டே பிரஸ்தாபிக்கவேண்டாமா?'' என்று அவர் தாழ்மையுடன் கேட்டார்.

"சொன்னால் சொல்லுங்கோ, இல்லாதபோனால் தலை போறது ஒண்ணுமில்லே'' என்று ஜானகிராம ஐயர் ஒரு போடு போட்டார். மாடியில் பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்த சுசீலா, எதிர் வீட்டில் வேற்றுக் குரலைக் கேட்டு, வராந்தாவுக்கு வந்து, அண்ணுசாமி ஐயரின் வரவைத் தெரிந்துகொண்டாள். பிறகு, "என்ன, மாமா, விசாலமும் வந்திருக்காளா?'' என்று அவள் ஜானகிராம ஐயரைக் கேட்டது அண்ணுசாமி ஐயரைத் திகைக்கச் செய்தது.

"இல்லே, அம்மா. எல்லாரும் அடுத்த மாசம் வராள்; தகவல் சொல்லத்தான் வந்திருக்கார்'' என்று அவர் அசடு தட்டச் சொன்னார். ''ஊஹூம், சரிதான்''

என்றாள் சுசீலா புன்முறுவலுடன். பிறகு, அண்ணுசாமி ஐயரைப் பார்த்து, "எனக்கு விசாலத்தோடு பேசணும்னு எவ்வளவோ ஆசையாய் இருந்தது; ஆனல் முடியாமல் போச்சு. எத்தனை நாளைக்கு பந்தோபஸ்து பண்ண முடியும்? எதிர் வீட்டுலே இருந்துக்கிண்டு, பழகாமல் இருக்கப் போறேமா? எதிராளாத்துலே ஒரு அக்காவை உனக்குக் கண்டுபிடிச்சேன்னு அவளண்டை சொல்லுங்கோ" என்று சிரித்த முகத்தோடு சொல்லிவிட்டுப் பத்திரிகையுடன் உள்ளே சென்றாள்.

"வாக்கு எவ்வளவு ஸ்பஷ்டம், முகத்துலே என்ன தேஜஸு! யாரா யிருந்தால் என்ன, ஸத்குலம் ஸத்குலந்தான்" என்றார் அண்ணுசாமி ஐயர்.

"என் பெண் தங்கம் புக்காத்துக்குப் போகிற வரையிலும், இரண்டும் எங்காத்துலேயேதான் வீட்டை நிர்த்தூளி பண்ணிண்டு இருக்கும்.—இந்தப் பெண்ணைக் கண்டால் எங்க சித்திக்குப் பத்தி எரியறது" என்றார் ஜானகிராம ஐயர் அருவருப்புடன். சுசீலாவின் ஆதரவைப் போக்கடித்துக்கொள்ள அவருக்கு இஷ்டமே இல்லை.

அண்ணுசாமி ஐயருக்குக் காமாக்ஷியம்மாளைப் பார்க்காமல் போவது செய்த நன்றியை மறப்பது போலத் தோன்றியது. முதல் முதலாகக் கல்யாணத்தை நிச்சயம் செய்தது அந்த அம்மாள்தானே? அவள் வைத்த பிச்சையால் அல்லவா தன் தங்கமான நிலத்தைப் போக்கியத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முடிந்தது? தன் குடும்பத்துக்குச் சாப்பாட்டுக் கஷ்டம் நீங்கியதற்கு மூலகாரணம் அவள்தானே?—இப்படி எல்லாம் அவர் மனம் வேலை செய்தது இப்பொழுது. ஆகவே, 'சித்தி'க்கும் பிள்ளைக்கும் ஆயிரம் கஷ்ட நிஷ்டூரங்கள் இருக்கலாம். அதைத் தாம் பொருட்படுத்தக் கூடாதென்று நினைத்து, அவர் காமாக்ஷி அம்மாளையும்கண்டு வணக்கத்

துடன் விஷயங்களைத் தெரிவித்து, பிறகு ஊருக்குச் சென்றார்.

ஜானகிராம ஐயர் நாட்களை எண்ணிக்கொண்டிருந்தார்! சாஸ்திரம் எப்பொழுதும் பொய்யாகாது. 'கிருகிணி' இல்லாதவீடு வீடாகுமா? ஒன்று, சந்நியாசியாக இருக்கவேண்டும்; அல்லது நான்கு பேரோடு குடும்பத்தில் 'கலகல'வென்று வாழவேண்டும். விசாலம் தங்கமான பெண். அவள் வீட்டில் இருந்தாலே போதுமே. அவள் முகத்தில் இருந்த சாந்தமும் பொறுமையும் சொல்லி முடியுமா! இப்பொழுது, ஐயருடைய மனப்பான்மை இவ்வாறாகத் திரும்பியது.

ஐந்து வாரங்கள் சென்றன. அண்ணுசாமி ஐயர் காரியத்துக்கு நான்கு தினங்கள் முந்தியே வருவதாக எழுதி, கடிதத்துக்கு பின்னோடு தாமும் குடும்பசகிதமாய் வந்து சேர்ந்தார். நிச்சப்தமாய், பேயடைந்தாற் போல் கிடந்த வீட்டுக்கு ஜீவகளை வந்தது.

அவர்கள் வரவை எதிர்பார்த்திருந்த சுசீலா தானே வந்து, அவர்களுடைய யோக க்ஷேமங்களை விசாரிக்கத் தொடங்கினாள். சமூகத்தில் பழகத் தெரிந்தவளாகையால், தன் சம்பாஷணையினால் அவள் அவர்களை வெகு சகஜமாக நடந்துகொள்ளும்படி செய்தாள். விசாலாக்ஷியின் முகத்தில் முன்னிலும் பன்மடங்கு அதிகமாகக் காந்தி வீசியது. ஜானகிராம ஐயருக்கும் தம்மை அறியாமலே குதூகலம் ஏற்பட்டது. தாமும் ஒரு யுவன் என்று நினைத்துக் கொண்டாரோ என்னவோ! அவர் தம் 'மாமியாரை'த் தங்களுடைய சொந்த வீடுபோல் பாவித்துக்கொண்டு, வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். பிறகு, சமையல் அறைக்குச் சென்று, சமையல்காரனிடம் அந்த அம்மாள் இஷ்டப்பட்டபடி சமையலைச் செய்து, அவளுக்கு மனம் கோணமல் பார்த்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்

டார்.—சமையல்காரனுக்கு மனதுநோகாமல் நடந்து கொள்ள வேண்டியது அவர் கடமை ஆகிவிட்டது!

பிறகு, ஹாலில் தாறுமாருகக் கிடந்த சாமான்களை எடுக்கச் சொல்லி, அவர் ஜமக்காளங்களை விரிக்கச் செய்தார். சமையல்காரனை அழைத்து, ஏதோ ரகசியமாய்ச் சொன்னதன் பேரில், "சரி, கிருஷ்ணனைக் கடைக்கு அனுப்பேன்.—கையிலே சில்லறை இல்லாத போனல் இதை மாத்திக்கோ!" என்று ஜேபியிலிருந்த பணப்பையிலிருந்து ஒரு பத்து ரூபாய்க் காகிதத்தைக் கொடுத்தார். என்றைக்கும் இல்லாத அவருடைய சுறுசுறுப்பைப் பார்த்து, சுசீலா, "என்ன மாமா, இருக்கிறதைப் பார்த்தால், இன்னிக்கு ஆபீஸுக்குப் போக மாட்டேள் போலிருக்கே" என்றுள் புன்சிரிப்புடன்.

"எப்படிப் போறதும்மா? வந்தவாளுக்குச் செளகரியம் பண்ணவேண்டாமா? இங்கே யார் இருக்கா? நீயுந்தான் கவனிச்சுக்கணும்."

"நானு? நான் ஒண்ணைத் தொட முடியுமா? இந்த வாசல்படியைத் தாண்டி, அந்தண்டை போக முடியுமா?—புரசைவாக்கம்பாட்டி வந்துட்டாளோ, சொல்ல வேண்டியதில்லே. இந்த ஆத்துக்குள்ளே நுழையவே விடமாட்டாள்" என்றுள் சுசீலா.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே.—சுசீலாவைப்பத்தி நீங்கள் ஆத்துலே சொல்லியிருக்கேளோ இல்லையோ?" என்ருர் ஜானகிராம ஐயர், அண்ணுசாமி ஐயரைப் பார்த்து.

"சொல்லியிருக்கேனே. அந்தக் குழந்தை சொன்னபடியே, எதிராளாத்துலே தங்கமான ஒரு அக்காள் தனக்கு இருக்காள்னு விசாலத்துக்குத் தெரியுமே" என்ருர் அண்ணுசாமி ஐயர்.

"நிஜம்மா, முதல்லே நம்பளவாள்னுதான் நான் எண்ணிண்டேன்" என்றுள் சீதாலக்ஷ்மி அம்மாள்.

"அப்போ, நான் உங்களவாள் இல்லையா, அம்மாமி?" என்று சுசீலா மறுக்கப்பட்ட சிறு குழந்தைபோல், துக்க நடிப்புடன் கேட்டாள்.

எல்லாரும் சிரித்தார்கள்.

"எங்களவாளுக்கு மேலே, அம்மா, நீ. உன் பிரியத்துக்கு எது இணைகட்டும்?" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள்:

"சரி, பார்க்கலாம்! ஸ்நானம் பண்ணிச் சாப்பாடு ஆகட்டும். சாவகாசமாய் வம்படிக்கலாம். மாமாவுந் தான் ஆத்துலேயே இருக்கப்போறார்" என்று சுசீலா வீட்டுக்குச் சென்றாள். ஜானகிராம ஐயரும் வந்தவர்களுக்குச் சௌகரியங்களைச் செய்யும் காரியத்தில் ஈடுபட்டார்.

இரண்டு மணி சுமாருக்கு, சுசீலா எதிர் வீட்டில் எட்டிப் பார்த்தாள். ஒரே நிச்சப்தமாய் இருந்தது. ரெயில் பிரயாணத்தில் இரவில் தூக்கமில்லாமல் கஷ்டப்பட்டு வந்ததால், எல்லாரும் அயர்ந்து தூங்குவதாகத் தெரிந்தது; ஆகவே, அவர்களைத் தொந்தரவு செய்யக் கூடாதென்று அரைகுறையாய் வைத்திருந்த புத்தகத்தைப் படிக்கலானாள். அவளுடைய படிப்பு சுவாரஸ்யத்தில், சீதாலக்ஷ்மியம்மாள் தன் இரண்டு பெண்களுடன் உள்ளே நுழைந்ததுகூட அவளுக்குத் தெரியவில்லை! திடுக்கிட்டு எழுந்தாள்.

"வாங்கோ, வாங்கோ—மாமாவும் வர்றா?" என்று சுசீலா ஆனந்தத்துடன் அவர்களை வரவேற்றாள்.

"இல்லை, அம்மா! அவாள் இரண்டு பேரும் மேலே ஏதோ பேசிண்டு இருக்காள்; எங்கே பார்த்தாலும் புஸ்தகமா யிருக்கு. படிச்சவாளுக்குத்தான் நாலும் தெரியும். என்னைப்போல மூடங்களுக்கு என்ன தெரியும், சொல்லு."

"அப்படிச் சொல்லாதங்கோ, மாமி. உங்களைப்போல எல்லாரும் இருந்தால் போரும்; படிச்சால்

மட்டும் புத்தி வந்துடுமா? தத்துப்பித்துனு, இங்கிலீஷிலே நாலு வார்த்தையைப் பேசிவிட்டால், ஆயிடுத்தா?—'' இப்பொழுது, சுசீலாவின் தாயாரும் வந்து அவர்களை அன்புடன் உபசரித்தாள்.

''நாற்காலியிலே உக்காருங்கம்மா.—அம்மா, சுசீலா! அவங்களுக்கு வெத்தலே பாக்குக் கொடு. கூடையிலே சாத்துக்குடிப் பழம் இருக்குது. அதையும் கொடு, தேங்காயையும் மறந்திடாதே. வயதாயிட்டுது. என்னாலே ஒண்ணும் செய்ய முடியல்லே!'' என்று அவள் தாயார் குறைப்பட்டாள்.

''அது சரி, அவாளுக்குப் பழத்தைக் கொடுத்துத் துரத்திடணும்னு பார்க்கிறயா? காபி, பலகாரம் எல்லாம் வை'' என்று அவள் தன் தாயாரை அதட்டுவது போல் பாசாங்கு செய்தாள். சீதாலக்ஷ்மியம்மாளுக்கு அசடு தட்டிற்று. ''ஐயோ! அம்மாமி பயப்படறதைப் பாருங்களேன்!'' என்று சுசீலா சிரித்தாள்.

''பயப்படாதங்கோ, அம்மாமி, பயப்படாதங்கோ! நீங்கள் கேட்டால்கூட நான் கொடுக்கத் தயாராய் இல்லே. சரியாய்ப் பழகி, ஒரு நாள்கூட ஆகல்லே. அதுக்குள்ளே, இந்தப் பாடு படுத்தறதே இது. இது ஒரு பேயாட்டமான்னு இருக்குன்னு நீங்கள் நினைக்கிறேள்—இல்லையா?''

''ஒரு நாளும் இல்லே. சில சிடுமூஞ்சிகளாட்டம் உன்னாலே இருக்க முடியாது. கலகலன்னு, வேடிக்கையாய் நாலு பேரோடே பேசிண்டு இருக்கனும் உனக்கு.—அது இருக்கட்டும்; சுசீலா மட்டும், எங்களாட்டம் ஏன் பேசறுள்?'' என்று அவள் தாயாரைக் கேட்டாள். ''முதல்லே எங்களைப் பரிகாசம் பண்றுளாக்கும்னு நினைச்சேன்.—ஆனால் அது அவளுக்கு ரொம்ப சகஜம்னு இப்போ தெரிஞ்சுடுத்து. உங்காத்துலே என்னவோ, தெலுங்குலே பேசிக்கிறேள். அது உங்கள் தாய்பாஷை;

நீங்கள் பேசறது எனக்கு அர்த்தம் ஆறதே ஒழிய, எப்படிப் பேசிக்கிறேனோ எனக்குத் தெரியாது. சுசீலா நாயுடுப் பொண்ணுன்னுல், யாரும் நம்பமாட்டாள்.''

''அப்படியா! அம்மா, இது என்னை மெச்சிக்கிறது இல்லை. உன்னைக் கேலி பண்ணறதாக்கும். ஆமாம், நினைச்சுக்கோ!'' என்று சுசீலா தாயாரைப் பார்த்துக் குறும்புத்தனமாய்ச் சொன்னுள்.

''இதேதுடீ! உன்னோடே பேச என்னுலே முடியாதம்மா.''

''அவள் உங்களவங்கள் பெண்தானம்மா. எங்களுக்கு ரொம்ப நாளாய்க் குழந்தைகள் இல்லாமலிருந்தது; ஒரு ஐயர் வீட்டிலே பொண்ணுக் குவிஞ்சு போச்சு. ஒண்ணை விலைக்கு வாங்கிக்கிட்டோம்!'' என்றுள் அவள் தாயார்.

''எவ்வளவு ரூபாயிக்கு, அம்மா?'' என்று சுசீலா கேட்டாள்.

''என்ன, ஒரு ஆயிரம் ரூபாயாவது இருக்காதா?''

''பொய் சொன்னுலும் பொருந்தச் சொல்லத் தெரியாதே உனக்கு!'' என்று தன் தாயாரின் தோள்பட்டைகளைக் குலுக்கிவிட்டு, அவள் உள்ளே சென்று பழ வகையராக்களை எடுத்து வந்தாள். பிறகு, தாய்மார் இருவரையும் பேச விட்டுவிட்டுச் சுசீலா விசாலாக்ஷியையும் பாகிரதியையும் அழைத்துக்கொண்டு போய், தான் இரண்டு பீரோக்கள் நிறையச் சேகரித்து வைத்திருக்கும் புஸ்தகங்களைக் காண்பித்தாள்.

''இந்தப் பக்கமெல்லாம் தமிழ்; அந்தப் பக்கமெல்லாம் இங்கிலீஷ். நீ எதுவரையிலும் படிச்சிருக்கே?'' என்று அவள் விசாலாக்ஷியைக் கேட்டாள். விசாலாக்ஷிக்கு வெட்கத்தால் முகம் சிவந்துவிட்டது. ''நான் அஞ்சாம் கிளாஸ் வரையிலுந்தான் படிச்சிருக்கேன். ஆனுல் தமிழிலே எந்தப் புஸ்தகமானுலும் படிச்சுடுவேன். எது

வேணும்னுலும் எழுதுவேன். இங்கிலீஷுதான் Cat, Mat, புஸ்தகத்துக்கு மேலே யாரும் சொல்லித்தரலே."

"இங்கிலீஷ் கிடக்கிறது. ஒரு வருஷத்துக்குள்ளே, ஸ்கூல் பைனலுக்குச் சமானமாய்த் தயார் ஆக்கிடறேன் பாரு!"

"நானும் கத்துக்கறேன்!" என்ருள் பாகீரதி, ஆசையுடன்.

"நீயுந்தான். விசாலத்தோடுகூட இருந்தால், உனக்கு மட்டும் வராதா?" என்ருள் சுசீலா ஆதரவுடன்.

"கஷ்டப்பட்டால் எதையும் கத்துக்கலாம். ஆனல் உங்களுக்குத்தான் சிரமம்" என்ருள் விசாலாக்ஷி.

"அது சரி, தங்கை அக்காளை எங்கேயாவது 'உங்களுக்கு, நீங்களுக்கு'ன்னு சொல்வாளோ?"

விசாலாக்ஷி தலை நிமிர்ந்து பார்த்துச் சிரித்தாள்: "உங்களோடே—"

"பார்த்தியா—மறுபடியும், 'உங்கள், உங்கள்'னு ஆரம்பிக்கிறயே" என்ருள் சுசீலா.

சகோதரிகள் இருவர்களுக்கும் சிரிப்பை அடக்க முடியவில்லை. விசாலாக்ஷியின் விசால விழிகள் அவளுடைய பரிசுத்தமான இருதயத்தில் புஷ்பித்த இரண்டு கமலங்கள்போல் இருந்தன. அவைகளில் ஜ்வலித்த அன்பையும் ஸாத்துவிகத்தையும் பார்க்கப் பார்க்க, சுசீலாவுக்கு அவள்மீது அளவற்ற அபிமானம் ஏற்பட்டது. கூடப்பிறந்தவர்கள், தம்பி தமையன்மார் இல்லாவிட்டாலும், இவளைப்போல் ஒரு தங்கையாவது தனக்கு இருக்கக் கூடாதா என்று அவள் மனம் ஏங்கியது. இப்பொழுது சீதாலக்ஷ்மியம்மாள் அவர்களை அழைக்கும் குரல் கேட்டது.

"நாங்கள் இங்கே வந்தது அவர்களுக்குத் தெரியாது; தேடப்போருள். ஒழிஞ்சபோது ஆத்துக்கு வாங்களேன்" என்று விடைபெற்றுக்கொண்டு சீதாலக்ஷ்மியம்மாள்

தன் பெண்களுடன் மாப்பிள்ளை வீட்டுக்குத் திரும்பினாள்.

மறுநாள், காமாக்ஷியம்மாளுக்குத் தகவல் அனுப்பப்பட்டது. அழைப்பை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த அந்த அம்மாள், ஓட்ட ஓட்டமாய் ஓடி வந்தாள். எடுத்த காரியத்தை முடித்துவிட்டபோதிலும், அதை 'ஸம்பூர்ணம்' செய்துவிட வேண்டுமென்ற விசாரம் அவளுக்கு இருந்தது. ஆனால், சம்பந்திகள் வந்த தினமே தனக்குச் சமாசாரத்தைச் சொல்லி அனுப்பாததைக் குறித்து அவளுக்குச் சற்று மனக் குறைதான். ஆனால், அதைக் காட்டிக்கொள்ளாமல் நடக்க வேண்டிய விஷயங்களைக் கவனித்தாள்.

யாரும் வேண்டாம். எங்காத்துக் குழந்தைகள் வரது தீராது. வேறே யாருக்கும் சொல்லவேண்டாம். நல்ல சமையலாய்ப் பண்றது. வேணுங்கற பக்ஷணங்களை வாங்கிக்கிறது. இந்த மகா பட்டணத்துலேதானு பக்ஷணங்கள் கிடைக்காது? வெண்ணெய் காய்ச்சின நெய்யிலே செஞ்சது தினுசு தினுசாய்க் கிடைக்குமே. நான் சாப்பிடப் போறேனு? சுமங்கலிகளுக்கும், சின்னஞ் சிறிசுகளுக்கும் ஆசாரம் என்ன?—என்ன சொல்றேள்?'' என்று அண்ணுசாமி ஐயரை, தலையை அசைத்து ஆமோதிக்கும்படிச் செய்தாள்.

''சரி, நாயுடுவாத்திலே மட்டும் கூப்பிட்டு, ஒருவேளை சாப்பாடு போட்டுடலாம். அவாள் மூணு பேர்தானே? கலியாணத்தின்போதுகூட அழைக்கவில்லை. இவ்வளவு பழகி, கூப்பிடாத போனல் நன்னு யிருக்காது!'' என்று ஜானகிராம ஐயர் மனுச் செய்தார்.

காமாக்ஷியம்மாளுக்கு வந்துவிட்டது கோபம். ''என்ன பேச்சுப் பேசறே! ஜாதியா? ஜனமா? எல்லாம் போக, அவாளுக்கு என்ன விருந்து? உனக்கும் ஒங்க அப்பா குணத்திலே பாதி இருக்கு!''

"அது இல்லை, சித்தி; அவாளுக்குத் தனியாய்ச் சமையல்—"

"இதோ பாரு, 'உன் இஷ்டம்போலப் பண்ணிக்கோ; அவாளைப் பந்தியிலே வச்சிண்டு சாப்பிடு. என்னைக் கேழ்ப்பானேன்!—" என்று காமாக்ஷியம்மாள் எழுந்து, விர்ரென்று போய்விட்டாள்.

ஜானகிராம ஐயர் தலையைச் சொரிந்துகொண்டார்.

யாருக்கும் தெரியாமலே முகூர்த்தம் நடந்துவிட்டது காமாக்ஷியம்மாளுக்கும் தெரியாமலே, சுசீலா வீட்டுக்கு விருந்துச் சாப்பாடு அனைத்தும் அனுப்பப்பட்டது. இதற்கும், அவர்களை வீட்டில் அழைத்துச் சாப்பாடு போட முடியாமல் போனதற்கு, அவர் சுசீலாவை ஆயிரம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டியதாக இருந்தது; அவர் இவ்வளவு ஜாக்கிரதையாய் இருந்தும், மறுநாள் நாயுடு வீட்டிலிருந்து காலித் தூக்குச்சட்டி திரும்பி வந்ததைக்கண்ட காமாக்ஷியம்மாள், ஒன்றுக்கு இரண்டாக விஷயங்களை ஊகித்துக்கொண்டாள். கோபம் பொங்கிப் போயிற்று; ஆனால் அதைக் காண்பித்துக்கொள்ள இஷ்டமில்லை; இனி அரை நிமிஷங்கூட அங்கே தங்கக் கூடாதென்று தீர்மானித்துக்கொண்டாள். நல்ல வேளையாய் அவள் சாப்பாடும் முடிந்துவிட்டது. "ஏண்டாப்பா, நான் ஆத்துக்குப் போறேனே. இனிமேல் என் வார்த்தையை நீ கேட்கவேண்டிய பிரமேயம் இல்லை. எங்கேயாவது நன்னா இருந்தால் சரி. இனிமேல் நான் இருக்கிறது இடைஞ்சலாய்க்கூட இருக்கும்" என்று அவள் நிஷ்டூரமாய்ச் சொன்னாள்.

"என்ன, சித்தி! அப்படிச் சொல்றே?"

"எப்படிச் சொல்றேன்? 'காரியம் எல்லாம் ஆயிடுத்து', நான் பாட்டுலே போலாம் இங்கறேன். இது ஒரு தப்பா?"

"இன்னும் ஒரு நாலுநாள் இருந்து போகப்படாதா? திடீர்னு என்ன நினைச்சுண்டே?"

"உன் சமாசாரமே, எல்லாம் திடீராத்தானே இருக்கு? நிமிஷத்துக்கு நிமிஷம் குணம் மாறிப்போறது. அந்தக் குப்புசாமிக் கடன்காரன் இருக்கானே இல்லையோ, யாரை வேணுலும் பந்தியிலே வச்சிண்டு சாப்பிட்டிண்டு. அது மாதிரி நீயும் இருந்தால் போச்சு!"

ஜானகிராம ஐயருக்கு விஷயம் சிறிது புரிந்தது. "நான் அப்படி யாரையும் பந்தியிலே வச்சிண்டு சாப்பிடல்லையே" என்றார்.

"இன்னும் அதுவேறே வேணுமா? நீ செஞ்சாலும் செய்வே. சரி, நான் புறப்பட்டுப் போறேன்!" என்று சொல்லி கொடியிலிருந்த ஒரு நார்மடியை எடுத்து மடிசஞ்சியில் வைத்துக்கொண்டு புறப்படத் தயாரானுள்.

"இது என்ன சித்தி! நாளைக்காவது போகலாம்" என்று ஜானகிராம ஐயர் வணக்கமாய்க் கேட்டுக் கொண்டார்.

காமாக்ஷியம்மாளுக்கு அடக்கி வைத்திருந்த கோபம் எல்லாம் உடைத்துக்கொண்டு வந்தது. "நாளைக்காவது, இன்னிக்காவதுடா! எனக்குப் போகணும்னு இருக்கு, நான் போறேன். எனக்கு வீடுவாசல் இல்லையா? குழந்தை குட்டிகள் இல்லையா? சின்னஞ் சிறுசுகளைத் தனியாய் விட்டுட்டு, எனக்கு இங்கே என்ன வேண்டியிருக்கு? உனக்குத்தான் ஜாதி இல்லை, ஜனம் இல்லை, எல்லாரையும் கட்டிண்டு நிக்கணும்" என்று எழுந்திருந்தாள்.

ஜானகிராம ஐயர் நடுங்கிவிட்டார். அண்ணுசாமி ஐயரும் சீதாலக்ஷ்மியம்மாளும் பிரமித்துப்போய் நின்றார்கள். தன் சித்தம்மை மேன்மேலும் அடுக்காமல் இருக்கவேண்டுமே என்று ஜானகிராம ஐயர் தவித்தார். உள்ளூற அவள் புரசைவாக்கம் போய்விட்டாலே நல்லது என்று அவருக்குப் பட்டது.

இந்தச் சம்பாஷணை சுசீலாவின் காதில் படாமல் இருக்கவேண்டுமென்று கடவுளை வேண்டிக்கொண்டார். வேலைக்காரன் கிருஷ்ணனைக் கையோடு மோட்டார் டிரைவரை அழைத்துக்கொண்டு வரும்படி துரத்தி, பேச்சுக்கு இடம் கொடுத்தால்தானே வம்பென்று வாசலில் நின்றுகொண்டார். இதற்குள் காமாக்ஷியம்மாளுக்குக் கோபம் சற்றுச் சமனமாகவே, அவள் சம்பந்திமார்களைப் பார்த்துச் சொன்னாள்: "நீங்கள் ஒண்ணும் வித்தியாசமாய் எண்ணிக்காதங்கோ. பூர்வஜன்மத்துலே எவ்வளவோ புண்ணியம் பண்ணியிருக்கத்தொட்டு, உங்களைப்போல சாதுக்கள் இடத்துலே அவனுக்குச் சம்பந்தம் கிடைச்சுது. உங்கள் மேலே எனக்கு ஒரு குறையும் இல்லை." பிறகு குரலைத் தாழ்த்தி, "இந்த எதிராளாத்துலே, ஒரு மலையாட்டம் நிக்கறதே, அதுக்கு இந்த வீட்டிலே எங்கேயும் இல்லாத சலுகை. 'மாமா'வாம்! 'அம்மாமி'யாம்! 'அண்ணு'வாம்! 'தம்பி'யாம்! எல்லாம் கூடப்பிறந்தாப் படிதான். ஆமாம், நான் இப்பவே சொல்றேன். நீங்கள் ரொம்ப ஜாக்கிரதையாய் இருக்கணும்" என்று பலவாறாக அவர்களுக்கு உபதேசம் செய்தாள். சீக்கிரமே மோட்டார் வண்டி வந்தது. ஜானகிராம ஐயர், வெகு பய பக்தியுடன் சித்தன்னையை வண்டியில் உட்கார வைத்து, வேண்டிய பக்ஷணங்களுடன் தாமும் வண்டியில் ஏறிக்கொண்டு புரசைவாக்கத்துக்குச் சென்றார்.

# 7

## பட்டண வாசம்

பத்துத் தினங்கள் தங்கியிருந்து போகலாமென்று நினைத்த அண்ணுசாமி ஐயர், ஜானகிராம ஐயரின் நிர்ப்பந்தத்தால் ஒருமாதத்துக்குத் தாமதிக்கும்படி நேரிட்டது. ஜானகிராம ஐயரின் அன்பும் சலுகையும் கரை

புரண்டு ஓடவே விசாலாக்ஷிக்குத் தனிமையாக இருக்க வேண்டுமே என்ற பயம் முற்றும் தெளிந்தது.

சுசீலாவும் அவளுடைய தாயாரும் பரோபகாரிகள் என்றும், அவர்களால் தன் குழந்தைகளுக்கு நல்ல ஆதரவு உண்டுஎன்றும், சீதாலக்ஷ்மி அம்மாள் நன்ருய் உணர்ந்து கொண்டாள். அவர்களிடம் விடை பெற்றுக்கொள்ளும் பொழுது, அவளுக்குக் கண் கலங்கிவிட்டது: "உங்களை நம்பித்தான் நான் குழந்தைகளை விட்டுட்டுப் போறேன். உங்களைத் தவிர, அக்கம்பக்கத்திலே அவாளுக்கு வேண்டியவாள் யார் இருக்காள்?" என்று அவள் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"நீங்கள் ஒண்ணும் கவலைப்பட வேண்டாம், அம்மாமி. நிம்மதியாப் போயிட்டு வாங்கோ" என்ருள் சுசீலா.

"நீ இருக்கிறபோது எனக்கு என்ன கவலை, அம்மா! அவளுக்கு அக்காவும் நீதான், அம்மாவும் நீதான். சிறுசுகள் சும்மா இருந்தாலும், வாரத்துக்கு ஒரு தடவை கடுதாசி போடும்படி பார்த்துக்கோ" என்று சீதாலக்ஷ்மி அம்மாள் தாம்பூலத்தைப் பெற்றுக்கொண்டு சென்ருள்.

மூன்று மாதங்கள் போனதே தெரியவில்லை. சுசீலாவின் கல்யாணம் பேச்சிலிருந்து நிச்சயத்துக்கு வந்துவிட்டது. கல்கத்தா கல்லூரியில் மனத் தத்துவத்தைக் குறித்து ஆராய்ச்சி செய்துகொண்டிருந்த மாப்பிள்ளை வரவேண்டியதுதான் தாமதம். அவனும் இரண்டு மாதங்களுக்குள்ளாகவே திரும்பி வருவதைச் சுசீலாவுக்கு ரகசியமாகத் தெரிவித்த போதிலும், அந்தச் சங்கதி அனைவருக்கும் தெரிந்துவிட்டது. பேச்சோடு பேச்சாய், "உனக்கு ரொம்ப நாளாய் அவரைத் தெரியுமா, அக்கா?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"அஞ்சு வயசுலேயிருந்தே தெரியும். பிறந்த இரண்டு மூணு வருஷத்துக்கெல்லாம் அப்பா, அம்மா இரண்டு

பேரையும் முழுங்கிட்டார். அவர் அப்பா ரொம்ப ஆஸ்தி ஒண்ணும் வைக்கலே. ஏதோ கொஞ்சம் இன்ஷ்யூரன்ஸ் பணம் வந்ததாம். அதை வச்சிண்டு, அவா பெரியப்பா, முன்னுக்குக் கொண்டுவந்துவிட்டார். ஆனால் எல்லாப் பரீக்ஷைகளிலேயும் முதல் கிளாஸ்தான். எவ்வளவோ 'ஸ்காலர்ஷிப்'கள் வாங்கினாராம்.''

''அப்படீன்னா என்ன அக்கா?''

''அதாவது, மாசத்துக்கு இவ்வளவு பணம்னு காலேஜிலேயே இவருக்குக் கொடுப்பாள்.''

''இவர் கொடுக்கிறதுக்கு பதிலாய் அவாகிட்டே யிருந்து வாங்கினாராக்கும்?—தேவலையே!''

''அதனாலேதான் இவ்வளவு தூரம் முன்னுக்கு வர முடிஞ்சுது'' என்றாள் சுசீலா பெருமையுடன்.

''உங்காத்துக்கு அடிக்கடி வருவாரா?''

''வராதே என்ன?'' என்று சுசீலா மெதுவாய்ச் சிரித்தாள். ''எனக்கு ஒண்ணுவிட்ட அத்தைபிள்ளைதானே? அவருக்குச் சின்ன வயசுலேயே இவ்வளவு கஷ்டம் வந்தூடுத்தின்னு, அவர்மேலே எல்லாரும் பிரியமாய் இருப்பாள்.''

''அப்படி இருக்கிறபோது, ஏன் அக்கா, உங்க 'நாயினா' அவ்வளவு யோசனை பண்ணினார்?''

''அது வேறே சங்கதி, விசாலம். எப்பவும் சொல்றேன் கேளு, பெரியவாளுக்குப் பணம்னா கொஞ்சம் ஆசைதான். அதுவும் நம்ப சுகத்துக்குப் பண்ணாப் போலே அவாள் நினைச்சிக்கிறாள். இரண்டு காரு, பெரிய பங்களா, மாசம் இரண்டாயிரம் மூவாயிரம் வரும்படி இருந்தால், நான் சுகமா யிருக்கலாமேன்னு அவருக்கு எண்ணம். அவர்மேலே நான் தப்பு சொல்ல மாட்டேன். ஆனால், இதெல்லாம் யாருக்கு வேண்டியிருக்கு? எனக்கு மனுஷாள் பிடிச்சால்தானே?''

''உன்னைவிடக் கறுப்போ, சிகப்போ?'' என்றாள் பாகீரதி புன்சிரிப்புடன்.

"என்னைவிடச் சிகப்பு. என்னைவிட எவ்வளவோ அழகு, போயேன்!"

"கறுப்போ, சிகப்போ, உனக்கு அவரைத்தான் பிடிச்சிருக்கு. அது நன்னுத் தெரிஞ்சு போச்சு. உன்னை விட எவ்வளவு பெரியவர்?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"மூணு வயசு இருக்கலாம்" என்று சொல்லும் போதே, அவளுக்குத் தொண்டையில் ஏதோ சிக்கிக் கொள்வதுபோல இருந்தது. பிறகு பேச்சை மறைக்க, சம்பந்தமில்லாமல் பேசினுள். "பாடம் சொல்லிக் கொடுக்கிற விதம் அவரண்டை யிருந்துதான் நான் கத்துக்கிண்டேன். மூணுமாசத்துலே, நீங்கள் இரண்டு பேரும் எவ்வளவு தயார் ஆயிட்டேள், பாருங்கோ! நான் சொன்னது வேடிக்கை இல்லை, விசாலம். இன்னும் ஆறு மாசத்துக்குள்ளே, உன்னை இங்கிலீஷ் பேப்பர் படிக்கும்படி பண்ணிவிடறேன், பார்.—மூணு பக்கத் துக்கு அர்த்தம் எழுதச் சொன்னேனே, எழுதினயோ?"

"எழுதினேன், அக்கா. கதையானதுனுலே, இப்படித் தான் அர்த்தம் இருக்கணும்னு ஊகிச்சுக்க முடியறது. அப்படி இருந்தும், நாலைஞ்சு வார்த்தைக்கு எனக்கு ஒண்ணுமே தெரியல்லை. உன்னைக் கேழ்க்கணும்னு 'மார்க்' பண்ணி வச்சிருக்கேன்."

"அதுக்கென்ன, பார்த்தால் போறது. தமிழ்ப் பத்தி ரிகை தினம் படிக்கிறயோ- இல்லையோ?"

"உம்."

"பாகீரதி?"

"அவள் ஒரு எழுத்தைக்கூட விட மாட்டாள். உங்கள் சங்கத்துலே நாளைக்கு யாரோ வீணை வாசிக் கிருளாமே. அது என் கண்ணுலே படல்லை. அவள் பார்த்துச்சொன்னுள்."

"ஆமாம், மாமாகிட்டே சொல்லிட்டு, உங்களையும் அழைச்சிண்டு போறேன். வீணை மட்டும் இல்லை. ஒரு அம்மாள் 'குழந்தைகள் வளர்க்கும் முறை'யைப் பத்திக் கூடப்பேசப்போருள். அதையும் கேழ்க்கலாம்" என்ருள் சுசீலா.

"ஆமாம், அந்தக் கவலை இப்போ யாருக்கு?"

"உனக்கு இப்போ இல்லாதபோனல் நாளைக்கு வராதா?" என்று சுசீலா சிரித்தாள்.

"போ, அக்கா! உனக்கு எப்பவும் கேலியும் விளையாட்டுந்தான்.—உங்கள் சங்கம் கிட்டத்தாண, ரொம்ப தூரமா?"

"கிட்டத்தான், மூணு தெருவு தாண்டணும். இரண்டு பர்லாங்குகூட இருக்காது. ஆனல், நீ ஏன் நடக்கணும்? காருலே கொண்டுவிடச் சொன்னல் போச்சு."

"ஆமாம், இதுக்கெல்லாம் கார் வேணுமா! எங்க ஊருலே எல்லாம் காரிலேதான் போயிண்டு இருந்தேனுக்கும்!"

"உங்கள் ஊர் சங்கதி என்னத்துக்கு? இது பட்டண வாசம். நீ நடந்துபோறதுக்கு மாமா சம்மதிக்கவே மாட்டார். இந்தச் சாக்குலே நானும் காரிலே போகலாம்."

"உங்காத்துலே ஏன் கார் வச்சுக்கலே, அக்கா?" என்று பாகீரதி கேட்டாள்.

"பணம் இருந்தால்ணு, அம்மா?" என்று சுசீலா கையை விரித்தாள்.

"நன்ன வேஷம் போடறே, அக்கா. கார் பழசாப் போச்சுன்னு வித்துட்டேளாம். உங்க நாயின புத்தம் புதுசாய் வாங்கணும்னு பார்த்திண்டு இருக்காராம்."

"உனக்கு யார் சொன்ன?"

"யாரோ சொன்ன; நான் சொன்னது நிஜந்தானே?"

"பலே! பலே! மாமா இன்னும் என்ன என்ன சொன்னர்? தினம் உனக்குப் பாடம் ஒப்பிச்சு ஆகணும்னு

சொல்லு'' என்று அன்புடன் விசாலாக்ஷியின் கன்னத்தை மெள்ளக் கிள்ளிவிட்டு, ''அடாடா! உன்னை நான் தொட்டுட்டேனே'' என்று தவறுசெய்தவள் போல் அவள் நடித்தாள்.

அன்பு ததும்பிக் கிடந்த, விசாலாக்ஷியின் விழிகள், சுசீலாவின் முகத்தை நிதானமாய்ப் பரிசோதித்தன; சந்தோஷப் பூரிப்பால் கன்னங்கள் குழிந்தன. தன் சொந்தத் தங்கையாக இருந்தால், சுசீலா அவளை வாரி எடுத்து, கன்னக் குழியில் முத்தமிட்டிருப்பாள்.—ஆனால், அவள் கூடப் பிறந்தவள் ஆகிவிடுவாளா?

சுசீலா, ஜானகிராம ஐயரின் அநுமதியின் பேரில், விசாலாக்ஷியையும் பாகீரதியையும் தன் சங்கத்தில் நடக்கும் வீணைக் கச்சேரிக்குச் சற்று முன்னதாகவே அழைத்துக்கொண்டு சென்றாள். கூட்டம் கூடும் இடம், புஸ்தக நிலையம், பத்திரிகைகள் படிக்கும் ஹால், விளையாட்டுக்காக அமைக்கப்பட்ட இடம், எல்லாவற்றையும் அவள் அவர்களுக்குக் காண்பித்தாள். விசாலாக்ஷிக்கு ஒரே வியப்பு. சிறிது அச்சமும் ஏற்பட்டது. ''அக்கா, எங்களை விட்டுட்டு, நீ குடுகுடுனு அங்கேயும் இங்கேயும் ஓடிப் போகாதே! ஆமாம்!'' என்று விசாலாக்ஷி எச்சரித்தாள்.

''உங்களை முன்னடியிலே, நல்ல இடத்துலே உக்காத்துகிறேன். அப்புறம் எனக்கு ஏதாவது வேலை இருக்கான்னு பார்த்துட்டுவறேன். நான் எம். ஏ. பாஸ் பண்ணினது வம்பாப் போச்சு. என்னை ஒரு கமிட்டிமெம்பர் ஆக்கிட்டாள். சகாயம் செய்யாத போனால், சுபத்திரம்மாளுக்குக் கோபம் வரும்.''

''முன்னடியிலே வேண்டாம், அக்கா!''

''ஏன், உன்னைக் கடிச்சுத் தின்னுடுவாளா?'' என்று சுசீலா சிரித்தாள்.

''உனக்கு எப்பவும் கேலிதான், அக்கா. வேளா வேளையே கிடையாது. இரண்டாவது வரிசையிலே உக்

காத்திடு. எங்கள் இரண்டுபேருக்கும் நடுவிலே ஒரு இடத்தைக் காலியாய் வச்சு, அப்புறம் அதுலே வந்து உக்காந்துக்கோ. ஆமாம், உனக்குப் புண்ணியம் உண்டு. இந்த இடத்துலே என்னை வம்புக்கு இழுக்காதே'' என்று விசாலாக்ஷி வருந்திக் கேட்டுக்கொண்டாள்.

சுசீலா அவர்களுடைய இஷ்டப்படியே அவர்களுக்கு ஆஸனங்களை அமர்த்திவிட்டு, தன் வேலையைக் கவனித்தாள். சங்கத்தில் பிரமுகர்களாய் இருந்தவர்கள், சுசீலாவின் அபிப்பிராயங்களைக் கேட்பதும், அவள் காகிதத்தில் விஷயங்களைக் குறிப்பதும், அவர்களோடு ஆலோசித்து, மேடையிலிருந்த மேஜை நாற்காலிகளை இப்படியும் அப்படியுமாய் இழுப்பதும், இவற்றையெல்லாம் பார்க்க, சுசீலாவுக்கு வெகு சந்தோஷமாய் இருந்தது. சுசீலாவை ஓர் அம்மாள் ஏதோ கேட்டதற்கு, அவள் மறுப்பதுபோல் தலையை அசைத்தாள். பிறகு, விசாலாக்ஷியும் பாகீரதியும் உட்கார்ந்திருக்கும் இடத்தைக் காட்டி, என்னவோ சொன்னாள். அதன்பேரில், சுபத்திரா பூஷைய நாயுடுவும் மேடையில் இருந்த மற்றும் சிலரும் விசாலாக்ஷியை உற்றுப் பார்த்தார்கள். இதைக் கவனித்த சபையில் இருந்தோர் சிலர், தலைகளைத் திருப்பி, அவள் புறமாகப் பார்த்தார்கள். விசாலாக்ஷிக்கு இது சற்று வேதனையைக் கொடுத்தது. "அக்கா வரட்டும். சொல்றேன்'' என்று அவள் கடிந்துகொண்டாள். வீணையுடன் பாடப்போகும் அம்மாள் வந்ததும், சுசீலா, தனக்காகக் காலியாய் வைத்திருந்த நாற்காலியில் வந்து உட்கார்ந்துகொண்டாள்.

"என்னைப்பத்தி என்ன, அக்கா, அவாளண்டை சொன்னே?'' என்று விசாலாக்ஷி உடனே கேட்டாள்.

"அட, ராமா! உன்னைப்பத்தி நான் ஒண்ணுமே சொல்லல்லையே!''

"பின்னே, ஏன் அவாள் முழிச்சு முழிச்சுப் பார்த்தாள்?''

"உன்னை எல்லாருந்தான் முழிச்சு முழிச்சுப் பார்ப்பாள்; அதுக்கு நான் என்ன செய்வேன்?"

விசாலாக்ஷி ரகசியமாய்ச் சுசீலாவின் துடையைக் கிள்ளினுள். "என்னைக் காட்டி, என்னமோ முணு முணுத்தே.—சொல்லாத போனுல் போயேன்?"

"அக்காமேலே இப்படிக் கோவிச்சுப்பாளா? அந்த வீணை வாசிக்கிற அம்மாளுக்குக் காலணுகூடக் கொடுக்கப் போறதில்லை; சங்கத்துக்காக, இனுமாய் - தமாஷாக்கூடன்னு வச்சுக்கோயேன் - வாசிக்கிருள். அவளுக்கும் பிரசங்கம் செய்யறவாளுக்கும் வந்தனுேபசாரத்துக்கு என்னைப் பேசச் சொன்னுள். 'ஒண்ணும் தெரியாத இரண்டு பாப்பாக்களை நான் அழைச்சிண்டு வந்திருக்கேன். நான் பக்கத்துலே இல்லாத போனுல், பயப்படுங்கள். வேறே யாரையாவது பேசச் சொல்லுங்கோ'ன்னு சொன்னேன்; இது ஒரு தப்பா?"

"உனக்கு, மீடிங்குலே எல்லாம் பேசத் தெரியுமா?" என்ருள் விசாலாக்ஷி.

"இவ்வளவு வாயாடியாய் இருக்கிறவளுக்குப் பேசத் தெரியாமல் இருக்குமா? காலேஜுலே பேசிப் பேசி எனக்குப் பழக்கம் உண்டு."

"என்ன பிரமாதம்? வம்பளக்க வேண்டியதுதானே! எங்கூர் ரெங்கிப்பாட்டி இவாளுக்குத் தாத்தாவாய்ப் பேசுவாள்!" என்ருள் பாகீரதி.

"அது என்னவோ அம்மா, எனக்குப் பயம். அங்கே போய் எல்லாருக்கும் முன்னுலே நிற்கக்கூட என்னுலே முடியாது" என்ருள் விசாலாக்ஷி.

"ஆமாம், இப்படிப் பயம் பயம்னு சொல்றவாதான், எல்லாரையும் ஓட ஓட விரட்டறது!" என்ருள் சுசீலா.

விசாலாக்ஷி வாய்திறவாமல் சுசீலாவைத் தலையெடுத்துப் பார்த்தாள்.

"எடுத்ததுக்கெல்லாம் கோபம்" என்று சுசீலா அன்புடன் அவளுடைய கையில் தன் கையைக் கோத்துக் கொண்டாள்.

இதற்குள் பிரசங்கம் ஆரம்பமாயிற்று. வெகு நாகரிகமாய் ஆடை தரித்திருந்த அந்தச் சீமாட்டி குழந்தைகள் வளர்ப்பதைப்பற்றித் தனக்குத் தெரிந்ததையெல்லாம் சொன்னாள். விசாலாக்ஷிக்கு அது சுவாரஸ்யமாகவே இல்லை. பிறகு கச்சேரி ஆரம்பமாயிற்று. எல்லாரும் ஆனந்தமாய்க் கேட்டுக் களித்தார்கள்.

திரும்பி வருவதற்கு, ஜானகிராம ஐயரின் கார் தயாராய்க் காத்துக்கொண்டிருந்தது. மூவரும் காரில் ஏறிக் கொண்டார்கள்.

"வீணைக் கச்சேரி, எப்படி இருந்தது?" என்று சுசீலா கேட்டாள்.

"நன்னாத்தான் இருந்தது. இந்தச் சங்கத்துலே நானும் சேரலாமோ?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"வயசு பதினெட்டு ஆகணும்னு இருக்கோ என்னமோ தெரியல்லே. கேட்டுச் சொல்றேன். மெம்பர் ஆகாது போனால் என்ன, என்னோடு நீ எப்போ வேணுமானாலும் வரலாம்."

"சந்தோஷமாய்ப் பாட்டுக் கேழ்க்கலாமென்று பார்க்கிறேன்."

"பாட்டுக்குன்னு, தனியாய் எத்தனையோ சபைகள் இருக்கு. போற வழியிலே காட்டறேன், பாரு. 'கிருஷ்ண கான சபா'ன்னு ஒண்ணு இருக்கு. அங்கே மாசத்துக்கு நல்ல கச்சேரியாய் இரண்டாவது நடக்கும். கதா காலக்ஷேபங்களும் உண்டு. அதுலே மெம்பராய்ச் சேரேன். பிரமாதம், மாசம் ரெண்டு மூணு ரூபாய்க்கு மேலே ஆகாது. மாமா அதுக்கு ஒண்ணும் ஆக்ஷேபிக்க மாட்டார்.—இதோ, இந்தச் சிகப்புக் கட்டடந்தான் அந்த ஸபா!"

"நீ அதிலே மெம்பரா?" என்றாள் விசாலாக்ஷி.

"அக்கா இல்லாதே இருப்பாளா?" என்ருள் பாகீரதி.

"இதோ, இந்தச் சமத்துக்காரிதான் சொல்ருளே. நீ யலே கெட்டிக்காரி!" என்று சுசீலா பாகீரதியைத் தட்டிக் கொடுத்தாள்.

கார் வீட்டண்டை வந்து நின்றது. தம் தம் வீட்டுக்குள் அவர்கள் நுழைந்தார்கள்.

## 8

# ஒரு பிரசங்கத்தின் விளைவு

சுசீலாவின் உற்சாக உழைப்பு வீண் போகவில்லை. விசாலாக்ஷியும் அவள் தங்கையும் படிப்பில் நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்துகொண்டே வந்தார்கள். சகோதரிகள் இருவரும் நல்ல புத்திசாலிகள்; குணவதிகளுந்தான். ஆயினும், விசாலாக்ஷியிடத்தில் மட்டும் சுசீலா ஓர் அலாதியான வசீகரத்தைக் கண்டாள். அது அன்போ தியாக குணமோ, பொறுமையோ, அல்லது எல்லாம் கலந்தவையோ, எப்படிச் சொல்லுவது? அவர்களின் முன்னேற்றம் சுசீலாவுக்கே ஆச்சரியத்தைக் கொடுத்தது. பள்ளிக்கூடங்களில் கையாளும் முறையே தவறு என்று அவளுக்குப் பட்டது. விசாலாக்ஷி அடைந்த பயிற்சியைப் பெற, அவள் நான்கு வருஷங்களாவது பள்ளியில் காலத்தைக் கழித்திருப்பாள்! ஆனுல், விசாலாக்ஷிக்கு வயது பதினைந்து நிரம்பிப் பதினுறு பிறந்தது என்பதை அவள் கணக்கில் எடுத்துக்கொள்ள மறந்துவிட்டாள். ஒரு நாள், விசாலாக்ஷி புதுப் பாடத்தைப் படித்துக்கொண்டிருந்தாள். சுசீலா அதைக் கவனித்துக் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது, அவளுக்குத் தன்னையும் அறியாமல் சிரிப்பு வந்தது.

"ஏன் அக்கா, சிரிக்கிறே?" என்றாள் விசாலாக்ஷி. தான் ஏதாவது பிசகாய் வாசித்தோமோ என்று அவளுக்குப் பயம்.

"ஒண்ணுமில்லே. இன்னும் கொஞ்சகாலம் போனால் நீ என்னையும் மிஞ்சிடுவேன்னு தோண்றது."

"என்னை ஏமாத்தப் பார்க்கிறயே!"

"இப்படித்தான் ரொம்ப சமர்த்துகள் திடீர்னு ரொம்ப அசடுகள் ஆயிடும் போலிருக்கு—நிஜம்மாச் சொல்றேன். நீ வாசிச்ச 'ஜோர்'லே இருந்து, இனிமேல் உனக்கு யார் தயவும் வேண்டாம்னு தோணித்து. இதே மாதிரி நீ இன்னும் ரெண்டு வருஷம் படிச்சயோ, எம்.ஏ. பாஸ் பண்ணினவாள்கூட, உங்கிட்டே ஒண்ணும் பண்ண முடியாது."

"உன்னோடே பேச' என்னாலே முடியாது, அக்கா. சரி, இன்னிக்கிப் படிச்சது போதும்" என்று விசாலாக்ஷி புஸ்தகத்தை மூடிவைத்தாள். பிறகு, "இந்த ஞாயிற்றுக் கிழமை, யாரோ வங்காளத்துலேயிருந்து, லீலா ராணீன்னு ஒருஅம்மா வந்து உங்கள் சங்கத்துலே பேசப் போறான்னு சொன்னயே,—என்னையும் அழைச்சிண்டு போறயா?" என்றாள்.

"கட்டாயமாய்!"

"எவ்வளவோ படிச்சிருக்காள், என்ன என்னமோ செய்திருக்காள்னு சொன்னயே, அவள்தானே அக்கா?" என்று பாகீரதி கேட்டாள்.

"அவளேதான். ஸ்திரீ தர்மத்தைப்பத்திப் பேசப் போறாள். அதுலே உனக்கு என்ன புரியும்?" என்று சுசீலா பாகீரதியைக் கேட்டாள்.

"எல்லாருக்கும் புரியறது, எனக்கும் புரியும்.—அவளுக்குத் தமிழ் தெரியுமா?"

"ஊஹூம். இங்கிலீஷிலேதான் பேசுவாள்."

"சரிதான்; அப்போ எனக்கு மட்டும் என்ன புரியும்? அவள் வாயைப் பார்த்திண்டு உக்காந்திருக்க வேண்டியதுதான்'' என்றாள் விசாலாக்ஷி.

"இல்லை, இல்லை! எல்லாருக்கும் தெரியும்படி சௌந்தரம்மாள் தமிழிலே சொல்வாள். லீலா ராணி ரொம்பப் பெரிய மனுஷி. ஒரேயடியாய்த் தலைகீழே விழணுமிங்கறவாளைப் போல இல்லை. நம்ப சம்பிரதாயங்களை ஒட்டியே, சீர்திருத்தங்கள் செய்யணும் என்கிறது அந்த அம்மாளுடைய அபிப்பிராயம். பெரிய குலத்தைச் சேர்ந்தவள். ஏழைகளுக்காக ரொம்பப் பாடுபட்டிருக்காள். அந்த அம்மாளைக் கௌரவப்படுத்தறத்துக்காக, அன்னிக்கி ஒரு 'டீ பார்ட்டி'கூடக் கொடுக்கிறாள்.—காபி பலகாரம் எல்லாம் உண்டு..."

"ஐயையோ! அப்படியானால், நாங்கள் வரவில்லை. காலணாகூடக் கொடுக்காதே, எப்படி வறது?...யாராவது எதுவாவது சொன்னால், கஷ்டமாக இருக்கும், அக்கா, வேண்டாம்'' என்றாள் விசாலாக்ஷி.

"அடி அசடே, மெம்பர்கள் சிநேகிதாளை அழைச்சிண்டு வரலாம். எல்லாரும் சந்தா போட்டுப் பண்றோம்; பார்க்கப்போனால், ரொம்பப் பேரைவிட, நான் அதிகமாகவே கொடுத்திருக்கேன். யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டாள். அப்படி இருந்தால் நான் அழைச்சிண்டு போவேனா?''

"என்னையும் மெம்பர் ஆக்கிவிடுன்னால், அதுவும் முடியாதுங்கறே'' என்று விசாலாக்ஷி சலித்துக்கொண்டாள்.

"இன்னும் ஒரு வருஷம் போனால், சேர்த்துப்பான்னு நினைக்கிறேன். அதுவரையிலும் நீ பாட்டுக்கு என்னோடு வந்திண்டு இருக்கலாம். ஒருத்தரும் ஒண்ணும் சொல்ல மாட்டாள். அப்புறம், மாமா வேறே சம்மதிக்கணும்?''

"அவர் ஒண்ணும் சொல்ல மாட்டார். சேர்ந்தால் என்ன தப்பு?'' என்று விசாலாக்ஷி விசாரித்தாள்.

"ஒரு தப்பும் இல்லை. சில புருஷாளுக்குப் பிடிக்கும், சில பேருக்குப் பிடிக்காது. பொம்மனாட்டிகளும் நாலும் தெரிஞ்சு, புருஷாளுக்குச் சரி சமானமாய் இருந்து, ஒரு குடும்பத்துலே இருக்கிற கஷ்ட சுகங்களை யெல்லாம் கூட்டாளியாட்டம் ஏத்துக்கிண்டுப் போகணும்னு சிலபேர் ஆசைப்படுவாள். சில பேருக்கு, 'பொம்மனாட்டிக்கு ஒண்ணுமே தெரியப்படாது, தெரிஞ்சால் அதிகப்பிரசங்கி ஆயிடுவாள்; அவள் அடுப்பங்கரையிலேயே இருந்து கிடக்கணும்னு' இருக்கும். புருஷாளைச் சொல்லுவானேன், பொம்மனாட்டிகளிலேயே, ரொம்பப் பேருக்குப் பெண்கள் படிக்கிறது இஷ்டமில்லையே. உங்க புரசைவாக்கத்துக் கிழவியை எடுத்துக்கோயேன்."

"ஆமாம், போயும் போயும் அந்தப் பாட்டியைத்தான் சொல்லணும்!" என்றாள் விசாலாக்ஷி.

"உனக்குத் தெரியாது. நம்ப சமூகத்துலே அவளைப் போல இருக்கிறவாள்தான் ஜாஸ்தி."

"அந்தச் சங்கத்துலே 'என்ன சொல்லிக் கொடுப்பாள், அக்கா?" என்று பாகீரதி கேட்டாள்.

"நீ ஒருத்தி! ஒரே நாளிலே ஐம்பது வயசுக்காரி ஆயிடணும்னு பார்க்கறே. விசாலத்துக்கே புரிஞ்சுக்க முடியாதே. உனக்குச் சொன்னால், எப்படித் தெரியும்?"

"எல்லாம் தெரியும். எதைத்தான் சொல்லிக் கொடுப்பாளோ—"

"நீ பெரிய வம்புக்காரியடி அம்மா. சொல்றேன், கேளு—பிள்ளை வீட்டுக்காராள் வரதக்ஷிணே, வரதக்ஷிணேயின்னு கொள்ளையடிக்கிறாளே அது தப்புன்னு சொல்றாள்—"

'அது நியாயந்தானே, அக்கா?" என்றாள் விசாலாக்ஷி.

"நம்ம ஊருலே பொம்மனாட்டிக்கு நியாயமாய் இருக்கிறது புருஷனுக்கு நியாயமாய் இல்லையே. அதுக்காகத்

தானே இந்தச் சங்கம் எல்லாம் ஏற்படறது?—அப்புறம் கேளு, பாகீரதி. ஒரு குடும்பத்துலே, அண்ணன் தம்பி, அக்கா தங்கை எல்லாரும் இருக்கான்னு வச்சுக்கோ. இப்போ இருக்கிற வழக்கப் பிரகாரம், குடும்பத்துலே இருக்கிற ஆஸ்தியிலே பிள்ளைகளுக்குத்தான் பங்கு உண்டு. பெண்களுக்கும், பிள்ளைகளோடு பிள்ளையாய்ச் சமானமாய்ப் பங்கு தரணும்னு சங்கம் கேழ்க்கிறது.—புரிஞ்சுதா?''

''உம்'' என்று பாகீரதி பலமாய்த் தலையை அசைத்தாள்.

''வால் மாத்திரம் பாக்கி இருக்காக்கும்?'' என்றாள் சுசீலா புன்முறுவலுடன்.

''போ, அக்கா!'' என்று பாகீரதி ஆக்ஷேபித்துக் கொண்டு இருக்கும்போதே, விசாலாக்ஷி குறுக்கிட்டு. ''இதுலேயும் என்ன தப்பு இருக்கு? ஒவ்வொரு ஆத்துலே இந்தப் புருஷப் பிள்ளைகள் பண்ற அட்டகாசம் எனக்குத் தெரியும், அக்கா. எங்க ஊருலே பெரிய பண்ணை வீடுன்னு ரொம்பப் பணக்காரர் ஒருத்தர் இருக்கார். அவருக்குப் பொண்கள் ஜாஸ்தி. பிள்ளைகள் மட்டும் இரண்டே பேர்தான். அக்கா தங்கைகள் வீட்டுக்கு வந்துவிட்டால், அதுகள் என்ன ஹிம்ஸைசெய்யும் தெரியுமா?—இத்தனைக்கும் அவாளெல்லாம் இரண்டு மூணு குழந்தைகளைப் பெத்தவாள். செல்லம் இங்கறவள் அடிக்கடி எங்க அம்மாகிட்டே வந்து அழுததை நான் பார்த்திருக்கேன். சின்னவன் சொல்லுவானும்: 'போன வருஷம். பெரியவள் வந்து சுருட்டிக்கிண்டு போனுள்; இப்போ இவள் வந்துட்டாள். ஒருத்தர் மாத்தி ஒருத்தர் வீட்டைக் குட்டிச்சுவர் ஆக்கிடுங்கோ!'— இப்படீன்னல், அவளுக்கு மனசு எப்படி இருக்கும், அக்கா? அது அவள் பிறந்தவீடு இல்லையா? அவளுக்கும், அவாள் அப்பா அம்மாதானே? உங்கள் சங்கம் எனக்குப் பிடிச்சிருக்கு. நான் சேரத்

தான் போறேன்'' என்று விசாலாக்ஷி கண்டிப்பாய்ச் சொன்னாள்.

''மாமா சம்மதிக்க வேண்டாமா?''

''அவர் ஒண்ணும் சொல்லமாட்டார். ஐயோ பாவம்! அவரை ஏன் இழுக்கறே?'' என்றாள் விசாலாக்ஷி.

''அப்படியா!'' என்று சுசீலா சிரித்த முகத்தோடு விசாலாக்ஷியை உற்றுக் கவனித்தாள். ஆனால் விசாலாக்ஷிக்குத் தன் முகபாவத்தைக் காட்டிக்கொள்ள இஷ்டமில்லை. தலையைக் குனிந்தாள்; ஆதாரமின்றித் தவிப்பவள்போல் சுசீலாவின் கைகளைப் பிடித்துக்கொண்டாள். குனிந்த தலை சுசீலாவின் தோள்மீது சாய்ந்ததென்றே சொல்லவேண்டும். பிறகு, தழுதழுத்த குரலில் ''சில வேளையிலே, எனக்கு ஒண்ணுமே புரியமாட்டேங்கறது, அக்கா!'' என்று சொன்னாள்.

சுசீலா எல்லாவற்றையும் புரிந்து கொண்டவள் போல், அவளை அன்புடன் தட்டி ஆதரித்தாள். அந்த ரங்கத்தில், இருவருக்கும் மாசற்ற விசுவாசம் அதிகரிக்க அதிகரிக்க, வேற்றுமை என்ற உணர்ச்சி விலகிக் கொண்டே வந்தது.

ஞாயிற்றுக்கிழமை, லீலா ராணியின் பிரசங்கத்தைக் கேட்பதற்கு மாதர்கள் தாராளமாய் வருவார்களென்று தெரிந்ததால், முன் தடவையைவிடச் சீக்கிரமாகப் போக வேண்டுமென்று விசாலாக்ஷி வற்புறுத்தினாள். அவள் இஷ்டப்படியே, சுசீலா அவர்களை ஒரு மணிநேரம் முன்னதாகவே அழைத்துச் சென்றாள். எதிர்பார்த்தவாறு, தேநீர் விருந்து வெகுசிறப்புடன் நடைபெற்றது. ஆனால் விசாலாக்ஷிக்கு மட்டும் தேநீரைப் பருகுவதுகூட ஒரு தகுதியற்ற காரியத்தைச் செய்வதுபோல் இருந்தது. அவள் மனோபாவத்தை அறிந்த சுசீலாவுக்குச் சிரிப்புச் சிரிப்பாக வந்தது. ''போதும் உன் சிரிப்பு! ஆத்துலே போய்ப் பார்த்துக்கலாம்'' என்று விசாலாக்ஷி அவளைக்

கண்டிக்க, அவள் மேலும் அதிகமாய்ச் சிரித்தாள். அதன் பேரில், விசாலாக்ஷியாலும் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

சபை ஆரம்பித்தது. தலை புடலம்பூப்போல் நரைத்திருந்த ஓர் அம்மையார் அக்கிராசனத்தை வகித்தாள். லீலா ராணி பிரசங்கத்தைத் துவக்கினாள். சௌந்தரம்மாள் அவள் சமீபத்தில் நின்றுகொண்டு, அதைத் தமிழில் மொழிபெயர்த்தாள்; லீலா ராணிக்குச் சுமார் ஐம்பது பிராயம் இருக்கும். நீலக் கரைபோட்டு, வெள்ளை வெளேர் என்று தும்பைமலர் போல் இருந்த நூல் ஆடையை அணிந்திருந்தாள். தேகத்தில் ஒருவிதமான ஆபரணமும் இல்லை. உயர்ந்த கல்வியினாலும், உண்மையான சமூகத் தொண்டினாலும் ஏற்பட்ட பண்பு அவளுடைய முகத்துக்கு ஒரு தனிமையான சோபையைக் கொடுத்தது. மெல்லிய குரலில், நிதானமாக விஷயங்களை எடுத்துச் சொன்னாள். ஐரோப்பிய தேசங்களில் மாதர் சங்கங்கள் உண்டானதற்குக் காரணங்களையும், அதே கிளர்ச்சி நமது தேசத்தில் ஏற்பட்டதற்குக் காரணங்களையும் விவரமாக - சிறு குழந்தையும் தெரிந்துகொள்ளும்படிச்-சொன்னாள். சில விஷயங்களில், உலகிலுள்ள மாதர்கள் அனைவருக்கும் ஒரேவிதமான குறைகள் இருந்தபோதிலும், மற்றச் சில விஷயங்களில், அவைகள் தேசாசாரம் மதாசாரத்துக்குத் தக்கவாறு வேறுபட்டிருந்தால், எல்லாவற்றிலும், அந்நிய தேசத்தார்களை அவர்கள் எவ்வளவு நாகரிகத்தை அடைந்திருந்தபோதிலும் சரி, பின்பற்றுவது தவறு என்று சொன்னாள். உதாரணங்களை அடுக்கு அடுக்காக, வெகு அழகாய், மனத்தில் பதியும்படி சொல்வதை நிச்சப்தமாய், சுவாரஸ்யத்தோடு கேட்டுக்கொண்டிருந்தவர்களுக்குப் பொழுது போனதே தெரியவில்லை. விசாலாக்ஷி ஆனந்தத்தால் பூரித்தாள்; தெரிந்துகொள்ள வேண்டிய சமாசாரங்கள் இவ்வளவு இருக்க, ஒன்றுமே

தெரியாமல் மூடத்தனமாய்க் கிராமங்களில் காலத்தைக் கழித்துவந்த பெண்களை நினைத்து வருத்தப்பட்டாள்.

லீலா ராணியின் பிரசங்கம் முடிவுக்கு வந்துகொண்டிருந்தது. வரவர அவளுடைய வார்த்தைகளில் உருக்கம் அதிகரித்துக்கொண்டே வந்தது.

"பண்டைக் காலத்துச் சம்பிரதாயங்களில் வேர் ஊன்றினவள் என்று நம் சகோதரிகளிலே சிலர் என்னை ஏசுவது எனக்குத் தெரியும். நான் அதை மறுக்கவில்லை. நம்முடைய சம்பிரதாயங்களில் பல ஆயிரக்கணக்கான வருஷங்களின் அநுபவப்பயனாக ஏற்பட்டுள்ளன. ஆகையால் அவைகள் எல்லாவற்றையும் நாம் எளிதில் புறக்கணிக்கக் கூடாது. ஒரு விஷயத்தை எடுத்துக்கொள்வோம். மேல்நாட்டில், ஒருமாது கல்யாணமில்லாமல் கன்னியாக வாழ்நாளைக் கடத்திவிடலாம், அந்தச் சமூகத்துக்கு அதுஒரு தவறாகாது. ஆனால், நமது தேசத்தில், மணந்து, கன்னி கழிந்து, 'நானும் ஒரு தாய்' என்று சொல்ல முடியாத பெண்ணின்மேல் நமக்கு என்ன கௌரவம் இருக்கும்? மேல்நாடுகளில் ஸ்திரீகள் உத்தியோகத்துக்கும் தொழிலுக்கும் சண்டை போடுவதற்குப் பல காரணங்கள் உண்டு. அவைகளை விஸ்தரிக்க இப்பொழுது நேரம் இல்லை. நம்முடைய தேசத்தைப்பற்றிய வரையில் சமூகத்தில் கௌரவமாய்த் தாய் ஸ்தானத்தை வகிப்பதைவிட உயர்ந்த உத்தியோகம் நம்முடைய பெண்களுக்கு இல்லை என்பது என்னுடைய கருத்து. இதனால், பெண்கள் குழந்தைகளைப் பெற்றுக்கொடுக்கும் யந்திரங்களாக மாறவேண்டுமென்பது என்னுடைய எண்ணமே இல்லை. வீணாகத் துர் அபிப்பிராயப்படாதீர்கள்; நமது சமூகத்தில் ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் கௌரவம் இருந்தது. பரமேச்வரனையே அர்த்தநாரீ என்று அழைக்கிறோம் அல்லவா? ஆகையால் இடைக்காலத்தில் புகுந்துள்ள அக்கிரமங்களைப் போக்கடித்து, நமது உரிமைகளை நிலை

நாட்டுவது நம்முடைய கடமையாகும். உதாரணமாக இன்றைக்கும் பணக்கொழுப்பாலும் காமவெறியினாலும், அறுபது வயதானபோதும் ஆடவர்கள் விவரம் தெரியாத சிறு பெண்களை மணந்துகொள்வதைக் காண்கிறோம். இது எந்த நீதியைச் சேர்ந்தது? இப்படிப்பட்ட துன்மார்க்கர்களுக்கு ஜெயில் சிக்ஷை கொடுத்தாலும் அது மிகையாகுமா?—" என்று சொல்லிக்கொண்டே போய்ப் பிரசங்கத்தை முடித்தாள்.

ஆனால், இதற்குப் பிறகு, அவள் பேசியதில் ஒரு வார்த்தைகூட விசாலாக்ஷியின் காதில் விழவில்லை. தலை 'கிறு கிறு'வென்று சுழலுவதுபோல் இருந்தது. உடம்பெல்லாம் வேர்த்துவிட்டது; சுசீலாவின் கைகளைப் பிடித்துக்கொண்டாள்.

சுசீலாவுக்கோ - அவள் சங்கடத்தைச் சொல்லி முடியாது. தன் அறிவில்லாத்தன்மையை நொந்துகொண்டாள். பிரசங்கத்துக்கு அழைத்து வந்தது எவ்வளவு பிசகாய்விட்டது! அவளைச் சங்கத்தில்கூடச் சேர்க்க முயன்றோமே! மாதர் சங்கப் பிரசங்கங்களில் இவ்வித விஷயங்களைத் தவிர, வேறு எதைப்பற்றிப் பேசுவார்கள்? எவ்வளவு அறிவீனம்! ஆங்கிலப் பழமொழி சொல்வதுபோல, தூங்கும் நாய்களை எழுப்பலாமா?' அவள் விசாலத்தின் மீது வைத்திருந்த அன்புக்குச் செய்ய வேண்டிய உபகாரம் இதுவா? அவளால் வேதனையைச் சகிக்க முடியவில்லை; பல்லைக் கடித்துக்கொண்டு, வந்த ஞேபசாரம் எப்பொழுது ஒழியும் என்று காத்திருந்தாள்; பிறகு விசாலாக்ஷியை அன்புடன் அழைத்துக்கொண்டு போய், மோட்டார் வண்டியில் ஏற்றினாள். வண்டி புறப்பட்ட பிறகு, 'பிரசங்க மேடையிலே, ஆயிரத் தெட்டு சொல்வார்கள். இதெல்லாம் ஏட்டுச் சுரைக்காய்" என்று சமாதானப்படுத்துவதுபோல் சுசீலா உளறினாள்.

"ஹூம்! ஆமாம், அக்கா" என்று விசாலாக்ஷி சொன்னது, சுசீலாவைச் சந்தோஷப்படுத்துவதற்குப் போல் இருந்தது.

வீடு வந்ததும், சுசீலா தன்னை அறியாமல், விசாலாக்ஷியைக் கட்டி அணைத்து, கன்னத்தில் தட்டிக் கொடுத்து இறக்கிவிட்டாள்.

அன்றிரவு சகிக்க முடியாத தலைநோயாக இருந்ததால், விசாலாக்ஷி ஆகாரமில்லாமலே படுத்துக்கொண்டாள். பாகீரதிக்குத் தன் தமக்கையின்பாதை புரிந்தும் புரியாமலும் இருந்தது.

# 9

# தோழியின் பிரிவு

இந்த வாழ்க்கையில் காலம் ஆற்றாத மனப்புண் கிடையாது. சிலவற்றுக்குப் பத்துநாட்கள் போதும்; சிலவற்றுக்குப் பத்து வருஷம் போதாது. இரண்டு வாரங்களுக்கெல்லாம், விசாலாக்ஷியின் மனம் பழைய நிலைமையை அடைந்தது. மறுபடியும், அவள் வித்தியாப் பியாசத்தில், மும்முரமாய் உழைக்க ஆரம்பித்தாள்.

தன்னையும் விசாலாக்ஷி மிஞ்சிவிடுவாள் என்று சுசீலா விளையாட்டாகச் சொன்னது, உண்மையில் நிறைவேறும்போல் இருந்தது. இப்பொழுதெல்லாம், விசாலாக்ஷி சதா புஸ்தகமும் கையுமாகவே உட்கார்ந்திருந்தாள்; சுசீலா சேகரித்து வைத்திருந்த தமிழ்ப் புத்தகங்கள் அனைத்தையும் படித்துவிட்டாள் என்றே சொல்ல வேண்டும். ஒரு நாள் விசாலாக்ஷி, பத்திரிகையில் மாகாண வாரியாகப் பிரசுரமான நமதுதேச ஜனத்தொகையையும் ஆண், பெண் மக்களாகப் பிரித்திருந்த எண்ணிக்கையையும், அதில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் தெரியாத

வர்கள் என்று இருந்த விவரங்களையும் வெகு கவனத்துடன் பரிசோதித்துக் கொண்டிருக்கும்பொழுது, சுசீலா வந்து சேர்ந்தாள்.

"பரீக்ஷைக்குப் போறவாள் கூட இவ்வளவு கஷ்டப் படமாட்டாளே! நீ உடம்பைக் கெடுத்துக்கத்தான் போறே".

"எல்லாத்தையும் கத்துண்டுடனும்னு ஆசையாய் இருக்கு, அக்கா."

"வாஸ்தவந்தான். ஆனால் ஒரே நாளிலே எல்லாம் வந்துடுமா? படிப்படியாகத்தானே ஏறணும்? சரி, நான் ஒரு சங்கதி சொல்லணும்னு வந்தேன்.—சொல்வதற்கு அனுமதி கொடுப்பீர்களா?" என்று வணங்குவதுபோல் நடித்தாள்.

"அப்படியே கொடுக்கிறேன்" என்றாள் விசாலாக்ஷி கம்பீரமாய். அதன்மேல், சுசீலா அவள் கன்னத்தை மெதுவாய் நிமிண்டி, குரலைத் தாழ்த்தி, "அவர் பதினாறும் தேதி வரார்" என்றாள்.

"அப்படிச் சொல்லு!" என்று பத்திரிகையைக் கீழே வைத்தாள். ஒரு பழைய ஆங்கில வாரப் பத்திரிகையில் பொம்மைகளைப் புரட்டிக் கொண்டிருந்த பாகீரதி, தானும் வந்து பக்கத்தில் உட்கார்ந்துகொண்டாள்.

"இன்னும் ஒரு மாசத்துக்கு மேலேயே ஆகும்னு சொன்னயே, அக்கா!"

"ஆமாம், போன கடுதாசிலே அப்படித்தான் எழுதியிருந்தார். என்ன காரணமோ தெரியவில்லை. நேரே வந்து எல்லாம் சொல்றேன்னு எழுதியிருக்கார்" என்றாள் சுசீலா.

"கல்யாணம் இன்னும் ஒத்திப் போகுமோ?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"ஊஹூம், இன்னும் சித்தெ சீக்கிரமாகவே முகூர்த்தத்தைப் பார்க்கச் சொல்றார்."

"அப்படிச் சொல்லு, அப்படிச் சொல்லு!" என்று விசாலாக்ஷி சுசீலாவை அன்போடு தட்டினுள்.

"ரொம்பப்பேர் வருவான்னேயே. உங்க ஆம் எப்படிப் போரும், அக்கா?" என்று பாகீரதி கேட்டாள்.

"மொட்டை மாடிதான் எதேஷ்டமாய் இருக்கே. பந்தல் போட்டால் போச்சு!" என்ருள் விசாலாக்ஷி.

"அதுக்கு ஒண்ணும் நஷ்டம்இல்லே, விசாலம். நாயிஞ எங்கேயாவது பெரிய பங்களாவாய் அமர்த்திடுவார்.—எங்கம்மாதான் வம்பு பண்ணிண்டு இருக்காள்."

"வம்பு என்ன இருக்கு?"

"எனக்கு அஞ்சு வயசுலே, பெரிய கபவாதஜுரம் கண்டுதாம். சாவேனே, பிழைப்பேனேன்னு ஆயிடுத்தாம். பிழைச்சு உயிரோடு இருந்தால் திருப்பதியிலே கல்யாணம் பண்றேன்னு வேண்டிக்கிண்டாளாம். அதனுல் திருப்பதியிலே பண்ணியாகணும்னு அவள் ஒருகாலுலே நிற்கிருள்."

"அது நியாயந்தானே, அக்கா?" என்ருள் விசாலாக்ஷி.

"நியாயமோ, நியாயம் இல்லையோ, இதுலே அவளை மீறி நடக்க நாயிஞவும் இஷ்டப்பட மாட்டார். ஆகையினுலே—"

"திருப்பதியிலே கல்யாணத்தைப் பண்ணிட்டு எல்லாரையும் ஏச்சிடலாம்" என்ருள் விசாலாக்ஷி, சிரித்த முகத்தோடு.

"இல்லவே இல்லை! கிருஹப் பிரவேசம்னு வச்சு, ஒண்ணுக்குப் பத்தாய் நாயிஞ செலவழிச்சுடுவார். அவருக்கு எவ்வளவோ சிநேகிதாள். எல்லாரையும் அழைச்சு மரியாதை செய்யாத போனுல் நன்னு இருக்குமா?"

"போனுப் போறது. அதுக்காவது நாங்கள் வரலாம்."

"அதைக் கல்யாணத்தைவிடப் பத்துப் பங்கு அதிகமாய்ச் செய்யப்போருராம். அவருக்கு எல்லா ஜாதி

யிலேயும் சிநேகிதாள் உண்டு. அதுக்காக யாருக்கும் மனசு கஷ்டப்படாமல் இருக்கும்படி, சமையல், பலகாரங்கள் செய்ய பிராம்மண சமையல்காராளையே வைக்கப் போறுராம். நல்ல பாட்டுக் கச்சேரி உண்டு. எங்கம்மா ஒரு கர்நாடகம். அவளுக்குச் சதிர் ஒண்ணு வைக்கணுமாம். அதுக்கும் நாயிஞ ஒத்துண்டுட்டார்-அசடாட்டம். இதையெல்லாம் நானே சொல்லிக்கிறேன், பார்."

"நீயா அசடு? - அவரையேதான் பண்ணிப்பேன்னு ஒரே பிடிவாதமாய் ஜெயிச்சுட்டயே!"

"அவர் எவ்வளவு நல்லவர் தெரியுமா? நல்ல குணமுள்ள மனுஷாளைப்பத்தி அவர் பேச ஆரம்பிச்சுட்டால், எத்தனை நாழியாஞலும் கேட்டுண்டு இருக்கலாம். ஆனுல் இந்தக் காலத்து மனுஷ்யாளைப்பத்தி அவர்பேசல்லை! அவருக்குக் குணந்தான் பிரதானம். இந்தக் காலத்து உங்களவங்களிலே, ரொம்பப் பேருக்கு ஸமஸ்கிருதமே தெரியாதே."

"அவருக்குத் தெரியுமா, அக்கா?" என்று பாகீரதி கேட்டாள்.

"ஸம்ஸ்கிருதத்துலே எம். ஏ. பாஸ் பண்ணியிருக்கார்!"

"அம்மாடியோ! அதுதான் உனக்கு அவ்வளவு பயித்தியம்!" என்று விசாலாக்ஷி பரிகாசம் செய்தாள்.

"என்னைவிட அவருக்குத்தான் பயித்தியம்.—"

"ஆமாம், ஆமாம்! நன்ஞத் தெரியறதே! மூவரும் சிரிக்க நேர்ந்தது.

"அடி அசடே! நான் என்ன பயித்தியம்னு சொல்றதுக்குள்ளே...." என்று சுசீலா சரிப்படுத்திக்கொண்டு மேலே சொன்னுள். "அவருக்கு உலகத்துலே எல்லாரையும் உயர்ந்த மனுஷாள் ஆக்கிடணும்னு இருக்காம். ஜீவஹிம்சை செய்து, மாம்ஸாதிகளைச் சாப்பிடாமல் இருக்கிற நிலைமைக்கு வரதே, நல்ல நாகரிகத்துக்கு அழகு. அதை

மேல் மேலே விருத்தி செய்துண்டு போகணும்.—இப்படியெல்லாம் அவர்சொல்வார்.''

''அப்போ, அவர் ஒண்ணும் சாப்பிட மாட்டார் போலிருக்கு.''

''மூச்சுவிடப் படாது.''

''உங்காத்துலே எப்படி?'

''இத்தனை நாளாய்ப் பார்த்து, உனக்கு இதுதானுத் தெரிஞ்சுது? எனக்கும் நாயினுவுக்கும் பிடிக்கவே பிடிக்காது. அம்மாதான் எப்போவாவது சபலப்படுவாள்; எங்களாலே அவளும் விட்டுட்டாள். இதையெல்லாம் என்னத்துக்குச் சொல்றேன், தெரியுமோ? நான் தனிக் குடித்தனம் போடறபோது, நீங்கள் இரண்டுபேரும் எங்காத்துலே வந்து சாப்பிடலாம்!''

''ஓஹோ!'' என்று பாகீரதி, புருவங்களை உயர்த்தி, தலையை இப்படியும் அப்படியுமாய் அசைத்தாள்.

'' 'ஓஹோ'க்கு என்னத்தையடி கண்டுட்டே, போக்கிரி!'' என்று சுசீலா அவளுடைய காதைப் பிடித்துக்கொண்டாள்.

''சாப்பிடறேன், அக்கா'' என்று பாகீரதி காதை விடுவித்துக் கொண்டாள்.

''சரி, சங்கதியைச் சொல்லிவிட்டேன். இப்போதான் கடுதாசு வந்தது. உடனே உங்கிட்டே சொல்லனும் போல இருந்தது. அப்போ, போயிட்டு வறேனே. நாலு நாலரை மணிக்கு ஸரஸ்வதி ஆத்துக்குப் போகலாம்'' என்று சுசீலா எழுந்திருந்தாள்.

''எனக்கு எவ்வளவோ சந்தோஷமாய் இருக்கும், அக்கா; என் மேலே யார் இவ்வளவுபிரியமாய் இருக்கப் போறுள்!'' என்று கனிந்த அன்புடன் விசாலாக்ஷி அவள் கைகளைப் பிடித்துக்கொண்டாள்.

பதினும்தேதி வாக்குத் தவருமல், கல்கத்தாவிலிருந்து புதிதாக 'ஆசிரியர்' பட்டம்பெற்ற சேஷாசல

நாயுடு வந்து சேர்ந்தார். சுசீலாவின் பரபரப்பைச் சொல்லி முடியாது; மாடிப்படிகளில் ஒரே ஓட்டத்துடன் ஏறுவதும் இறங்குவதுமாய் இருந்தாள். வந்தவரும், மாப்பிள்ளை என்ற 'ஜம்பம்' ஒன்றும் இல்லாமல் வெகு சகஜமாய்ப் பழகிக்கொண்டிருந்தார். இவைகளையெல்லாம், மேடைரூம் ஜன்னல் வழியாக விசாலாக்ஷியும் பாகீரதியும் தாங்கள் மறைந்தவாறே கவனித்துக்கொண்டிருந்தனர்.

"இரண்டு பேரும் ஒரே உயரந்தான், அக்கா!" என்றாள் பாகீரதி.

"இரண்டு, மூணு வயசுதான் வித்தியாசம்னு அக்கா அப்பவே சொன்னாளே."

"அக்கா குதிக்கிறதைப் பாரேன்! ஐயோ! அவரைப் பிடிச்சு அப்படி இழுக்கறாளே!" என்றாள் பாகீரதி.

"சும்மா இரடி, அசடே! அவர் அவளுக்குப் புதுசா? அவளுக்குச் சந்தோஷம் பிடுங்கித் திங்கறது.— இதென்னது! நம்மாத்துப் பக்கம் கையைக் காட்டறாளே. இங்கே அழைச்சிண்டு வராளா என்ன?" என்று அப்புறம் போய் வேறு இடத்தில் உட்கார்ந்து கொண்டாள். இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம், ஒரு சிறு கூடை நிறையப் பெரிய பெரிய கொய்யாப் பழங்களையும் மாதுளம்பழங்களையும் எடுத்துக்கொண்டு சுசீலா வந்தாள்.

"அம்மாடீ! எவ்வளவு பெரிய கொய்யாப்பழம்!" என்று பாகீரதி 'வெடுக்' என்று ஒரு பழத்தைக் கொத்திக் கொண்டாள்.

"இந்தப் பழங்கள் அந்த ஊருலே விசேஷமாம்.... அவரைப் பார்த்தயோ?" என்று அவள் விசாலாக்ஷியைக் கேட்டாள்.

"ஓ!"

"எப்படி இருக்கிறார்?"

"நீ சொன்னப்போலேதான், உனக்கு என்ன குறைவு, அக்கா!"

"இருக்கிறதைப் பார்த்தால், நாளைக்கோ, நாளன்னிக்கோ வேலூருக்குப் புறப்படணும்போல இருக்கு. அங்கேயிருந்து திருப்பதிக்குப்போய், கல்யாணத்தை முடிச்சிண்டு வராப்படி பேசிக்கிருள். இந்த ஊருலே கலியாணம் நடந்து நீங்களெல்லாம் வந்தால், எனக்கு எவ்வளவோ சந்தோஷமாய் இருக்கும். சொல்லி என்ன பிரயோஜனம்? வெளி ஊருக்கு மாமா அனுப்புவாரா? நாங்கள்தான் எப்படிக் கேழ்க்கிறது?"

"அதுனலே என்ன, அக்கா? கிருஹப்பிரவேசந்தான் ஜோராய் நடக்கப் போறதே. அப்போ எல்லாரும் வரேும்" என்று விசாலாக்ஷி சமாதானப்படுத்தினுள்.

எட்டு நாட்களுக்குப் பிறகு, உற்ருர் உறவினருடன், சுசீலாவும் சேஷாசல நாயுடுவும் ஆனந்த பரவசத்தோடு, இணைபிரியாத தம்பதிகளாகத் திருப்பதியிலிருந்து வந்து சேர்ந்தனர். அவளுடைய தகப்பனுர் வீராசாமி நாயுடு தூரதிருஷ்டி உள்ளவராகையால், மறுதினமே நடக்க வேண்டிய கிருஹப் பிரவேசத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை மிகவும் சாமர்த்தியசாலிகளான தம் நண்பர்களில் சிலரிடம் ஒப்பித்திருந்தார். ஆகவே, அலங்காரப் பந்தலில் ஓர் ஆயிரத்துக்குக் குறைவில்லாமல் கூடியிருந்த இஷ்டமித்திர பந்துக்கள், அங்கே அமைக்கப்பட்டிருந்த சௌகரியங்களின் சிறப்பை மெச்சினர். பெண்களை உபசரித்து வரவேற்கும் பொறுப்பை, சங்கத்தின் உதவி காரியதரிசியான சுபத்திரா பூஷைய நாயுடு ஏற்றுக் கொண்டாள். சங்கீத வித்வான் வெகு உருக்கத்தோடு பாடினுர். பாடகர்களுக்கு முன்னுல் சிறிது தூரத்தில், மணமகனும் மணமகளும் ஒரு ஸோபாவில் வீற்றிருந்தார்கள்.

அன்பளிப்புகள் வந்து குவிந்தன. அவைகளைப் பத்திரமாகச் சேகரிக்கும் வேலையைக் கவனித்து வந்த ஒரு

நண்பர், ஒரு மேஜையையும் நாற்காலியையும் போட்டுக் கொண்டு, அளிக்கப்பட்ட சாமான்களின் விவரங்களையும், அளித்தோர் பேரையும், ஜாப்தாவில் குறித்தார். வந்தவர்களில் ஒருவராவது பலகாரங்களை உண்ணுமலும் தேநீர் முதலியவற்றைப் பருகாமலும் தப்பித்துக் கொள்ள முடியவில்லை. அடக்க ஒடுக்கத்தோடு உட்கார்ந்தவாறு, சுசீலா தன் புன்முறுவலால் தோழிகளை வரவேற்றுக் கொண்டிருந்தாள். ஜானகிராம ஐயரும் அவர் பின் விசாலாக்ஷியும் பாகீரதியும் வருவதைக் கண்டு, அவள் பக்கத்திலிருந்த தன் தாயாரை அழைத்துக் காதில் ரகசியமாக ஓதினுள். அந்த அம்மாள் தன் ஸ்தூல சரீரத்தைச் சுமந்துகொண்டு, மெதுவாகப் பலரைத்தாண்டி, விசாலாக்ஷியையும் பாகீரதியையும் அழைத்து வந்து, சுசீலாவின் அருகில் உட்காரவைத்தாள். விசாலாக்ஷியைப் பார்த்து, "நான் எப்படி எழுந்திருந்து வரது, சொல்லு!" என்று அவள் சொன்னபொழுது பக்கத்திலிருந்தவர்களுக்குச் சிரிப்பு வந்தது. விசாலாக்ஷி பதில் சொல்ல முடியாமல் தவித்தாள். தலையெடுத்துச் சிரித்த முகத்தோடு அவளைப் பார்த்தபோதிலும், "இங்கேயும் ஏன் வம்புக்கு இழுக்கறே?" என்று அவள் நோக்கம் சொல்வதுபோல் இருந்தது.

ஜானகிராம ஐயர் கொண்டுவந்த பார்ஸலை மேஜையில் வைத்துவிட்டு, எங்கே உட்காரலாமென்று யோசித்துக்கொண் டிருக்கையில், வீராசாமி நாயுடு அவரைப் பார்த்துவிட்டார். உடனே விரைந்துசென்று அவரை அன்புடன் அழைத்துக்கொண்டு வந்து, தமது பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டார். கச்சேரி அற்புதமாக நடந்துகொண்டு இருந்தது. சிறிது சத்தம் செய்பவர்களையும் ரஸிகர்கள் முறைத்துக் கண்டித்தார்கள்.

விசாலாக்ஷிக்கு எல்லாம் ஒரு கனவுபோல் இருந்தது. அவள் பிறந்தது முதல் இவ்வளவு நேர்த்தியான கல்யா

ணத்தையே பார்த்ததில்லை. அவளுடைய கிராமத்துப் பெரிய பண்ணையார்வீட்டு விவாகங்களைக்கூடத் தூரத் தள்ள வேண்டியதுதான். பயத்தோடு, தலையை அதிக மாய் நிமிர்த்தாமல், அவள் எல்லாத் திக்குகளையும் ஆராய்ச்சி செய்தாள்: இதற்குள் இருட்டவே, விதம் விதமாக ஜோடிக்கப்பட்டிருந்த மின்சார விளக்குகள் 'பளிச்' என்று பிரகாசித்தன. விசாலாக்ஷிக்கும் பாகீரதிக்கும் எல்லாம் ஒரே ஆச்சரியமாக இருந்தது.

இப்பொழுது ஜானகிராம ஐயர், அசைவதும், எழுந்திருப்பதும், உட்காருவதுமாய் அவஸ்தைப்பட்டார். அவருடைய வேதனையின் அர்த்தம் சுசீலா, விசாலாக்ஷி, பாகீரதி, இம்மூவருக்கும் தெரியும். "ஒரு நாள்தான் கொஞ்சம் நாழிகழிச்சு, சந்தி பண்ணினுல் என்ன, அக்கா?" என்று பாகீரதி விசாலாக்ஷியினிடம் ரகசியமாய் முறையிட்டாள். விசாலாக்ஷி அவளை "உஸ்!" என்று அடக்கினுள். ஆனுல், ஜானகிராம ஐயர் ஸ்தம்பம்போல் நின்று, அவர்கள் புறமே உற்றுப் பார்க்கத் தொடங்கினுர். அதன் மேல், விதியில்லாமல், அரை மனதுடன், விசாலாக்ஷி எழுந்து, தலையை அசைத்து, சுசீலாவினிடம் விடை பெற்றுக்கொண்டாள். பாகீரதியை அழைத்துக் கொண்டு, அவ்வளவு கும்பலையும் தாண்டிப் போவதற்குள், நாணத்தால் அவளுக்கு எண்சாண் உடம்பு ஒரு சாண் ஆகிவிட்டது. பந்தலுக்கு வெளியே வந்ததும், அவர்கள் மௌனமாய் ஜானகிராம ஐயரைப் பின்பற்றினுர்கள். வீடு சேர்ந்ததும், ஜானகிராம ஐயர், தம்முடைய ஜப தபங்களில் ஈடுபட்டார். சகோதரிகள் இருவரும் ஏகாந்தமாக, "அக்கா"வின் கல்யாணத்தைப்பற்றிப் பேசினுர்கள். "எல்லாம் நிறைஞ்சு இருக்கு பாகீ! கலியாணம்னு, இதன்னு கலியாணம்!" என்றுள் விசாலாக்ஷி.

இரண்டு வாரங்கள் சென்றன. சுசீலாவைக் காண்பதே விசாலாக்ஷிக்கு அரிதாக இருந்தது. எப்பொழுதாவது

பார்த்தால், ''இதோ வறேன், விசாலம்'' என்றுளே ஒழிய, வந்த பாடில்லை. இந்த உலகத்தில் சஞ்சரிப்பவள் போல அவள் காணப்படவில்லை. விசாலாக்ஷிக்கு அறிய முடியாத ஆனந்த ஸாகரத்தில் அவள் மூழ்கிக் கிடந்ததாகத் தெரிந்தது. அதற்கு அத்தாட்சி அவளுடைய முகமலர்ச்சியே போதும்: என்ன ஆச்சரியம்! இவ்வளவு பரவசமாய் இருப்பதற்கு விசாலாக்ஷிக்குக் காரணம் தெரியவில்லை. எப்படித் தெரியும்?

ஒரு நாள் சாயங்காலம் சுசீலாவீட்டு வாசலில் வாடகை மோட்டார் வந்து நின்றது. சிறிது சாமான் களுடன், சேஷாசல நாயுடுவும் சுசீலாவும் வண்டியில் ஏறத் தயாராய் இருந்தார்கள். இதைக் கண்டு, விசாலாக்ஷி வாசற்புறம் தானும் வந்தாள்.

''அக்கா'' தன்னிடம் சொல்லாமல் ஊருக்குப் புறப் பட்டுப் போவது அவளுக்கு ஆச்சரியம், துக்கம், கோபம் எல்லாவற்றையும் ஒருங்கே உண்டுபண்ணியது. அவள் மன நிலைமையை அறிந்து சுசீலா புன்சிரிப்புடன் சொன்னுள்: ''நான் ஸ்டேஷன் வரையிலுந்தான் போகி றேன், விசாலம். அவரை விட்டுட்டு, இதே வண்டியிலே திரும்பி, நேரே உங்கிட்டேதான் வரப் போறேன்.''

''சரி'' என்று விசாலாக்ஷி தலையை அசைத்தாள்.

அரை மணி நேரத்துக்கெல்லாம் சுசீலா திரும்பி வந்தாள்; வழக்கம்போல் விசாலாக்ஷியின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டாள். ''மைசூர் கல்லூரியிலிருந்து ஒரு பிரசங்கம் கொடுக்கும்படி அழைப்பு வந்தது. அதற் காகப் போகிறுர்'' என்று அவள் சமாசாரத்தைத் தெரிவித்தாள்.

''நீயும் போறதுதானே, அக்கா?''

''தங்கறது ஒரே நாள்தான். இன்னும் எப்போ வாவது சாவகாசமாய்ப் போய்க்கலாம்னு சொல்லிவிட் டார்'' என்று அவள் விசாலாக்ஷியை உற்றுப் பார்த்தாள்.

"ஏன் அக்கா, அப்படிப் பார்க்கறே?"

"ஒண்ணுமில்லே. ஒரு பத்துநாளாய் இந்தப் பக்கம் வரல்லேயின்னு உனக்குக்கோபமா?"

"எல்லாம் போக, கோபம் ஏதுக்கு, அக்கா? நீ சந்தோஷமாக இருந்தால் எனக்குச் சந்தோஷமில்லேயா?" என்று விசாலாக்ஷி சொல்லியபோது, சுசீலா நன்றி பாராட்டியது போல அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு, மறுபடியும் மௌனமாய்ப் பார்த்தாள்.

"எதையோ மனஸுலே வச்சிண்டு, சொல்ல மாட்டேங்கறே!" என்றாள் விசாலாக்ஷி.

"உங்கிட்டே சொல்லாதே இருக்க முடியுமா? எனக்கு என்ன செய்யறதுன்னு தெரியல்லே, விசாலம்! கல்கத்தா கல்லூரியிலே ஒருவருஷம் வேலே செய்யும்படி கேட்டுக் கருளாம். 'அவாளாலே எவ்வளவோ நன்மை அடைஞ் சிருக்கேன், மறுக்கறது நன்னு இருக்காது'ன்னு அவர் சொல்றார்" என்று அவள் சொன்ன க்ஷணத்தில், விசாலாக்ஷியின் முகம் சுருங்கி வாட்டம்அடைந்தது. "ஊஹூம்" என்ற துவனிவந்ததே தவிர, முகம் பேய் அறைந்தாற்போல் ஆய்விட்டது. சமாளித்துக்கொண்டு, "போகத்தானே வேணும், அக்கா?" என்றாள் அவள்.

"நான் ஆறுமாசம் இருந்துட்டு வந்துடலாம்னு இருக்கேன். அதுவரையிலும், உனக்குக் கொஞ்சம் கஷ்டமாயிருக்கும்......"

"என்ன கஷ்டம்? கஷ்டப்படறவாள் எங்கேயும் பட்டுத்தான் ஆகணும்னு எங்கள் பாட்டி சொல்வாள். அது நிஜமாய்த்தான் இருக்கு."

"நான் போறதுக்குள்ளே, நாலாவது ஆத்துலே இருக்கிற ஸரஸ்வதியை நன்னுப் பழக்கப்படுத்திடறேன். அது நல்ல பொண்ணு. 'இண்டர்மீடியட்' பாஸ் பண்ணி யிருக்கு. 'லைப்ரரி'யிலே மெம்பர். உனக்கு வேண்டிய புஸ்தகங்களை எல்லாம் கொண்டுவந்து கொடுக்கும்...."

"அவாள் எல்லாம் உன்னுட்டம் ஆயிடுவாளா, அக்கா?" என்று விசாலாக்ஷி கண்கலங்கினுள். சுசீலாவுக்கும் துக்கத்தை அடக்க முடியவில்லை; அவளை அணைத்துக் கட்டிக்கொண்டு கண்ணீர்விட்டாள்.

கல்கத்தாவுக்குப் புறப்படும் தினம் வந்தது: அன்று முழுதும் சுசீலா விசாலத்தோடே காலத்தைக் கழித்தாள். ஒருவருக்கொருவர், வாரத்துக்கு இருமுறை கடிதங்கள் எழுதிக்கொள்வதாகத் தீர்மானம் செய்துகொண்டார்கள். சுசீலா, ஆறு மாதங்கள் காற்றாய்ப் பறந்துவிடுமென்று சமாதானம் செய்தாள். என்ன செய்தும், விசாலத்தின் முகத்தின்மீது படர்ந்த வாட்டம் நீங்கவில்லை. விடைபெற்றுக் கொள்ளும்பொழுது, ஜானகிராம ஐயர் இன்னும் ஆபீஸிலிருந்து வராததால், சேஷாசல நாயுடு அவருக்குச் செய்யவேண்டிய நமஸ்காரத்தை விசாலாக்ஷிக்குச் சமர்ப்பித்தார். விசாலாக்ஷியும் வணக்கத்தோடு, அவருக்குத் திருப்பி நமஸ்காரம் செய்தாள்; சுசீலாவும் விசாலாக்ஷியும் வாய்விட்டுப் பேசமுடியாமல் சமிக்ஞையால் விடைபெற்றுக் கொண்டனர். இருவர் கண்களிலும் கண்ணீர் நிரம்பிக் கிடந்தது. சற்று அழுத்தக்காரியான பாகீரதிக்குக்கூட அழுகை வந்துவிட்டது. வண்டி நகர்ந்தது. விசாலாக்ஷி தாரை தாரையாய்க் கண்ணீர் விட ஆரம்பித்துவிட்டாள்.

## 10

## மகனும் மகளும்

சுசீலா கல்கத்தாவுக்குச் சென்று விளையாட்டுப் போல் மூன்று மாதங்கள் கழிந்துவிட்டன. அவர்கள் ஒப்பந்தம் செய்துகொண்டபடி சுசீலாவுக்கும் விசாலாக்ஷிக்கும் அடிக்கடி கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருந்தது. சுசீலா கங்காஸ்நானத்தை வர்ணித்து எழுதிய

பொழுது, விசாலாக்ஷிக்குத் தானும் அங்கே சென்று அந்த ஆனந்தத்தை அநுபவிக்க வேண்டும்போல் இருந்தது; 'அக்கா' அங்கே இருக்கும்பொழுதே, ஒரு தடவை போய்ப் பார்த்து வரவேண்டுமென்றுகூட அவள் நினைத்தாள். சுசீலா அறிமுகப்படுத்திய ஸரஸ்வதி அவளுக்கு வெகு உபகாரமாய் இருந்தாள். விசாலாக்ஷியைவிட இரண்டு மூன்று வருஷங்கள்தான் அவள் பெரியவள். கல்யாணம் ஆகிவிட்டது. இரண்டு வயதுள்ள ஒரு பெண்குழந்தை இருந்தது. 'இண்டர்மீடியேட்' பரீக்ஷையும் தேறியிருந்தாள். ஆனால், அவளுடைய படிப்பினால் விசாலாக்ஷிக்கு அவள்மீது கௌரவம் ஏற்படவில்லை. அவ்வளவு படித்துவிட்டு இவ்வளவு 'அசட்டுப் பிசட்டாக' இருக்கவேண்டாமென்பது அவளுடைய கருத்து. போதும் போதாதற்கு, அவள் மாதர் சங்கத்திலும் சேர்ந்திருந்தாள். அதனால், சங்கத்தில் நடக்கும் விஷயங்களைப்பற்றி அவளுக்குத் தகவல் வந்துகொண்டேயிருந்தது. அவள் மூலமாய்க் கிடைத்த புஸ்தகங்களுக்கும் குறைவேயில்லை. அவளுக்குப் பிறந்தகம் மயிலாப்பூரிலே இருந்ததால், மாதத்துக்கு ஒரு தடவையாவது அங்கே சென்று, ஒரு வாரம் அவள் முகாம் போட்டுவிடுவாள். பணக்கார வீட்டுப் பெண்ணுகையால், திரும்பி வரும்போதெல்லாம் அவள் விதவிதமான பக்ஷணங்களைக் கொண்டுவருவாள். அவைகளில் விசாலாக்ஷிக்கும் பாகீரதிக்கும் பங்கு கிடைக்கும். அவளுடைய குணங்களெல்லாம் விசாலாக்ஷிக்குப் பிடித்திருந்தன. ஆனால், அவள் பாடும்போதுதான், விசாலாக்ஷிக்குத் தர்மசங்கடமாய் இருந்தது. ஏழு வருஷங்கள் கற்றுக்கொண்டதன் பயனாக, சங்கீதத்தில் அபாரத் தேர்ச்சி அடைந்துவிட்டதாக ஸரஸ்வதியின் எண்ணம். ஒருவித சிக்ஷையுமில்லாமலே, அவளைவிடத் தானே மேலாகப் பாடக்கூடியவள் என்பது விசாலாக்ஷியின் அபிப்பிராயம். அபிப்பிராயங்கள் எப்படி இருந்தபோதிலும், ஸரஸ்வதி

பாடுவதை விசாலாக்ஷி சில வேளைகளில் மிகவும் கஷ்டத்தோடு சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது.—அவள் செய்யும் உபகாரங்களுக்கு இந்தப் பிரதி உபகாரமாவது செய்யவேண்டும் என்பது விசாலாக்ஷியின் எண்ணம்.

கல்கத்தாவிலிருந்து, ஆறு மாதங்களுக்குப் பிறகு, சுசீலா திரும்பிவருவது அசாத்தியமாயிற்று. அது விசாலாக்ஷிக்கு முன்பே தெரிந்த விஷயந்தான். ஒரு மனுஷி எவ்வளவு நேரந்தான் படிக்கலாம்? உண்மைதான். அவளுக்கு எத்தனையோ விஷயங்கள் தெரிந்துவிட்டன. ஆயினும், ஒரே இடத்தில் அடைத்துப் போட்டாற்போல், எத்தனை நாள் காலத்தைக் கழிக்கலாம்? பேச்சுத் துணைக்குக்கூட யாரும் இல்லாவிட்டால் என்ன செய்வது? ஸரஸ்வதியோ,—அவளால் சிலசமயங்களில் தலைவலிதான் உண்டாயிற்று. ஜானகிராம ஐயர் எவ்வளவோ அன்பாகத்தான் கவனித்துவந்தார். கேட்டதெல்லாம் உடனே கிடைத்துவிடும். ஆனால், அவருக்குப் பாட்டுக் கச்சேரியில் ஆசையே கிடையாது. அவர் காலேஜில் படித்த நாளில் விடுமுறைச் சமயத்தில் மாணவர்கள் நடித்த இரண்டோர் ஆங்கில நாடகங்களைப் பார்த்ததுண்டு. அதோடு சரி. சினிமாப் படத்தை அவர் எப்பொழுதாவது பார்த்திருப்பாரா என்பது சந்தேகப்பட வேண்டியதே. ஊரெல்லாம் திரண்டு பார்க்கப்போன ஏதோ ஒரு சினிமாவுக்கு, பாகீரதியின் வேண்டுகோளுக்கு இணங்கி, அவர் அவர்களை அழைத்துக்கொண்டு போனார். ஆனால் அவர் வீட்டுக்குத் திரும்பும்வரையில் பட்ட வேதனையைச் சொல்லி முடியாது. அது முதல், சினிமாப் பேச்சையே எடுக்கக்கூடாதென்று விசாலாக்ஷி தீர்மானித்துக்கொண்டாள். நல்ல துணையுடன் அவர்கள் போய்வர, அவருக்கு ஆக்ஷேபம் இல்லை. ஆனால் துணைக்கு எங்கே போவது? இந்த மாதிரி சமயங்களில்தான் சுசீலா ஊரை

விட்டுப் போனது, எவ்வளவோ வருத்தத்தை உண்டாக்கியது.

ஒரு சமயம், புரசைவாக்கத்தில் காமாக்ஷியம்மாளின் பேரனுடைய பூணூல் கல்யாணத்துக்குச் சென்றபொழுது ஜானகிராம ஐயரின் பந்துக்களில் ஒருவர், பர்மாதேசத்தில் உத்தியோகமாய் இருந்ததால் பதினைந்து வருஷங்களுக்குப் பின் அன்றுதான் ஜானகிராம ஐயரைக் காண நேர்ந்தது. அவர், அன்புடன், "வா அப்பா, ஜானகிராமா-பெண்களா?" என்று வரவேற்றபொழுது, ஜானகிராம ஐயரின் முகம் குன்றியதும், விஸ்தரிக்க முடியாத அவமானத்தால் விசாலாக்ஷியின் மனம் துடித்ததும் அவ்விருவர்களாலும் என்றும் மறக்க முடியாதவை. சமீபத்தில் இருந்தவர்கள் மெதுவாய் அவருக்கு உண்மையைத் தெரிவித்தபொழுது, தெரியாத்தனமாய் ஜானகிராம ஐயரின் மனத்தைப் புண்படுத்தியதற்கு அவ்வுறவினர் மிக வருத்தப்பட்டார்!

இதைப்போன்ற விஷயங்கள், விசாலாக்ஷியின் சூக்ஷ்மமான மனத்தில் என்றும் அசைக்க முடியாத ஆணிகள்போல் அறையப்பட்டன.

பிறப்பினுலும் வளர்ப்பினுலும் விவாகத்தினுலும், அவளுக்குத் தன் வயதுக்கு மீறிய அநுபவஞானம் ஏற்பட்டது. கிராமத்தில், தன் பெற்றோர்களோடு சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டதை அவள் மறக்கவில்லை. இப்பொழுது ஆடை ஆபரணங்களுடன், நினைத்தபொழுது இஷ்டமான ஆகாராதிகளைப் புசிக்கச் சௌகரியம் ஏற்பட்டுவிட்டது. படிப்பில் பிரமாதமான அபிவிருத்தி அடைந்துவிட்டதும் உண்மைதான். ஆயினும், கிராமத்தில், யதேச்சையாய் ஆடி ஓடித்திரிந்து, அனைவருடனும் சகஜமாய்ப்பழகி வந்ததைவிட இப்பொழுதுள்ள நிலைமை அதிக சுகத்தைக் கொடுத்ததென்று அவளால் நினைக்க முடியவில்லை. ஆனால் முக்கியமான பலன் ஒன்று

இருந்ததே!—தன் பெற்ருேர்களின் கஷ்டம் அடியோடு தொலைந்துவிடவில்லையா? இதைவிட அவளுக்குப் பெரிய சுகம் எது வேண்டும்?

படிப்பில்லாத சமயத்தில் மேற்கூறியவை போன்ற நினைவுகளில் சுழன்று, விசாலாக்ஷி காலத்தைத் தள்ளினுள். வரவர, அவளுடைய ஆரோக்கியத்திலும் கோளாறு ஏற்பட்டது. தலைச் சுற்றல், வாந்தி எடுத்தல், அன்னத் துவேஷம், இவ்வாருன உபத்திரவங்கள் உண்டாயின. சில சந்தேகங்களும் ஏற்பட்டன. ஒருநாள் தன் தேக நிலைமையைக் குறித்துத் தாயாருக்கு அந்தரங்கமாகக் கடிதம் எழுதிக்கொண் டிருந்தபொழுது, பாகீரதி வந்து, "ஹாட்டு பூட்டு எல்லாம் போட்டுக்கொண்டு யாரோ ஒருவர் 'அத்திம்பேரை'த் தேடிக்கொண்டு வந்திருக்கிருர்" என்று சொன்னுள். விசாலாக்ஷி எழுந்து கீழே போனுள். வந்தவருக்கு - விசாலாக்ஷியின் மதிப்பில் - இருபது வயதுக்கு மேல் இராதுபோல் தோன்றியது. உடையெல்லாம் ஐரோப்பியர் தினுசில் இருந்தது: ஆனுல் முகத்தில் பரம சாந்தம் குடிகொண்டு இருந்தது. வந்தவர் விசாலாக்ஷிக்கு நமஸ்கரித்து, "மாமா ஆபீஸுக்குப் போயிருப்பார்னு தெரியும். தகவல் சொல்லிவிட்டுப் போகலாம்னு வந்தேன். சிந்தாமணி என்ருல் அவருக்குத் தெரியும்: சாயங்காலம் ஆறுமணிக்கு வறேன். இங்கேயே சாப்பிடறதாச் சொல்லுங்கோ" என்ருர்.

"அதுக்கென்ன?" என்ருள் விசாலாக்ஷி புன்முறுவலை அடக்க முடியாமல்.

எப்பொழுதோ கேள்விப்பராக்கில், அவர் பெயரைத் தெரிந்திருந்த பாகீரதி "டாக்டர்" என்று ரகசியமாய்த் தன் தமக்கையிடம் சொன்னுள். அது அவர்காதில் விழுந்துவிட்டது.

"ஆமாம், அம்மா, டாக்டர்தான்" என்ருர் டாக்டர் சிந்தாமணி சிரித்துக்கொண்டு.

"நானும், மாமா பிள்ளை நாராயணனும் ஒண்ணாய்ப் படிச்சவாள்,-உங்கள் தங்கையா?"

விசாலாக்ஷி தலையை அசைத்தாள்.

"சரி, நான் போயிட்டு வறேன், அம்மா" என்று விசாலாக்ஷிக்கு நமஸ்கரித்துவிட்டு, பிறகு பாகீரதியையும் பார்த்து, "நான் வறேன்" என்று சிரித்தவாறு விடை பெற்றுக்கொண்டார்.

டாக்டர் சிந்தாமணி போனதும், விசாலாக்ஷி தன் தங்கையைக் கோபித்துக்கொண்டாள்.

"வர வர, உனக்கு வாய்த்துடுக்கு ரொம்ப ஆயிடுத்து, பாகீ! அவர் எதிர்க்கவே 'டாக்டர்' 'கீக்டர்'னு சொல்லணுமா? சிந்தாமணியின்னு பேரைச் சொன்னதுமே, நானுந்தான் தெரிஞ்சுண்டேன்!"

பாகீரதி பிசகு செய்தவள்போல் விழித்தாள். அன்றைச் சாயங்காலம், ஜானகிராம ஐயர் ஆபீஸிலிருந்து திரும்பி வந்த சிறிது நேரத்துக்கெல்லாம், டாக்டர் சிந்தாமணியும் வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் ஜானகிராம ஐயருக்குப் பரம சந்தோஷம். "வாடா அப்பா, வா, வா, இந்தனை நாளாய் இந்தப் பக்கமே திரும்பிப் பார்க்கல்லையே! உன் சிநேகிதன் சீமைக்குப் போனால், நீ இங்கே வரப்படாதா?" என்று அவர் அன்போடு வரவேற்றார்.

"என்ன மாமா அப்படிச் சொல்றேள்? எனக்கு உங்கள் ஆசீர்வாதத்துலே சேலத்துலே நல்ல 'பிராக்டிஸ்' ஏற்பட்டுடுத்து. எங்கேயும் நகர முடியாமல் இருக்கு. இத்தனைக்கும் ஒரு 'எல். எம். பி.'யை உதவிக்குக்கூட வச்சிண்டு இருக்கேன்."

"எனக்கு ரொம்ப சந்தோஷம், அப்பா: புத்திசாலி, உனக்கு 'பிராக்டிஸ்', கிடைக்கிறதுக்கு என்ன? வைத்தியத்திலே யோக்கியதை இருந்தால் கட்டாயம் விருத்திக்கு வரலாம். படாடோபத்துலே கொஞ்சநாள்தள்ள

லாம்: அது நீடிச்சு இருக்காது.—நாராயணன் கடுதாசு எழுதிண்டு இருக்கானே, இல்லையோ?''

''ஆஹா! அதெல்லாம் அவன் ஒரு 'ஸிஸ்டம்'ப் பிரகாரம் நடப்பான். அந்த அந்தச் சமயத்துலே அந்த அந்தக் காரியத்தைச் செய்யாதபோனல், அவனுக்குத் தலை வெடிச்சுப் போயிடுமே!''

''அதெல்லாம் சரிதான். இருந்தாலும் உன் நிதானம், பொறுமை, அவனுக்கு வருமா? உன்னோடே பழகிக்கூடக் கத்துக்கமாட்டேங்கருனே!''

''அதென்ன, மாமா, அப்படிச் சொல்றேள்? ஒரு கேஸைப் புரிஞ்சுக்கிறதுக்கு எல்லாருக்கும் ஒரு மணி யானல், அவன் ஒரு நிமிஷத்துலே கண்டுண்டுடுவானே! மூளை மெள்ள வேலை செய்யறவாளைக் கண்டால் அவனுக்குப் பிடிக்காதே.''

''நான் இல்லேங்கறேனு? மூளைக்கு ஒண்ணும் குறை வில்லை, அவன் மாமா ஒருத்தர் வக்கீலாய் இருந்தார், ஸாக்ஷாத் அவரைக் கொண்டிருக்கான். அநியாயப் பதட்டம். இல்லாத போனல், உள்ளூரிலே இருந்துண்டு, திடீர்னு ஹாஸ்டலிலே போய்ச்சேருவானு?''

அந்தச் சம்பவத்தை நினைக்க, சிந்தாமணிக்குச் சிரிப்பு வந்தது: ''சேராதபோனல், எங்கள் இரண்டு பேருக்கும் சிநேகம் எப்படி உண்டாகியிருக்கும், மாமா?''

''அதுதான் பகவத் ஸங்கல்பம். அவன் ஜாதகம் நல்லது. அவன் எவ்வளவு அவசரக் குடுக்கையாட்டம் காரியத்தைச் செஞ்சாலும் அது நல்லதாகத்தான் முடியும்.—எனக்குத் தங்கமும் அவனும் தந்தி கொடுத்தா, தெரியுமோ இல்லையோ?'' என்று, மிகவும் அபகாரம் செய்யப்பட்டவர் போல், அவர் குரலைத் தாழ்த்தி, நடந்ததை எல்லாம் ராமாயணமாகச் சொன்னர். அவர் சொன்னதில் முக்கால் பங்கு, சிந்தாமணிக்குத் தெரிந்த விஷயமே! இருவரும் வெகுநேரம் பேசிவிட்டு, சாப்பாட்

டுக்கு எழுந்தனர். வந்தவருக்கு மரியாதை செய்வது போல, விசாலாக்ஷியே அவ்விருவருக்கும் பரிமாறினாள். பாகீரதி உதவி செய்தாள். சாப்பிட்டுக்கொண்டே ஜானகிராம ஐயரும் சிந்தாமணியும் ஏதேதோ விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள். 'நாராயணனை விட நீ மூணுநாலு வயசு சின்னவனாய் இருப்பயா?'' என்று அவர் கேட்டார்.

''ஏது, மாமா? சரியாய், ஒரு வருஷம் ஒன்பது மாசந்தான்; நான் கொத்தவரங்காயாட்டம் இருக்கேன். அவன் கொஞ்சம் இரட்டை நாடி; என்னைவிட அவன் ஒரு வருஷந்தானே 'ஸீனியர்'!''

''ஆமாம், ஆமாம். வந்தப்புறம் என்ன பண்ணப் போறானே? சிவனேன்னு, கவர்ன்மெண்டு உத்தியோகத்தை ஒத்துக்கலாம். மாசம் பொறந்தால் சம்பளத்தை வாங்கிண்டு, குறிச்ச வேளையிலே வேலையைச் செய்துவிட்டு, ராமா கிருஷ்ணான்னு இருக்கலாம்.''

''அவனுக்கு அந்த எண்ணம் இல்லை, மாமா. சொந்தமாய் 'பிராக்டீஸ்' வைக்கப்போறான். சர்க்கார் வேலை யாருக்கு, மாமா? கையாலே ஆகாதவாளுக்குன்னா? கெட்டிக்காரனாய் இருந்து, அதுலே ஆம்பிட்டுக்கிண்டால் அவ்வளவுதான், அப்புறம் தலைஎடுக்க முடியாது.''

''சரிதான், அவன்பயித்தியம் உன்னையும் பிடிச்சுட்டாப் போல இருக்கு!''

''பயித்தியம் இல்லை, மாமா.—ஊழியம்னால், கையையும் காலையும் கட்டிப்போட்டது போல்தானே? தொழிலிலே ஆகட்டும், வரும்படியிலே ஆகட்டும், பிரமாத விருத்திக்கு வரமுடியாது. அதுலே ஒரு அளவு உண்டோ இல்லையோ! இதுன்னால், சுயேச்சையாக ஒருத்தன் எவ்வளவோ காரியங்கள் செய்யலாம்.''

''சரி, அவன் இஷ்டப்படிச் செய்யட்டும். அவன் சம்பாதிச்சு ஆகவேண்டியது ஒண்ணுமில்லை. அப்படி

யானுல் அடுத்த மாஸம் நிச்சயமாய் வரான்னு சொல்லு?''

''ஆமாம்: உங்களுக்கு எழுதாமல் இருப்பாளு? நேராக டெல்லிக்கு வந்து, தங்கத்தையும் அழைச்சுண்டு வருணும். உங்களைப் பார்க்க முடிஞ்சால், உங்களண்டை யும் சொல்லும்படி எனக்கு எழுதியிருக்கானே!''

''போனுல் போறது, அதாவது எழுதினுனே?'' என்று ஜானகிராம ஐயர் திருப்தியடைந்தார்.

மறுநாள் டாக்டர் சிந்தாமணி சேலத்துக்குப் போய் விட்டான். அவன் வரவால், விசாலாக்ஷிக்கும் பாகீரதிக் கும் பல விஷயங்கள் தெரிந்தன; பல எண்ணங்களும் உதித்தன. வீட்டு 'மாமா' வுக்குப் பாரியை ஆகிவிட்டபடி யால், அவளை அறியாமலே அவள் மனத்தில் ஓர் 'அம்மாமி' ஸ்தானம் ஏற்பட்டது; விரலைவிட்டு எண்ணிப் பார்த் தாள். அவள் சென்னைக்கு வந்து ஒரு வருஷம், ஐந்து மாதம், ஆறு நாட்கள் ஆகிவிட்டன! இதற்குள் அவள் வாழ்க்கையும் எவ்வளவு மாறிவிட்டது! அவளுக்கு உண் டான தைரியத்தைப்பற்றி அவளே ஆச்சரியப்பட்டாள். ஆனுலும் சீக்கிரத்தில் நாராயணனையும் தங்கத்தையும் நேர் நேராகக் காணவேண்டும் என்று நினைக்கும்போதே, அவளுக்கு நடுக்கம் உண்டாயிற்று. வதந்தியிலிருந்தும், செய்கைகளிலிருந்தும் இருவரும் கர்வமும் முரட்டுச் சுபாவமும் உள்ளவர்களென்று தெரிந்தது. ஆனுல் உதார குண முள்ளவர்களென்றும் சொன்னுர்கள். எப்படி இருந்தாலும் என்ன? அந்தவீட்டில் அவளுக்கு உரிமை இல்லையா? மாதர் சங்கத்தில் ஸ்திரீ உரிமைகளைப்பற்றி அவ்வளவு பேசினுர்களே! பத்திரிகைகளில் பக்கம் பக்கமாகப் பிரசங்கங்களைப் பிரசுரித்தார்களே. அவைக ளெல்லாம் வெறும் பேச்சுத்தானு? அதையுந்தான் பார்க்கலாமே!' என்றெல்லாம் அவள் தைரியப்படுத்திக் கொண்ட போதிலும், நாட்கள் நெருங்க நெருங்க, அச்சம் அதிகரிக்கத்தான் செய்தது.

ஒரு நாள் டில்லியிலிருந்து கடிதம் வந்தது. தான் டில்லிக்கு வந்திருப்பதாகவும், மாப்பிள்ளைக்கு-தங்கத்தின் புருஷன்-லீவு கிடைக்காததால், தங்கத்தையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு ஒரு வாரத்துக்குள் வருவதாகவும் நாராயணன் தகவல் தெரிவித்திருந்தான்.

ஏழெட்டு நாளைக்குப் பிறகு, ஒரு மாலை ஐந்து மணி சுமாருக்கு, இரண்டு வாடகை மோட்டார் வண்டிகள் நிறையச் சாமான்களைப் போட்டுக்கொண்டு நாராயணனும் தங்கமும் வந்துசேர்ந்தார்கள். அந்தச் சமயத்தில் அவர்கள் வருவார்கள் என்று விசாலாக்ஷி சற்றும் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் இன்னார் என்பதை விசாலாக்ஷியால் ஊகித்துக் கொள்ள முடிந்தபோதிலும், வெகுகாலமாய் வீட்டில் வேலை செய்துவந்த முனியம்மாள் மூலமாகத்தான் அது சந்தேகமில்லாமல் தெரிந்தது. ''வாம்மா, தங்கம்! குழந்தையை இப்படிக் கொடு'' என்று அன்புடன் முனியம்மாள் தங்கத்தின் கைக் குழந்தையை வாங்கிக்கொள்ளவே, அவள் கதவைத் திறந்துகொண்டு இறங்கினாள். தங்கத்தின் குழந்தைகள் மற்ற இரண்டும் ஒன்றைஒன்று தள்ளிக்கொண்டு வெளியே ஓடி வந்தன. அவளுடைய நவநாகரிகத்துக்கு அவளுடைய மூக்குக் கண்ணாடியும் கால் ஜோடுமே போதுமான அறிகுறிகளாய் இருந்தன. நிமிர்ந்த தலை குனியவே இல்லை. வயதிலும் ஆகாரத்திலும் விசாலாக்ஷியைவிட எவ்வளவோ பெரியவள். அவள் விசாலாக்ஷியை முறைத்துப் பார்த்த பொழுது, குற்றம் செய்த சிறு மாணாக்கன், பிரம்பும் கையுமாய் நிற்கும் உபாத்தியாயரின்முன் நடுங்குவது போல் இருந்தது, விசாலாக்ஷியின் தோற்றம். ஈனஸ்வரத்தில் ''வாங்கோ'' என்று அவள் சொன்னது தங்கத்தின் காதில் விழுந்ததோ இல்லையோ, சொல்ல முடியாது. அவளும் சரி, அவள் பக்கத்திலிருந்த தூணும் சரி என்று நினைப்பது போல் இருந்தது தங்கத்தின் பாவனை. ''இது

தான், புது அம்மா-'' என்று முனியம்மாள் இழுத்த பொழுது, ''தெரியறதே,-அது, உன் தங்கையா?'' என்று அவள் விசாலாக்ஷியைக் கேட்டாள். விசாலாக்ஷி பதில் சொல்லவில்லை, சொல்லமுடியவில்லை. துக்கமும் கோபமும் கரைபுரண்டு ஓடின. முகம் சிவந்தது. அவளை அறியாமல் ஒரு முரட்டுத் தைரியம் வந்துவிட்டது; இவளும் ஒரு மனுஷியா என்று நினைத்தாள். இதற்குள், சாமான்களை எல்லாம் பத்திரமாக உள்ளே அனுப்பிவிட்டு பின் வண்டியிலிருந்து வந்த நாராயணன் விசாலத்தை மதிப்புப் போடுவதுபோல் உற்றுப் பார்த்தான். பல தேசங்களைச் சுற்றிப் பார்த்துப் பல இனத்தாரோடு பழகியதன் பயனுக அவனுடைய நடை உடை பாவனைகளில் ஓர் அலாதியான தோரணை ஏற்பட்டு இருந்தது. ஆனுல் கர்வம் என்பது சிறிதளவும் கிடையாது. அதற்குப் பதிலாக ஜீவகாருண்யத்தினுல் ஏற்பட்ட ஒரு களை அவன் முகத்துக்கு ஒரு தனிமையான ஒளியைக் கொடுத்தது.

விசாலாக்ஷியின் விழிகளில் ததும்பிய ஸாத்துவிகத்தைக் கண்டு பிரமித்தான். அவைகள், ''இந்த ஏழைப் பெண் என்ன தகாத காரியத்தைச் செய்துவிட்டாள்?'' என்று முறையிடுவதுபோல் இருந்தன. நாராயணன் உண்மையில் மேதாவி. ஒரு க்ஷணத்தில் எவ்விஷயத்தையும் கிரகித்துக் கொள்ளும் சக்தியுடையவன். அவனது உள்ளத்து அடிவேரில் ஒரு சலனம் உண்டாயிற்று. துவேஷத்தோடு வந்தவனுக்கு, இரக்கமும் நன்மதிப்பும் அன்புங்கூட ஏற்பட்டுவிட்டன. நிரபராதமே உருவாய்த் தோன்றிய அச்சிறுமியின் மனத்தைப் புண்படுத்துவதற்கு மிஞ்சிய பாவமில்லை என்று அவனுக்குப் பட்டது. அவள் விழிகளில் கண்ணீர் புடைத்துக்கொண்டு இருப்பதை அவன் அறிந்தான். அவளுக்கு ஹிதமாகப் பேச முயன்ருன். ''ஆபீஸிலேயிருந்து இன்னும் அப்பா வரவில்லையா?'' என்று மெதுவாய்க் கேட்டான். ''வரலே'' என்று அவள் வணக்கத்தோடு பதில் சொன்னுள்.

"அப்போ, இந்த ஸுட் கேஸை, பத்திரமான இடத்துலே வைக்கணுமே. அதுலே இருக்கிற சாமான்கள் இந்த ஊருலே கிடைக்கவே கிடைக்காது!"

"மாடி ரூம்லே பீரோலே வச்சுப் பூட்டறேனே?" என்று விசாலாக்ஷி அதை எடுக்கப்போனுள்.

"வேண்டாம், வேண்டாம். அது ரொம்பப் பளுவாய் இருக்கும். - இந்தா, முனியம்மா, இதை மெள்ள எடுத்திண்டு போய், சித்தி எங்கே வைக்கச் சொல்ருளோ, அங்கே வை" என்ருன் நாராயணன்.

"சித்தி" என்ற வார்த்தையைக் கேட்டதும், அவள் முகத்தைத் திருப்பி முன்னே நடந்தாள். அதிலிருந்து உருக்கமும் பரிவும் அவள் உள்ளத்தைப் பூரிக்கச் செய்தன; படிகள் ஏறும்பொழுது, முகத்தைத் துடைத்துக் கொள்வதுபோல், கண்களைத் துடைத்துக் கொண்டாள். பகவானே கருணைகூர்ந்து தனக்கு ஓர் 'அண்ணு'வைக் கொண்டுவந்து விட்டதாக அவள் நினைத்தாள். இப்படிப் பட்டவருக்குத் தங்கத்தைப் போன்ற தங்கை எப்படி அமர்ந்தாள்? ஆனுல், அவள் இன்றைக்கு இருந்து நாளைக்குப் போகிறவள் தானே, என்று தேர்தல் செய்துகொண்டாள். ஸுட் கேஸை பீரோவில் வைத்துப் பூட்டிவிட்டு, கீழே வந்து, விசாலாக்ஷி அவர்களுடைய ஸ்நானத்துக்கு ஏற்பாடு செய்தாள். இதற்குள், ஜானகிராம ஐயரும் ஆபீஸிலிருந்து வரவே, மகனும், மகளும், பேரப்பிள்ளைகளும் அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். பாவம், ஜானகிராம ஐயருக்கு ஆனந்தம் ஒரு பக்கம், பயம் ஒரு பக்கம். நாராயணன் நடந்து கொண்டதிலிருந்து, அவருக்குச் சற்றுத் தைரியம் வந்தது. ஆனுல் தங்கத்தின் நாவு வாள் போல் வீசியது. எடுத்ததற்கெல்லாம் ஒரு குற்றத்தைச் சாட்டினுள். "இந்த ஆத்துலே எல்லாந்தான் தலைகீழாய் மாறி இருக்கு.—இதென்னது? என் ஹார்மோனியப் பெட்

டிக்கு இந்தக் கதியா வரணும்? மழையிலே நனைஞ்சு—எதுக்கோ சொல்லுவாளே, கற்பூர வாசனை...?''

''தங்கம்!'' என்று நாராயணன், அவளை முறைத்துப் பார்த்தான். அவளுடைய அண்ணசங்கதி அவளுக்கு நன்றாய்த் தெரியும். எது வந்தாலும் விபரீதந்தான்—கோபமானாலும் சரி, சந்தோஷமானாலும் சரி. ஆகையால் அவள் வாயை அடக்கிக் கொண்டாள். பிறகு அவள் ஸ்நானம் செய்ய வெந்நீர் அறைக்குச் சென்றபொழுது விசாலாக்ஷியும் பின் தொடர்ந்தாள். பக்கபலம் தனக்கு உறுதியாக இருப்பதை உணர்ந்துகொண்ட விசாலாக்ஷி, தங்கத்தை எதிர்க்காமல் அவளுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து, அவள் வம்புக்கு இழுத்தாலும் அதை அசட்டை செய்துவிடுவதென்று தீர்மானித்தாள்.

''மாடத்துலே புது சோப்பு வச்சிருக்கு. அதோ அங்கே வாசனைப் பொடியும் இருக்கு'' என்று விசாலாக்ஷி சுட்டிக் காட்டினாள். தங்கம் வாசனைப்பொடியை மோந்து, ''கமகமன்னுதான் வாசனை அடிக்கிறது. ஊம், அப்பாவுக்குப் பால்யம் திரும்பி யிருக்கு!'' என்று விசாலாக்ஷியைப் பார்த்துச் சொன்னாள். விசாலாக்ஷியும் அவளை மௌனமாய், ஆனால் சளைக்காமல் ஏற இறங்கப் பார்த்தாள். அதன் பேரில், தங்கம் கதவைப் 'படார்' என்று சாத்திக்கொண்டாள். தங்கத்துக்கு, ஆத்திரத்தால் புத்திப் பிசகு ஏற்பட்டதென்றே சொல்லவேண்டும். ஒரு புறம் விசாலாக்ஷியின் அழகிய கண்களும் முகவெட்டும் அவளைத் திகைக்கச் செய்தன. மற்றொரு புறம், தன் தகப்பனை மயக்கி வீட்டை ஆளவந்த மோசக்காரி என்று மனம் கொதித்தது. எவ்விதத்திலும் வீட்டுக்கு அந்நியமானவள் போலவே தங்கம் அவளைக் கருதினாள்.

மாடியில் தனித் தனியாக வேண்டிய அறைகள் இருந்ததால், அன்றிரவு எல்லாரும் மாடியிலேயே படுக்கைகளைப் போட்டுக்கொண்டார்கள். வெந்நீர் உள்

சம்பாஷணைக்குப் பிறகு, தங்கத்தினிடம் நெருங்கிப் பழக விசாலாக்ஷிக்கு இஷ்டமில்லை. ஜாக்கிரதையாய் இருக்கும்படி பாகீரதியையும் அவள் எச்சரித்தாள். எப்படியோ இரவு கழிந்தது. விடிந்ததும், நாராயணன் கீழே வாசற்புறமாய் இருந்த பெரிய அறையைத் தனக்குப்பிரத்தியேகமாக வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்தான். கணக்கு வழக்கில்லாமல் அவனைச் சிநேகிதர்கள் தேடிக்கொண்டு வந்தபடியால், வந்தவர்களுக்கெல்லாம் காபி, பலகாரம் செய்து கொடுக்கும்படி அவன் சமையற்காரன் உயிரை வாங்கிக்கொண்டு இருந்தான். தங்கம் பழைய குப்பைகளைக் கிளறிக்கொண் டிருந்தாள். தங்கம் எவ்வளவு 'தலைகீழாய்' நின்றபோதிலும், வீட்டின் பொறுப்புத் தனதாகையால், விசாலாக்ஷி வந்தவர்களுக்குச் செய்யவேண்டிய செளகரியங்களைக் கவனித்தாள்.

அன்றைத் தினம், மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலில் ஏதோ உற்சவம். சாயங்காலம் ஸ்வாமி தரிசனம் செய்ய வேண்டியிருந்ததால், போகிற போக்கில் திருவல்லிக்கேணியில் இறங்கி, விசாலாக்ஷியையும் பார்த்து விட்டுப் போகலாமென்று, காமாக்ஷியம்மாள் பகல் ஒரு மணி சுமாருக்குத் தற்செயலாக வந்தாள். தங்கத்தையும் நாராயணனையும் காண அவளுக்குச் சந்தோஷமாக இருந்தபோதிலும், அவர்கள் தந்திகள் அடித்து, ரகளை செய்ததை நினைத்தபோது, அவளுக்குக் கோபந்தான் வந்தது. ஆனால் அதை ஒருவரும் காட்டிக்கொள்ளவில்லை. 'வந்தது வந்தேன், தலை பின்னிட்டாவது போறேண்டி!'' என்று முதலில் தங்கத்தை அழைத்துப் பின்னல் போட்டாள். தங்கத்தின் கூந்தல் சொற்பமாக இருந்ததால் சவுரி வைத்துப் பின்னவேண்டியிருந்தது. ஆனால், விசாலாக்ஷிக்குத் தலை வாரும்பொழுது, 'கருகரு' என்று நீண்டு வளர்ந்திருந்த அவளுடைய கூந்தல் கைக்கு அடங்காமல் போயிற்று. இதில், காமாக்ஷியம்மாளுக்கு அலாதி

யான பெருமை - தான் தேர்ந்தெடுத்த பெண் அல்லவா அவள்? விசாலாக்ஷியின் முகலக்ஷணங்களைக் கவனித்துக் கொண்டிருந்த தங்கத்துக்கு ஏதோ ஒரு சந்தேகம் உதித்தது. மனத்தில் தோன்றிய எண்ணத்தை மெய்ம்மறந்து வெளியிட்டுவிட்டாள். "இவ்வளவு அழகானவளுக்கு அப்பாதானா கிடைச்சார்? அவரைக் கலியாணம் பண்ணிக்கிறத்துக்கு இவளுக்கு எப்படித்தான் மனசு ஒப்பித்தோ!" இதைக் கேட்ட மாத்திரத்தில் மின்சார சக்தி உடம்பில் பாய்ந்ததுபோல், புழுவாய்த் துடித்தாள் விசாலாக்ஷி. துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்தது; தேம்பித் தேம்பி, உரக்க அழத் தொடங்கிவிட்டாள். அடிக்கடி சங்கத்தின் தீர்மானங்கள் காதுக்கு எட்டியதாலும், பல பேர்களைப் பார்ப்பதாலும், அவளுக்கு இப்பொழுது புதுப் புது பாவங்கள் ஏற்பட்டிருந்தன. தங்கம் கேட்ட கேள்வி எவ்வளவு சரியானதென்று அவள் மனத்தில் பதியப் பதிய, அவள் வயிற்றில் தீப்பற்றி எரிந்தது; அழுகையை அடக்க முடியாதவளாய், தலையைக் கலைத்து முடி போட்டுக்கொண்டு தேம்பியவாறு, அவள் மாடிக்குச் சென்றாள். அழுதுகொண்டே பாகீரதியும் அவளைப் பின்பற்றினாள். காமாக்ஷியம்மாள் தங்கத்தை விழுங்கிவிடுபவள்போல் பார்த்தாள். தங்கம் சித்தப்பிரமை பிடித்தாற்போல் விழித்தாள். விசாலாக்ஷியின் மனம் இவ்வளவு தூரம் புண்படும் என்று அவள் நினைக்கவில்லை. வந்ததும் வராமல், விபரீதத்தை விளைவித்ததற்காக, பயந்து நடுங்கினாள். உள்ளூற நல்ல சுபாவமுள்ளவளாகையால், விசாலாக்ஷி துக்கம் பொறுக்க முடியாமல் தேம்பித் திக்கு முக்காடியதைக் கண்ட தங்கத்துக்கு ஸப்தநாடியும் விழுந்து விட்டது. பாட்டி காமாக்ஷியம்மாள் கோபித்துக் கொண்டதுகூட அவளுக்கு உறைக்கவில்லை.

"என்னடி தங்கம்! இது நியாயமாடி! ஏழைப்பட்டவள்னு, அவள் பாவத்தைக் கொட்டிக்கிறதா? இரண்டு

மூணு மாசமாய் ஸ்நானம் பண்ணவில்லையின்னு வேறே சொல்லித்தே பாவம்! பகவானே! இன்னிக்குன்னு, நான் இங்கே வரணுமா? நான் போய்ச் சேரரேண்டி, அம்மா! அதுங்கிட்டே இப்போ போனால், புண்ணுலே ஊசி வச்சுக் குத்தறுப்படி இருக்கும்; இன்னொரு நாளைக்கு வந்து பார்த்துக்கறேன். பிறத்தியார் மனசை வீணாய்ப் புண்படுத்தப்படாதடி, தங்கம். மஹாபாபம்டி, அம்மா! நாராயணன் வந்தால் சொல்லு, ஜானகிராமன் கிட்டே யும் சொல்லு; நான் போறேன்'' என்று காமாக்ஷியம்மாள் முக்கி முனகிக்கொண்டு போய்விட்டாள்.

## 11

## பச்சாத்தாபம்

மாடிக்குச் சென்ற விசாலாக்ஷியும் பாகீரதியும் வெகுநேரம் ஆகியும் கீழே இறங்கவில்லை. மணி ஐந்து அடித்து விட்டது. தங்கத்துக்குக் கீழே இருப்புக்கொள்ள வில்லை; என்னதான் செய்துகொண் டிருந்தார்களென்று பார்க்க மேலே போனாள். விசாலாக்ஷி தன் அறையில் இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தாள். பாகீரதி அவள்மேல் சாய்ந்துகொண் டிருந்தாள்; இவள் வந்ததை அவர்கள் பார்க்கவில்லை. பிறகு, அவர்களை விசாரிக்கத் தைரியமில்லாமல், ஓசை செய்யாமல் தங்கம் கீழேஇறங்கினாள். விசாலாக்ஷிக்கு ஜுரம் கண்டுவிட்டதுபோல் இருந்தது. அவள் கர்ப்பிணியாய் இருந்ததால், எக்கச்சக்கமாய் ஆகக் கூடாதே என்று பயந்தாள். 'ஆத்திரக்காரிக்கு புத்தி மட்டு' என்பது சரியாய்ப் போய்விட்டது: நடந்தது நடந்து போயிற்று என்று இராமல், தனது வாய்த்துடுக் கால் அல்லவா வம்பை விலைக்கு வாங்கிக்கொண்டாள்? மூன்று மாதங்கள் ஆனந்தமாய்ப் பிறந்தகத்தில் காலத் தைக் கழிக்கலாம் என்று வந்தவளுக்கு, இந்தச் சங்கடமா

நேரவேண்டும்? ஆனல், விசாலாக்ஷியின் முகம் துக்கத்தால் துடித்ததை நினைக்கும்பொழுது, அவளுக்கு உடம்பெல்லாம் நீராய்விட்டது. எல்லாரும் அவளை "உனக்கு வாயிலே சனி" என்று திட்டுவதன் உண்மை அவளுக்கு இப்பொழுது தெரிந்தது. ஆனல், அவள் இரக்கமற்ற பாவியா? அவசரத்தில் உளறிவிட்டு, பிறகு அவள் மனம் தவித்தது பிறருக்கு எப்படித் தெரியும்? மேலே சென்று, விசாலாக்ஷியை ஆசுவாசப்படுத்த வேண்டும் போல் இருந்தது. ஆனல் எப்படிப் போவது? தலை போனலும், அவள் பொய் சொல்லமாட்டாள்; பொய் சொல்லுகிறவர்களைப் பக்கத்திலும் சேர்க்கமாட்டாள். ஆகவே, நடந்ததை ஒன்று விடாமல் பாடம்ஒப்பித்து, கிடைக்கும் தண்டனையையும் வாங்கிக்கொள்வதென்று, அவள் ஆத்திரத்தோடு நாராயணனுடைய வரவை எதிர் பார்த்துக்கொண்டு இருந்தாள். ஆனல், முதலில் தகப்பனர்தான் வந்தார். அவரோடு பிரஸ்தாபிக்க இஷ்டமில்லை; அவரோடு சொல்வதும் ஒன்றுதான், சொல்லாமலிருப்பதும் ஒன்றுதான். இருந்தாலும், "சித்திக்கு ஜுரம் வந்திருக்கிருப்போல இருக்கு, அப்பா. மேலே போய்ப் பார்" என்று அவள் சொல்லிவைத்தாள்.

"ஏன், காலம்பர சரியாய் இருந்தாளே?" என்று சொல்லிக்கொண்டே, தங்கத்தின் வார்த்தைகளில் இருந்த உருக்கத்தைக்கண்டு அவர் ஆச்சரியப்பட்டார். அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்யாமலே, "டாக்டர் ஜயலக்ஷ்மியை வேணும்னல் வந்து பார்க்கச் சொல்லேன். அவள் இங்கேதானே இருக்காள்?" என்று தங்கம் கேட்டாள்.

"இங்கேதான் இருக்காள். ஆனல், என்ன அவசரம் இப்போ? நாராயணன் வந்து பார்க்கட்டும்."

"அண்ணு பார்க்கிறதுக்கு சம்மதிப்பாளோ மாட்டாளோ? பட்டிக்காட்டு...." பிறகு வார்த்தையை

மாற்றிக்கொண்டு, "கிராமத்துப் பெண் ஆச்சே, அப்பா!" என்ருள்.

"அப்படியாளுல் அவளுக்கே சொல்லி அனுப்பறேன். எதுக்கும் மேலேபோய்ப்பார்த்துட்டு வறேனே!" என்று, அவர் மாடிப்படிகள் ஏறினுர். அவருக்கு ஒன்றும் புரிய வில்லை. அண்ணன் ஆகட்டும், தங்கை ஆகட்டும், இரு வருக்கும் ஒரே போக்குதான். க்ஷணப்பித்தம், க்ஷணச் சித்தம். எப்படியோ, சாந்தமாகக் குணம் திரும்பியதைக் குறித்துச் சந்தோஷப்பட்டுக்கொண்டு, அவர் விசாலாக்ஷி யினிடம் சென்ருர். தங்கத்துக்கு விசாலாக்ஷி தன்மீது கோள் சொன்னுலும் சொல்லலாம் என்ற சந்தேகம் வந்தது. ஆனுல், அதை அவள் பொருட்படுத்தவில்லை. உண்மையைச் சொல்லத் தயங்கினுல் அல்லவா அந்தப் பயம்? சில நிமிஷங்களுக்கெல்லாம் ஜானகிராம ஐயர் கீழே இறங்கினுர்! "டாக்டரே வேண்டாம்னு சொல்ருள், அம்மா. நாளைக்குத் தானுகவே சரியாய்ப் போயிடுமிங் கிருள்" என்ருர்.

"அவளுக்கு என்னதெரியும், அப்பா? அதுவும் இரண்டு மூணு மாசமாகவே சாதம் வேண்டிருக்கில்லை யாம்!"

"ஆமாம், ஆமாம். அப்போ டாக்டர் ஜயலக்ஷ்மிக்குச் சொல்லியனுப்பட்டுமா?"

"அனுப்பு. இருந்தாப்படி இருந்து, ஏதுக்கு வந்த துன்னு சொல்லல்லையா?"

"அலைச்சல்தான். யாராவது வந்துவிட்டால், அவளுக் குத் தலைகால் தெரியாது. அது தவிர, நீ சொன்னமாதிரி, இரண்டு மூணு மாசமாய் உடம்பு வேறே சரியாய் இல்லை. அவ்வளவுதானே ஒழிய, வெறே ஒண்ணும் இல்லை."

"ஏதுக்கும் நீ முதல்லே டிரைவரை அனுப்பிச்சு டாக்டர் அம்மாளை அழைச்சிண்டு வரச்சொல்லு."

"சரி, அனுப்பறேன். எனக்கு என்னவோ அனுவசியம்னு தோணறது.—அப்போ, டாக்டர் வந்தால் நீயே பாத்துக்கோ. இன்னிக்கு நல்ல நக்ஷத்திரம்; ஸ்நானம் பண்ணிட்டு, தேவிபூஜை பண்ணலாம்னு பார்க்கறேன்.—நான் போகட்டுமா?"

தங்கம் தலையை அசைத்தாள். விசாலாக்ஷியின் பெருந்தன்மையால் தங்கத்துக்குச் சந்தோஷம் ஏற்படவில்லை. அது அவளுடைய அற்பத்தனத்தையே பன்மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டுவதுபோல இருந்தது; வேதனையுடன் குறுக்கும் நெடுக்குமாக நடந்தாள். டாக்டர் ஜயலக்ஷ்மி வந்ததும், "என்னம்மா, எப்போ வந்தே? எல்லாரும் சௌக்கியந்தானே?" என்று தங்கத்தை விசாரித்துவிட்டு, விசாலாக்ஷியைப் பார்க்க மேலே போனாள். அவள் விசாலாக்ஷியைப் பரிசோதித்துவிட்டுக் கீழே இறங்குவதற்கும், நாராயணன் வருவதற்கும் சரியாக இருந்தது. இரண்டு டாக்டர்களும் நாற்காலிகளில் அமர்ந்துகொண்டார்கள். டாக்டர் ஜயலக்ஷ்மி வெகு ஆவலுடன் வைத்திய சம்பந்தமான அவனுடைய மேல்நாட்டு அனுபவங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டாள். விசாலாக்ஷியைப் பற்றிய வரையில், ஏதோ அதிர்ச்சியால் ஏற்பட்ட சர்வ சாதாரணமான அசௌகரியமென்றும், அது இரவு தூக்கத்திலேயே சரியாகிவிடும் என்றும் ஜயலக்ஷ்மி கூறவே, அந்தச் சங்கதி அப்புறப் படுத்தப்பட்டது.

பிறகு, இருவரும் வைத்திய விஷயங்களைப்பற்றி அரைமணி நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். டாக்டர் ஜயலக்ஷ்மி விடை பெற்றுக்கொண்டு போனதும், தங்கம், "அண்ணா, உங்கிட்டக் கொஞ்சம் பேசணும்" என்று சொன்னபொழுதே, ஏதோ சச்சரவு ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நாராயணன் தெரிந்துகொண்டான்.

"சரி, சொல்லேன்."

"இங்கே வேண்டாம். உன் ரூமுக்குள்ளே வா" என்று அவனை அழைத்துக்கொண்டுபோய், நடந்ததை எல்லாம் ஒரு வார்த்தை தவருமல் சொன்னுள். அழாத குறையாய் இருந்த அவளுடைய முகத்தைப் பார்க்க, நாராயணனுக்கு உள்ளூறச் சிரிப்பு வந்தது. அதைக் காட்டிக்கொண்டாலும் அநர்த்தம்.

"இப்போ என்ன பண்ணணுமிங்கறே?"

"இந்தக் கேள்வி கேக்கறதுக்கா உன்கிட்டச் சொன்னேன்?" என்று அவள் அவன்மீது எரிந்து விழுந்தாள். நாராயணனுக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. "நாக்குலே சனி, சனியின்னு ஏன் தூஷிக்கணும்? அப்புறம் ஏன் இப்படி அவஸ்தைப்படணும்?"

"அவள்மேலே எனக்கு ஒண்ணுமில்லை.—இது நம்ப ஆம் இல்லையா? நாம் இங்கே பிறந்து வளரல்லையா? மூணும்பேர் வந்தால், எப்படிப் பிடிக்கும்? நேத்து வரையிலும் அம்மா இருந்தாளே! அவள் சாகறபோதுகூட, பாவிகள் இரண்டு பேரும் பக்கத்துலே இல்லாதே போனேமே!—" என்று அவள் அழ ஆரம்பித்துவிட்டாள். நாராயணன் மௌனமாய் இருந்தான். அவளுடைய சிந்தனைகளில் அவனுக்கும் பங்கு உண்டல்லவா?

"சரி, போனதைப்பத்திப் பேசறத்துலே என்ன பிரயோஜனம், சொல்லு? அவளுடைய அப்பா, அம்மா அவளை விற்றதுக்கு அவள் என்ன செய்வாள்?"

"அப்பா அம்மாகூட இல்லையாம்; ஒரு தரகுக்கார சாஸ்திரியும், இந்தக் காமாக்ஷிப்பாட்டியும் செஞ்ச வேலையாம் இது. சுசீலா அம்மா எல்லாம் கதையாய்ச் சொன்னுளே!"

"யார் செஞ்சால் என்ன? நடந்தது நடந்துபோச்சு. அந்தப் பொண்ணு சங்கதியைக் கவனிச்சுப் பாரு; நம்ம தங்கை ஒருத்தி இருந்தாள்னு வச்சுக்கோ. அவளுக்கு இந்தக் கதிவந்தால், நமக்கு மனசு எப்படி இருக்கும்?

ஆகையினுலே, அவளை அடிக்கடி தேள் கொட்டரூப் போலே பிராணனை வாங்காதே. அவளைப் பயித்தியக் காரின்னு எண்ணிக்காதே. ஏழைங்கிறதைத் தவிர்த்து, எந்த விஷயத்துலே அவள் நமக்குக் கீழ்ப்பட்டவள்? கிழவனுக்கு வாழ்க்கைப்பட்டது அவளுடைய தப்பா, கிழவன் தப்பா?'' என்று சொல்லும்போது, அவனை அறியாமல், அவன் பார்வையில் கோபம் தோன்றியது.

தங்கம் வாய் திறக்கவில்லை.

"இதோ பார், தங்கம்! இந்த விஷயத்தைப்பத்தி அடிக்கடி பேச எனக்கு இஷ்டமில்லை. ஒரு வார்த்தை யிலே சொல்றேன்—அப்பா செஞ்ச பாவத்துக்கு நாம் தான் பிராயச்சித்தம் பண்ணணும். இனிமேல், அவ ளுடைய கஷ்ட சுகத்தைக் கவனிக்க வேண்டியது நம்முடைய கடமை. குழந்தை கிழந்தை பிறக்கும் போலிருக்கு. அதுமூலமாகத்தான் அவள் ஆறுதல் அடையணும்.—தெரிஞ்சுதா? ஆகையினுலே, நீ அவளுக்கு ஒரு விதத்துலேயும் பனசுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கப் படாது''

''இனிமேல், அவள் என்னேடு பேசுவாளோ, மாட் டாளோ?'' என்று தங்கம் பயந்தாள்.

''ஏன் பேசமாட்டாள்? 'தங்கம்' னு பேர் அவளுக்கு வச்சிருக்கணும். நான் பேசச் சொல்றேன், வா....சரி, எனக்குக் கொஞ்சம் காபி வேணுமே!''

''மணி ஏழு ஆகப்போகிறது. இப்போ காபி குடிச் சிட்டு, நீ சாப்பிடறது எப்போ?''

''மெள்ளச் சாப்பிட்டால் போறது. எனக்குத் தலைவலி பொறுக்க முடியவில்லை. இரண்டு பேருக்கும் சமாதானம் செய்யணும்னு தெம்பாய் இருக்க வேண்டாமா?''

தங்கம் சலிப்புடன் காபி தயார் செய்துகொண்டு வரப்போனுள். நாராயணன், சட்டை, நிஜார், கால்ஜோடு

முதலியவைகளை அவிழ்த்துப் போட்டுவிட்டு, வேஷ்டியைக் கட்டிக்கொண்டு, சாய்வு நாற்காலியில் அமர்ந்தவாறு, எண்ணிக்கை நிரம்பியிருந்த ஒரு 'பில்'லைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண் டிருந்தான். தங்கம் காபியைக் கொண்டு வந்தாள்.

"என்ன அண்ணு அது?"

"அதுவா? கார் வாங்கினதுக்கு 'பில்'.—நூற்றுஅறுபது ரூபாய் கூடப் போட்டுட்டான் போலிருக்கு. இதுலே கொஞ்சம், அதுலே கொஞ்சமாய் ஏத்திட்டான். பீடைகள், ஒரு பேச்சுக்கண்டிப்பே கிடையாது" என்று காபியைப் பருகினுன்.

"நீ வாங்கப்போறேன்னு சொல்லவே இல்லையா? அப்பாவுக்குத் தெரியுமா?"

"அப்பாவுக்கு டில்லியிலே இருந்தே எழுதிட்டேனே! ஆனுல், இவ்வளவு சீக்கிரம் முடியும் என்று நான் நினைக்கல்லே. ஒரு சிநேகிதன் வாங்கப்போனுன். என்னையும் கூப்பிட்டான். அவனுக்கு ஒண்ணு பிடிச்சுது. அவ்வளவுதான், நானும் வாங்கிட்டேன்.

"விலை எவ்வளவு?"

"அவனது, மூவாயிரத்து எண்ணூறு; என்னுது நாலாயிரத்து ஐந்நூறு."

"உன் சங்கதி தெரியுமே!"

"ஆமாம், எழுநூறு ரூபாயைப் பார்த்தால், என்னுதுலே இருக்கிற சௌகரியத்துலே பாதிகூட அவனதுலே இல்லே. என்னுது பலே ஜோராய்இருக்கும். நாளைக்கு வருது பாரேன்!"

"அப்பா காரை வச்சுக்கப்படாதோ? ஆபீஸுக்குப் போறதைத் தவிர அதுக்கு ஒரு வேலையும் இல்லையே!"

"ஆமாம், அப்பா காரைச் சொல்லு, சலசலன்னு! அதுக்கு பதிலாய் நம்ப ஊர் காங்கயம் வைத்தியனுட்டம், இரட்டை மாட்டு வண்டியை வச்சுக்கலாம்."

"இருந்தாலும், நாலாயிரத்து ஐந்நூறு கொஞ்சம் ஜாஸ்தி இல்லையா? அப்பாவுக்கு சிரமமாய் இருக்குமோ என்னமோ?"

"அந்தக்கவலை ஒண்ணும் வேண்டாம். என் சொந்தப் பொறுப்புலே, மாசத்துக்கு இவ்வளவு கட்டறதுன்னு வாங்கி யிருக்கேனுக்கும். அவருக்கு வேறே செலவு வச்சிருக்கேன்" என்று அவன் சிரித்தான்.

"அதென்னது?"

"அம்பத்தெட்டு பட்டத்தை வாங்கிண்டு, இந்த வீட்டுக்குள்ளே நான் உட்கார்ந்திருக்கிறதா? என்ன பண்ணப்போறேன், தெரியுமா? இந்த ஹால்சுவரை இடிச்சு, ஒரு கதவு வைக்கப்போறேன். பக்கத்துலே காலி நிலம் இருக்கே, அதுலே கீழேஎப்படியோ அதே மாதிரி மேலேயும், கட்டடத்தைக் கட்டி, கீழே வந்த நோயாளி களைப் பரீக்ஷிக்கிறதுக்கு ஒரு பெரிய அறை, அவாள் காத்திண்டு இருக்கிறதுக்கு இரண்டு ஹால், மேலே பத்து படுக்கைகளுக்குக் குறையாமல் போட இடம் - அந்த மாதிரி ஏற்பாடு செய்யப்போறேன். ஆபரேஷன் 'கேஸ்' எல்லாம் ஒரு வாரத்துலேயிருந்து பத்து, பதினஞ்சு நாள்கூடத் தங்கி இருக்கவேண்டி யிருக்குமே!"

"அந்த நிலம் ஐவுளிக்கடை ராவுக்குச் சொந்தம் இல்லே? வாங்கியாச்சா?"

"அடி அசடே! வாங்கறத்துக்கு எத்தனை நாழி யாகும்? கட்டறதுக்கு எத்தனை நாழியாகும்?"

தங்கம் 'இடி இடி' என்று சிரித்தாள்.

"பார்த்துண்டே இரு, ஊருக்குப் போறதுக்குள்ளே எல்லாம் முடியாதபோனல் ஏன்னு கேள்!"

"சரி, அவளை எப்போ பார்க்கிறது?" என்று மாடிப் பக்கம் கையைக் காட்டினள்.

"அதுக்குத்தானே காபி சாப்பிட்டேன்!" என்று அவன் தங்கத்தை அழைத்துக்கொண்டு மேலே சென்ருன்.

பாகீரதி, அவர்களுடைய வரவைத் தெரிவிக்கவே, விசாலாக்ஷி அலறிப்புடைத்துக்கொண்டு எழுந்திருந்தாள்.

"ஏன் எழுந்திருக்கிறே, சித்தி? அட ராமா! இது என்ன மரியாதை? உடம்பு சரியாய் இல்லாதபோனுல் படுக்கையை விட்டு எழுந்திருக்கலாமா! இந்த ஊருக்கு வந்து இத்தனை நாளாகிக்கூட நீ நாட்டுப்புறமாய்த்தான் இருக்கே!" என்றான் நாராயணன்.

ஆனுல், விசாலாக்ஷி பயபக்தியுடன் நின்றுகொண்டேயிருந்தாள்.

"உட்காரேன், சித்தி; சரியாய்ப் போச்சு; நீயும் ஒரு பயித்தியந்தான். இப்படியெல்லாம் இருந்தால், எங்களோடே நீ எப்படிப் பழகப் போறயோ? நாங்களோ பிசாசுகள்!..தங்கம் நடந்ததை எல்லாம் சொல்லிட்டாள்; சொல்லி - அழுதும் ஆச்சு. தங்கம் அப்படி ஒண்ணும் ரொம்பப் பொல்லாதவள் இல்லை" என்று சிபார்சு செய்வதுபோல், புன்முறுவலுடன் சொன்னுன். "நாங்கள் எல்லாம் கொஞ்சம் முரடுகள்தான். படபடன்னு பேசிடுவோம், அப்புறம் நாங்களே அவஸ்தைப்படுவோம். எங்களாலே, எதையும் மனசுலேயே அழுத்தமாய் வச்சிண்டு இருக்க முடியாது. நிஜத்தைச் சொல்றேன். நீ இனிமேல் அவளோடே பேசமாட்டேன்னு பயந்துட்டாள். அதுக்காக, என்னை சிபார்சு—"

"போரும் அண்ணு உன் பிரசங்கம்!" என்று தங்கம் குறுக்கிட்டு, "நீ இருந்தால் சித்தி நின்னுண்டேதான் இருப்பாள்போலிருக்கு நீ கீழே போ" என்றுள்.

"சரி, போறேன். இனிமேல் என் தயவு என்னத்துக்கு? இன்னொரு தடவை சண்டை போட்டுக்கிறபோது தானே வேணும்!" என்று அவன் கீழே இறங்கிப்போனுன்.

தங்கம் விசாலாக்ஷியின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டாள். "உடம்பு என்ன செய்யறது?" என்று உருக்கத்துடன் கேட்டாள்.

"ஒண்ணும் இல்லே. அப்போ ஏதோமாதிரி இருந்தது. இப்போ சரியாய்ப் போச்சு."

"என்மேலே உனக்கு ரொம்பக் கோபம்-இல்லையா?"

"நானும் நிஜமாய்ச் சொல்றேன், கேளுங்கோ. உங்கள் மேலே எனக்குக் கோபம் இல்லவேயில்லே."

"எங்கேயோ போற ஆத்திரத்தை எல்லாம் உன் மேலே தள்ளினேன்.—அது நியாயமா? அதைத்தான் அண்ணுவும் சொல்ருன். நீ தேம்பித்தேம்பி அழுதபோது, நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் தெரியுமா? நிஜமாய்ப் பயந்துட்டேன்? சுசீலா இப்போ இருந்தால், எவ்வளவோ சகாயமாய் இருக்கும். நீ அவளோடு ரொம்பப் பழகினுயாமே? எங்களைப்பத்தி அவள் ஒண்ணும் சொல்லலையா?"

"எவ்வளவோ சொல்லியிருக்காள்."

"அப்படியின்னுல் எனக்கு அர்த்தமாகல்லையே!"

"அய்யோ! நீங்கள் வித்தியாசமாய் எண்ணிக்காதங்கோ! ரொம்ப நல்லவாள்; பழகப் பழகத்தான் தெரியும்னு சொல்லியிருக்காள்."

"அது எப்படியோ இருக்கட்டும். என் மனசுலே எவ்வளவோ கஷ்டம் இருக்கும். அதுக்காக, உன்னைப் புழுவாய்த் துடிக்கச் செஞ்சது என் தப்புதான்—நான்—நான் அவ்வளவு கெட்டவள் இல்லே, சித்தி!"

"அய்யோ! உங்களைப்பத்தி நான் வித்தியாசமாய் நினைக்கவே இல்லையே! மறுபடியும் சொல்றேன். உங்கள் மேலே எனக்குக் கோபமே இல்லே. எனக்கு ஏன் அழுகை வந்ததுன்னுல், நீங்கள் கேட்டது சரிதானே! அது சரின்னு நினைக்க நினைக்க—" அவள் கண்கள் கலங்கின.

"அதை மறந்துடு, சித்தி? மறந்துடு!" என்று தங்கம் அவளைக் கெஞ்சியவாறு கண்களைத் துடைத்தாள்.

"இதோ பார், சித்தி? அண்ணு என்ன சொன்னுன், தெரியுமா?—'அப்பா செஞ்ச பாவத்துக்கு நாம்பதான்

பிராயச்சித்தம் பண்ணனும்னுன். அண்ணு ரொம்ப நல்லவன், சித்தி; உனக்குப் போகப் போகத்தான் தெரியும். இனிமேல் உன்னை சுகமாய் வச்சிருக்க வேண்டியது எங்களுடைய பொறுப்புன்னு சொல்லி விட்டான். நீ நம்பினுல் நம்பு, நம்பாதபோனுல் போ!"

விசாலாக்ஷிக்குக் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று.

"வேண்டாம், சித்தி! வேண்டாம், வேண்டாம்" என்று தங்கம் ஆசுவாசப்படுத்தினுள். இரண்டு நிமிஷ நேரம் இருவரும் மௌனமாய் இருந்தார்கள். பிறகு, அவள் தலையைக் கோதியவாறு, தங்கம் சொன்னுள்: "அண்ணு இன்னிக்கி ஒரு புதுக்கார் வாங்கிட்டான்."

"அதுக்குள்ளேயா? இப்போ இருக்கிறது போராதோ?"

"அது அவன் அந்தஸ்துக்குக் குறைச்சலாம்! சரி, நமக்கு சுத்தறத்துக்கு ஆச்சு" என்ருள் தங்கம். விசாலாக்ஷி மௌனமாய் இருந்தாள். தங்கம் தொடர்ந்து சொன்னுள்: "அந்த ஊருலே, கை நிறையப் பணம் வரதுங்கிறதைத் தவிர்த்து, எனக்கு ஒண்ணும் பிடிக்கல்லே, சித்தி! என்ன இருந்தாலும், நம்ப ஊராட்டம் ஆயிடுமா? ஒரு மாசம் இருக்கலாம், ஒரு வருஷம் இருக்கலாம். அங்கேயே எப்பவும் விழுந்து கிடக்கணும்னுல், எனக்குப் பிடிக்கல்லே, அம்மா."

"இந்தப் பக்கம் மாத்தமாட்டாளோ?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"எனக்குத் தோணல்லே.—ஆச்சு, இன்னும் பத்து நாள் போனுல், சிந்தாமணி வந்திடுவான். ஏழெட்டுப் பேரை அறுத்துப் படுக்க வச்சிருக்காணும், இல்லாத போனுல் ஓடி வந்திருப்பான். இவாள் ரெண்டு பேருக்கும் இதுதான் வேலே!" என்று அவள் அருவருப்புடன் சொன்னுள்.

"நல்லதைத்தானே செய்யருள்?"

"நல்லதோ கெட்டதோ, அவன் வரத்துக்குள்ளே, புதுக் காரிலே என் சிநேகிதாள் எல்லாரையும் சுத்திப் பார்த்துடணும். நீயும் என்கூட வரணுமாக்கும் - என்ன, வரமாட்டாயா?"

விசாலாக்ஷி புன்சிரிப்புடன் வருவதாகத் தலையை அசைத்தாள்.

"அப்புறம், இன்னிக்கி ராத்திரி நான் இங்கேதான் உன் பக்கத்துலேயே படுக்கையைப் போட்டுக்கப் போறேன். என்னெல்லாமோ சொல்லணும் போலிருக்கு. அண்ணு சொல்ருப்போல, இனிமேல் ஒருத்தருக்கு ஒருத்தர் எப்படி விட்டுப்போகும்? தொணதொணன்னு பேசிஞல் உனக்கு இடைஞ்சலாய் இருக்குமாக்கும்?"

"ஒரு இடைஞ்சலும் இல்லே. சுசீலா அக்கா சொன்னதெல்லாம் சரியாய்த்தான் இருக்கு" என்ருள் விசாலாக்ஷி மலர்ந்த முகத்தோடு.

"சரிதான், இது ஒரு பைத்தியம்னு வச்சுட்டே!"

"அய்யய்யோ! பைத்தியமில்லே. தங்கம்ஞல் தங்கம்!" என்ருள் விசாலாக்ஷி, அன்பு தோய்ந்த குரலில்.

"சரி, உனக்கு என்ன ஆகாரம் கொண்டு வரச் சொல்றே?"

"இங்கே கொண்டு வருவானேன்? வாங்கோ, கீழே போகலாம்" என்று அவள் எழுந்து தங்கத்தை அழைத்தாள்.

"உடம்புக்கு சிரமம் கொடுக்கப்படாது, சித்தி. என் பேச்சைக் கேளு."

"எனக்கு ஒண்ணும் இல்லேயே; வேணும்ஞல், உங்கள் கையைப் பிடிச்சிண்டு, மெள்ள இறங்கறேன்" என்று அவள் அன்புடன் தங்கத்தின் கையைப் பிடித்துக் கொண்டு கீழே சென்ருள்.

# 12

# தொழில் துவக்கம்

சென்னை வைத்தியக் கலாசாலையில் சஸ்திர சிகிச்சைக்குப் பேராசிரியராகவும், ஜெனரல் ஆஸ்பத்திரியில் முதல் ஸர்ஜனுகவும் இருந்த ஒரு பெரியார், நாராயணனை எவ்விதத்திலாவது ஜெனரல் ஆஸ்பத்திரியில் நுழைய விட்டு விடவேண்டுமென்று ஆசைப்பட்டார். இதற்குக் காரணம், நாராயணனின் திறமையும் குணமுந்தான். அப்படிச் செய்வதனுல், தமக்குச் சௌகரியம் ஏற்படுவதோடு, ஆஸ்பத்திரிக்கும் நன்மை உண்டாகும் என்பது அவருடைய நம்பிக்கை. ஆனுல், அவன் உத்தியோகமே வேண்டாமென்று மறுத்ததால் அவனை ஒரு கௌரவ 'ஸர்ஜனு'கச் சிறிது காலம் இருக்கும்படி புத்திசொல்லி, மேல் அதிகாரிகளுக்கு அவர் சிபார்சு செய்தார். சர்க்காரும் அதை அங்கீகரிக்கவே, அடுத்த மாதம் முதல் தேதியிலிருந்து, மூன்று வருஷங்களுக்கு நாராயணனுக்கு அந்த கௌரவப்பதவி அளிக்கப்பட்டது.

நாராயணனுக்கு வெகு சந்தோஷம். தன் ஆசிரியர் தனக்குச் செய்த பேருதவியின் உண்மை அவனுக்கு இப்பொழுதுதான் விளங்கியது; தனது பரிபூர்ணமான நன்றியைச் செலுத்த அவரிடம் சென்றுன். அவர் அன்புடன் வரவேற்று, "மூன்று வருஷமானதும், இன்னெரு மூன்று வருஷம் வாங்கிக்கொள்ளலாம். அதில் ஒன்றும் கஷ்டம் இராது. அதற்குள், நீ காலத்தை வீணுக்காமல், உன் சாமர்த்தியத்தைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். 'சென்னை வைத்திய உலகில் கணக்கிடவேண்டியவர்களில் நாராயணனும் ஒருவன்' என்று நீ பேர் எடுத்துக் கொண்டால் அதுவே எனக்குப் போதும்" என்று அவர் உற்சாகப்படுத்திஞர். நாராயணனுக்கு மனம் உருகியது.

"உங்களுடைய ஆசீர்வாதத்திஞலே, வஞ்சனை இல்லாமல் உழைத்து, உங்களுடைய பெயரை நிலைநாட்டு

வேன். நீங்கள் செய்த உபகாரத்துக்கு நான் என்றும் கடமைப்பட்டவன்'' என்று அவருக்கு மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்தி, அவன் வீட்டுக்குத் திரும்பினான்.

முதல் தேதிக்கு இன்னும் பன்னிரண்டு தினங்கள் தான் இருந்தன. அதற்குள் அவன் எந்தவேலையைச் செய்வதோ அவனுக்குத் தெரியவில்லை. பக்கத்துக் காலி நிலம் வாங்கியாகிவிட்டது. ஆனால் அந்தக் கண்டிராக்டர் கடைக்காலை வெட்டிவிட்டு, ''ஜல்லி வரவில்லை, சுண்ணம்பு வரவில்லை..'' என்று வம்பு செய்துகொண் டிருந்தான். அவனுக்குச் சரியான சூடு கொடுக்கவேண்டும். தங்கமோ அடிக்கடி காரை எடுத்துக்கொண்டு ஆட்டம் போட்டுக்கொண்டு இருந்தாள். சில வேளைகளில், அவன் வேலைக்கு அது இடைஞ்சலாகத்தான் இருந்தது. ஆனால் பாவம்! சித்தி அவளோடு சந்தோஷமாய்க் காலத்தைக் கழித்துக்கொண் டிருந்தாள். போதும் போதாதற்கு இரண்டு தினங்களுக்குள் சிந்தாமணியும் வந்துவிடுவான்; அவனைக் காண வெகு ஆவலாய்த்தான் இருந்தான். ஆனால், ஆனந்தமாய் இருவரும் சென்னையில் ஒருவாரம் சுற்றுவதை விட்டுவிட்டு, சிந்தாமணி 'சேலம் போகவேண்டும், கோயம்புத்தூர் போகவேண்டும்' என்று பிளான் போட்டுக்கொண்டு இருந்தானே? மறுத்தாலும் அவனுக்குக் கோபம்வரும். எல்லாம் ஒரே சங்கடமா யிருந்தது. இந்த எண்ணங்களில் ஆழ்ந்து கிடக்கவே, அவன் சிநேகிதன் ஒருவன் காரை நிறுத்தக் கை காட்டியது அவனுக்குப் புலப்படவில்லை. அவன் கைகளைத் தட்டிய பிறகுதான், நாராயணன் வண்டியை நிறுத்தித் திரும்பிப் பார்த்தான். ''கந்தசாமியா! வாப்பா, வாப்பா'' என்று காரைப் பின்புறமாக நடத்தினான்.

வந்தவன் காரில் ஏறிக்கொண்டு, ''கண்ணை மூடிக்கிட்டு வண்டி ஒட்டறயே! ஆபீஸுக்கு 'டைம்' ஆயிட்டுது. இனிமேல் போய்க் குளிச்சுட்டு, சாப்பிட்டுட்டுப் போக

ணும். ஏதோ 'சான்ஸா' நீ வந்தயே, போகிற வழி தானே, வீட்டுக்குச் சீக்கிரம் போகலாமென்றால்— போருன் அய்யா, பராக்குப் பார்த்துகிட்டு'' என்றான்.

''கவலை ஜாஸ்தியாய்ப் போச்சு, கந்தசாமி?'' என்றான் நாராயணன்.

''நிஜந்தான், அப்பா! தடி பிரம்மசாரி. உங்கிட்டே யிருந்து கால்அணுக்கூட யாரும் எதிர்பார்க்கவில்லை. உனக்குக் கவலை இல்லாட்டி, வேறு யாருக்குடா இருக்கும்?''

நாராயணன் சிரித்தான். ''உன் சங்கதி யெல்லாம் உங்கள் சித்தப்பா சொன்னாரடா!'' என்றான்.

''அது யாருடா, எங்க சித்தப்பா?''

''அதாண்டா, அந்த 'பொயட்' வரதராமானுஜ முதலியார்.''

''அவர்கூட என்னைப்பற்றி விசாரிச்சாரா? சரி, இன்னிக்கு மழை பேயப்போறது போ!''

''மூணு குழந்தைகளாமேடா! 'விகார் ஆப் வேக் பீல்ட்' படிச்சது வீணாய்ப் போகவில்லை. ராஜாங்கத் துக்குச் சரியான சேவை செய்ய ஆரம்பிச்சுட்டே!''

''பொறு தம்பி, உன் சான்ஸூம் வரும்'' என்றான் கந்தசாமி. பிறகு சிநேகிதர்கள் ஏதோ பேசிக்கொண்டே போனார்கள். கந்தசாமி தன் வீட்டண்டை இறங்கிக் கொண்டான். நாராயணன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு சிரமத்தைப்பார்க்காமல் புதுக் கட்டிடத்துக்கு ஒரு வழி தேடவேண்டுமென்ற எண்ணத்தோடு அவசர மாய் வீட்டுக்குப் போனான். அவன் உள்ளே நுழையும் போதே சிந்தாமணியின் குரல் கேட்டது.

''எப்படா வந்தே?'' என்றான் நாராயணன் குதூகலத்தோடு.

''அரைமணி ஆச்சு. சீமைக்குப் போய் வரவனெல் லாம் குண்டாட்டம் திரும்பறான். நீ என்னடா இப்படி

இருக்கே?'' என்றான் சிந்தாமணி. நண்பர்களின் சந்திப்பு பரஸ்பரம் மகிழ்ச்சியைக் கொடுத்தது. சிநேகிதனின் கேள்வியைப் பொருட்படுத்தாமல் நாராயணன் கேட்டான்.

''அப்போ, நாளையன்னிக்கி வறேன்னு ஏன் எழுதினே? உன் சங்கதியே அப்படித்தாண்டா; ஒரு தந்தியாவது கொடுக்கப்படாதோ? ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே.''

"இப்போ என்ன கெட்டுப்போச்சு! இன்னும் ஸ்நானம் பண்ணல்லேயே? சரி, சட்டுப்புட்டுனு வாடா; எனக்குப் பசிக்கிறது.''

''உன் பசிக்கு ஓய்வு ஏது? சாப்பிட்டப்புறம் கொஞ்சம் வேலே இருக்கு. போயிட்டு வரலாமா?"

"இரண்டுமணி வரையிலும் பேசப்படாது. நான் ஒரு தூக்கம் போட்டாகணும். ராத்திரியெல்லாம் நான் கண் மூடல்லே—''

"பசி, தூக்கம், எப்பவும் உனக்கு இந்த எழவுதான்."

''ஏண்டா, இது இரண்டுக்குத்தானே நம்ப தொழிலே ஏற்பட்டிருக்கு?''

நாராயணன் பேசாமல், அவசரமாய் ஸ்நானம் செய்யப் போனான்.

பிறகு தோழர்கள் இருவரும் வம்பளந்துகொண்டு நிதானமாய்ச் சாப்பிட்டார்கள். சாப்பாட்டுக்குப் பிறகு, சிந்தாமணி - இளைப்பாறப் படுக்கையைப் போட்டுக் கொண்டான்; ஆனால், நாராயணன் நேரத்தை வீணாக்க இஷ்டம் இல்லாமல், தன் அலுவல்களைக் கவனிக்க வெளியே கிளம்பினான்.

இரண்டு மணிக்குக் கணக்காய் நாராயணன் திரும்பி வந்தான்! ஆனால் சிந்தாமணி எழுந்தபாடில்லே. தங்கம், குழந்தையின் சட்டைக்காகத் துணியைக் கத்தரித்துக் கொண்டு இருந்தாள். விசாலாக்ஷியும் பாகீரதியும் பக்

கத்தில் உட்கார்ந்துகொண்டு, கத்தரிப்பதைக் கவன மாகப் பார்த்துக்கொண்டு இருந்தார்கள். நாராயணனைக் கண்டதும் விசாலாக்ஷி திடுக்கிட்டு எழுந்திருந்தாள். "இதென்ன தோப்புக்கரணம் சித்தி? சரி, எழுந்தது எழுந் திருந்தெ, காபியைத் தயார் பண்ணச் சொல்லு. நான் சரியாய் மூணு அடிக்கிறபோது ஒரு இடத்துலே இருக் கணும். இவன் என்னடான்னால், அடிச்சுப் போட்டாப் போல தூங்கறான்'' என்றான் நாராயணன்.

"காபி தயார் ஆயிடுத்தே: சூடாய் இட்லி கூடப் போட்டுண்டு இருக்கான்'' என்றாள், விசாலாக்ஷி பணி வுடன்.

"அவசரமாய் இருந்தால் நீ போயிட்டு வந்துடேன், அண்ணா. அவரை ஏன் கஷ்டப்படுத்தறே?'' என்றாள் தங்கம்.

"கஷ்டமென்னவந்தது கேடு!'' என்றான் நாராயணன், கண்களைத் துடைத்துக்கொண்டு வரும், சிந்தாமணியைப் பார்த்துவிட்டு.

"அடே, ஏண்டா வந்ததும் வராததுமாய் என்னை வெய்யறே?''

"வெய்யறதோடு போச்சேன்னு, சந்தோஷப்படு; சட்டுப் புட்டுனு வாடா. பொன்னுரங்கம் காத்திண்டி ருப்பான். அவன் 'நர்ஸிங் ஹோம்'லே, ஒண்ணு 'ஸர்ஜி கல் கேஸ்' ஆக இருக்கலாம்னு சந்தேகப்படறான்.''

"பொன்னுரங்கம் 'நர்ஸிங் ஹோம்' வச்சுட்டானா? பேஷ், அவன் முன்னுக்கு வரவேண்டியவன்தான்.''

"சரி, உன் ஸர்டிபிகேட் இருக்கட்டும். சீக்கிரம் வந்து தொலையேன்.''

"அப்பா, என்ன பொறுமையடா'' என்று அவன் குழாயண்டை போனான்.

"பொறுமைக்குத்தான் நீ இருக்கயே,—சித்தி இருக் காள், பாகீரதியும் அப்படித்தான் போலிருக்கு—தங்கம்,

நான் இன்னும் ஆறுநாளேக்கு ஊருலே இருக்கமாட்டேன்; சேலத்துலே இரண்டுநாள் இருக்கணும், கோயம்புத்தூருலே மூணுநாள் இருக்கணும்னு பிராணனை வாங்கருன். ஆகையிஞலே, காரை எவ்வளவு உபயோகப் படுத்திக்கணுமோ, அவ்வளவையும் பண்ணிக்கோ. ஆனல் முரட்டு வேகமாய் ஓட்டச் சொல்லாதே. நானும் டிரைவர் கிட்டே சொல்றேன்.''

''கோயம்புத்தூருக்கும் போறயா?'' என்று தங்கம் புன்முறுவலுடன் அவனை விழித்துப் பார்த்தாள்.

''விடமாட்டேங்கருனே! மூணு நாளை எப்படித் தள்ளறதோ தெரியல்லே—''

''தமாஷாய்த் தள்ளலாம், வா'' என்ருன் சிந்தாமணி, அவன் பேச்சைக் கேட்டுக்கொண்டு வந்து.

''சிந்தாமணி அண்ணு, நான் ஊருக்குப் போறத்துக்குள்ளே முடிச்சுடேன்'' என்று தங்கம் கெஞ்சியவாறு கேட்டுக்கொண்டாள்.

''ஏதோ எல்லாம் என் கையிலே இருக்கருப்போலே பேசறயே! அதை உங்க அண்ணுகிட்டேயன்ஞ சொல்லணும் நீ'' என்ருன் சிந்தாமணி.

தங்கம் நாராயணனைப் பார்த்தாள்; விசாலாக்ஷி விஷயம் தெரிந்தும் தெரியாததுமாய், ஒவ்வொருவரின் முகபாவத்தையும் கவனித்தாள்.

''கலகம் பண்ணறதுதாண்டா வேலை உனக்கு,— என்ன முழிக்கறே, தங்கம்? அவன் ஏதோ உளறிக் கொட்டருன்; உனக்குத் தெரியாதெ ஒண்ணும் நடக்காது. பயப்படாதே! சரி, எங்களுக்குச் செஞ்சதை வச்சுடேன். தின்னுட்டு, நாங்கள் ஓடணும்'' என்ருன் நாராயணன்.

அதன்மேல் தங்கம், பாகீரதியைக் காபி பலகாரங்களைக் கொண்டுவந்து மேஜையின் மீது வைக்கச் சொன்ஞள். இருவரும் புசித்துவிட்டுப் புறப்பட்டுப் போயினர்.

அவர்கள் போனதும், விசாலாக்ஷி சமாசாரத்தை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலோடு, தங்கத்தை விசாரித்தாள்.

"எதுவாக இருக்கும்? நீதான் சொல்லேன்."

"கல்யாண விஷயம்னுதான் நன்னுத் தெரியறது."

"நன்னுத் தெரியறதா?— நீ கெட்டிக்காரி, சித்தி!"

"ஆமாம், என் கெட்டிக்காரத்தனத்தைச் சொல்லுங்கோ! எல்லாத்தையும் விவரமாய்ச் சொல்ல மாட்டேங்கறேளே?" என்று விசாலாக்ஷி முகத்தைச் சுளித்துக்கொண்டாள்.

"உனக்குக்கூடக் கோபம் வரதே, சித்தி!"

"நான் மட்டும் மனுஷி இல்லையா? சரி, சொல்றேளோ மாட்டேளோ?"

"ஆ! உனக்கும் ஆத்திரம் வரது, பார்த்தாயா-அம்மா பொறுமைக்காரி! சொல்றேன், கேள்—கோயம்புத்தூருலே கோபாலய்யர்னு ஒரு வக்கீல் இருக்கார். அவருக்கு ஒரே ஒரு பொண்ணு. அவள் பேர் விமலா; உன் வயசுதான் இருக்கும். வெள்ளைக்காரிச்சியாட்டம் இருப்பாள். 'இண்டர்மீடியட்' பாஸ் பண்ணியிருக்காள். பாட்டிலே மெடல் வாங்கியிருக்காள். அந்த ஊருலே 'பி. ஏ.' க்ளாஸ் இல்லை. அதனுலேதான் மேலே படிக்கல்லை. அவ அம்மாவுக்கு அவளை விட்டு ஒரு நிமிஷங் கூடப் பிரிஞ்சு இருக்க இஷ்டமில்லை—"

"கல்யாணமானுல் என்ன பண்ணுவாளாம்?" என்ருள் விசாலாக்ஷி.

"நீ அவளைத்தான் கேழ்க்கணும்" என்ருள் தங்கம். விசாலாக்ஷி சிரித்தாள். "சரி, நீங்கள் இழுத்துண்டு இழுத்துண்டு பாட்டியாட்டம் கதை சொல்லவ்வண்டாம்—நீங்கள் அவாத்துக்கு எப்போவாவது போயிருக்கேளா?"

"போயிருக்கேன், சாப்பிட்டிருக்கேன்." பிறகு, பாசாங்குப் பேச்சை நிறுத்தி, சுபாவமாக மேலே

சொன்னாள்: "அவாத்துலே 'கஜகஜ'ன்னு பத்துப் பேர் வந்து போயிண்டுதான் இருப்பாள். வக்கீலோ இல்லையோ, நல்ல வரும்படி! செலவெல்லாம் பெரிய தர்பார்தான். அந்த ஆத்துப் பெரியதனமெல்லாம் அந்த அம்மாளுக்கே; கோபாலய்யர் மாடியை விட்டு இறங்கினதை நான் பார்க்கவேயில்லை. சதா அவரைச் சுத்திப் பத்துப் பேர் பேசிண்டே கிடந்தார்கள். அவருக்குச் சாப்பிடக் கூடப் பொழுது இருக்குமோன்னு எனக்குச் சந்தேகம். வீட்டுக்கு எஜமானி என்றால் அந்தம்மாளுக்குத்தான் தகும். பொறந்தாத்துலேருந்து சீதனம் எதேஷ்டமாய்க் கொண்டு வந்தாளாம்."

"அப்படிச் சொல்லுங்கோ. அதான் அவ்வளவு பெருமை!" என்றாள் விசாலாக்ஷி.

"அதனாலே மட்டும் இல்லை. சுபாவமே அப்படி.... அவாத்துலே ஒரு சங்கதி மாத்திரம் நான் மறக்கவே மாட்டேன். பெரிய புழக்கடை; அதுலே மாதுளை மரங்கள் இருந்தது. ஒரு பழம் ஒண்ணு, இதோ பார், இவ்வளவு பெரிசுன்னால் இவ்வளவு பெரிசு!" என்று கைகளைக் காட்டினாள். "ருசி எப்படீங்கறே, கல்கண்டு தோத்துப் போகும். மாதுளம்பழத்துக்காகவாவது அவாத்துக்குப் போயிட்டு வரணும்னு இருக்கு" என்றாள் தங்கம்.

"சரி, போயிட்டு வாங்கோ. விமலாவைப் பத்தி ஒண்ணும் சொல்லலையே."

"இன்னும் என்ன சொல்றது? வெள்ளை வெளேர்னு இருப்பாள். 'டிரஸ்' எல்லாம் வெகு நாகரிகமாயிருக்கும். பார்த்தாலே பெரிய மனுஷாள் வீட்டுப் பொண்ணுன்னு தெரியும்." பிறகு விசாலாக்ஷியை உற்றுப் பார்த்துக் கொண்டு, "ஆனால், உன் அழகு வராது!" என்றாள். விசாலாக்ஷி இரு கைகளாலும் அவளைப் பிடித்துத் தள்ளினாள். "கோவிச்சிக்கிண்டாலும், கோவிச்சுக்கோங்கோ— உங்களுக்கு ரொம்பக் கொழுப்பு!"

"உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்! அவளது ஒரு மாதிரி அழகு. வெள்ளைத் தோலைப் போத்திண்டுட்டால் மட்டும் எல்லா அழகும் அமைஞ்சுடுமா?"

"அப்படி அமையாமே 'அண்ணா' பண்ணிப்பாரா?"

"அது வேறே பேச்சு, அவனுக்குத் தகுந்தவள் இல்லையின்னு நான் சொல்லல்லையே. அவனுக்கும் பிடிச்சிருக்கு. ஆனால், அவள் அம்மா ஒண்ணும் அவ்வளவு கர்வப்பட்டுக்க வேண்டாம்னு சொல்றேன். எனக்குக் கர்வமிங்கறே; அவளைப்பார்த்தால், என்ன சொல்வயோ?"

"அய்யய்யோ! நான் உங்களுக்குக் கர்வமின்னு சொன்னேனா!"

"சொல்லாத போனால், நினைச்சிண்டு இருப்பே!"

"நீங்கள் தேவலையே. ஒநாய் ஆட்டுக்குட்டி சமாசார மாட்டம்னா இருக்கு! என்னை வம்புக்கு இழுக்காதேங்கோ, அம்மா!"

"எங்கள் சித்தியை நான் இழுப்பேனா?" என்று தங்கம் அன்புடன் அவள் மோவாய்க்கட்டையை அசைத்தாள்: "சரி; இந்த அஞ்சாறு நாளைக்கு என்ன 'புரோகிராம்' போடலாம்?"

"உங்கள் இஷ்டம்போலே போடுங்கோ.—இப்போ சிந்தாமணி எந்தப் பக்கம் சேர்ந்தவர், எனக்குத் தெரியல்லியே!"

"இரண்டு பக்கமும் அவனுக்கு வேண்டியவாள்தான்: அண்ணா மேலே அவனுக்கு உயிர்; கூடப் பிறந்தவாள்கூட அவ்வளவு பிரியமாக இருக்கமாட்டாள். அது அவனோடு பழகினவாளுக்குத்தான் தெரியும். விமலா அப்பாவோ அவனுக்கு ஒண்ணுவிட்ட அண்ணா ஆகணும். அதாவது, இவன் தாத்தாவும், கோபாலய்யர் தாத்தாவும் சொந்த அண்ணன் தம்பிகள். பத்து நாள் தாயாதிக்காரன். ஆனால், முறையிலே அண்ணாவானாலும், சிந்தாமணியை விடக் கோபாலய்யர் வயசுலே ரொம்பப் பெரியவர். படிக்

கிறதற்கு, சேலத்திலே 'பிராக்டீஸ்' வைக்கிறதற்கு எல்லாத்துக்கும் ரொம்ப சகாயம் செஞ்சிருக்கார். இந்த சம்பந்தத்துக்காக அவனும் மூணு வருஷமாகப் பிரயத்தனப் படறுன். அது எப்போ முடியுமோ, யார் கண்டார்கள்?''

''சேலம் நல்ல ஊர்தான்; எங்கள் அத்திம்பேர்கூட ஒருத்தர் அங்கே இருக்கார். நான் ஒரு தடவை போயிருக்கேன். நீங்கள் மாதுளம் பழத்தை நினைச்சிண்டாப் போலே-அந்த ஊருலே மாம்பழம் ரொம்பமலிவு. ஒண்ணுகூடப் புளிக்காது'' என்ருள் விசாலாக்ஷி, பழைய நினைவோடு.

''உங்கள் அத்திம்பேர் என்ன பண்ணருர்?''

''இத்தனை நாளாய் ஒரு ஜவுளிக் கடையிலே குமாஸ்தாவாய் இருந்தார். இப்போ சொந்தமாய்க் கடை வைக்கணும்னு பார்த்துண்டு இருக்காராம். நல்ல லாபம் வரும்னு எங்கள் அப்பாவை சேரச் சொல்ருராம். என்ன பண்ணருளோ யாருக்குத் தெரியும்?''

''ஜவுளி வியாபாரத்துலே கொள்ளை பணம், சித்தி! உங்கப்பாவை வைக்கச் சொல்லு. எனக்குத் தெரிஞ்சு, இந்த ஊருலே ஒருத்தன் வீடு வீடாய்ப் புடவையைக் கொடுத்துப் பணத்தைத் தண்டிக்கிண்டு இருந்தான். அவனுக்கு இப்போ நாலு வீடாம்; பெரிய கடை; அவன் கீழே நாலு பேர்; அன்னிக்கிப் பார்த்தால், எனக்கு ஆள் அடையாளம் தெரியல்லே. அவனுக்கு இங்கிலீஷ் ஒரு வார்த்தை வராது. இதெல்லாம் பார்த்தால், என்ன உத்தியோகம் வேண்டியிருக்குன்னு தோன்றது!'' என்ருள் தங்கம்.

''எல்லாத்துக்கும் அதிர்ஷ்டம் வேணும்'' என்ருள் விசாலாக்ஷி.

''அதிர்ஷ்டம், அதிர்ஷ்டம்னு சொல்லிண்டு இருந்தால் வந்துடுமா? ஒரு காரியத்தைச் செஞ்சு பார்க்கணும்.

அதிர்ஷ்டம்னுல் ஏதோ ஞாபகம் வருது.—அம்மா பாகீரதி, குழந்தை மேலே அழறுப்போல இருக்கு. கொஞ்சம் தட்டித்தூங்கப் பண்ணிட்டு வாம்மா'' என்று பாகீரதியை மேலே அனுப்பிவிட்டு, ரகசியமாக விசாலாக்ஷியினிடம் சொன்னுள். ''பாகீரதிக்கு ஒரு அதிர்ஷ்டம் அடிக்கட்டுமே! சிந்தாமணி அவளைக் கல்யாணம் பண்ணிக்கப்படாதா?''

தங்கத்தின் அன்புமொழிகள் அவளுடைய அந்தரங்கத்தில் பதுங்கியிருந்த ஓர்ஆசையைத் தட்டி எழுப்புவதுபோல இருந்தன. ''உங்களுடைய தங்கமான மனசு அப்படிச் சொல்லச் சொல்றது. ஆனுல், என்னவோ சொல்லுவாளே—முடவன் கொம்புத் தேனுக்கு ஆசை பட்டாப்போலே, அது நடக்குமா?''

''ஏன் நடக்கப்படாது? பாகீரதிக்கு அழகு இல்லையா? புத்திசாலித்தனம் இல்லையா? உனக்கானுலும் எங்கேயும் இல்லாத கூச்சமும் பயமும். அவள் கெட்டிக்காரி, சமாளிச்சுப்பாள். எனக்கு ஏன் இந்த எண்ணம் வந்ததுன்னுல், முனியம்மாள் நடக்கிற வழியிலே குழம்போ எதையோ கொட்டிட்டு, சரியாக அலம்பாமல் போயிட்டாள் போலிருக்கு. பாகீரதி, 'சுத்தமே இல்லை, சுத்தமே இல்லை'னு கடுத்துண்டு பெரிய பக்கெட்டு நிறைய ஜலத்தை வச்சிண்டு அலம்பிண்டு இருந்தாள். அதைப் பார்த்துவிட்டு, சிந்தாமணி என்னவோ ரகசியமாய் அண்ணுவோடே சொன்னுன். இரண்டு பேரும் சிரித்தார்கள்.''

''அதுலேயிருந்து அவர் கல்யாணம் பண்ணிப்பார்னு சொல்லலாமா?'' என்ருள் விசாலாக்ஷி.

''இன்னும் சொல்றேன், இரு. பாகீரதி அலம்பிட்டு, அவசர அவசரமாய்க் குழாயண்டை ஓடினுள். அந்தத் தூண்ண்டை பாசி பிடிச்சுக்கிடக்கிறுப்போலே இருக்கு. கால் சறுக்கிக் கீழேவிழுந்து பல் உடையணும் அவளுக்கு. நல்ல வேளையாய் இரண்டுகையாலேயும் தூணைப்பிடிச்

சிண்டு வழுக்கு மரத்துலே சறுக்குவாளே, அதுமாதிரி சறுக்கிண்டு, கீழே உட்கார்ந்தாள். அப்போ சிந்தாமணி, 'ஓ'ன்னு போட்ட கூச்சலையன்னு பார்க்கணும்! பாகீரதி வெட்கப்பட்டுண்டு, உள்ளே ஓடிப்போனாள். ஆனால் அவன் அவளை விட்டால்தானே? 'காயமாச்சா? இடுப்பிலே அடிபட்டுதா! அப்படியாச்சா?—இப்படியாச்சா'ன்னு அவன் கேள்விகள் கேட்டதைப் பார்த்தால், எனக்குச் சிரிப்பாய் வந்தது.''

"நீங்கள் ஒருத்தர், அவருக்கு இரக்கமுள்ள சுபாவம். யாராயிருந்தாலும் அப்படித்தான் கேட்டிருப்பார்.''

''அவனை உனக்கு மேலே எனக்குத் தெரியும், சித்தி! நானும் பொம்மனாட்டிதானே?—அவன் பயந்துபோய் முழிச்சதை நீ பார்த்திருந்தால், சந்தேகமே படமாட்டே. பணத்துக்கு ஆசைப்படறவன் இல்லை. அவன் மனசுக்குப் பிடிக்கவேண்டியது ஒண்ணுதான். எனக்கு என்னவோ அம்மா, அவன் அவள்மேலே கண்ணைப் போட்டுட் டான்னுதான் தோணறது'' என்று தங்கம் குறும்புத் தனமாய்ச் சொல்லிச் சிரித்தாள்.

''பகவான் புண்யத்துலே, உங்கள் வாக்கு பலிக்கட்டுமே. ஆனால் ஒரு ஜோசியர் மட்டும் சொல்லி யிருக்கார்—அவளுக்குக் கல்யாணம் கொஞ்ச நாள் பட்டுத்தான் ஆகுமாம், ஆனால் தங்கமான இடமாய்க் கிடைக்குமாம். தாமசமாகறத்துக்குக் காரணம் கொஞ்சம் சனி தோஷம் இருக்காம். சனிக்கிழமை தவறுமே சனி பகவானுக்குப் பிரதட்சிணம் பண்ணி, விளக்குலே—''

''ஆமாம், இதெல்லாம்பயித்தியம், சித்தி. எண்ணெய் ஊத்தி விளக்கு வச்சால், எல்லாம் சரியாய்ப் போயிடு மாக்கும்? நடக்கிறது நடந்துதான் தீரும்.''

''இருந்தாலும், நீங்கள் இப்படி இருக்கப்படாது. ஒரு கோவில், ஸ்வாமின்னு வேண்டாமா?''

"என் பங்கையும் சேர்த்துச் செய்யறத்துக்கு என் சித்தி இருக்காளே! சரி, எழுந்திரு; அவாள் நாளைக்கு ஊருக்குப் போருளாமே. காரியத்தைக் கவனிக்கலாம்'' என்று தங்கம் எழுந்திருந்து, விசாலாக்ஷியையும் கையைப் பிடித்துத் தூக்கிவிட்டாள்.

மறுநாள் சிந்தாமணி நாராயணனை அழைத்துக் கொண்டு சேலத்துக்குப் போய்விட்டான். நாராயணன், குறிப்பிட்ட நாளில் பட்டணத்துக்குத் திரும்பி வரவில்லை. அதற்குப் பதிலாக, எதிர்பாராத அலுவல்களினுல் இன்னும் இரண்டு மூன்று தினங்கள் அதிகமாகத் தாமதிக்கவேண்டியதாயிற்று என்று அவன் கோயம்புத் தூரிலிருந்து கடிதம் எழுதினுன்; கடைசியாக ஜெனரல் ஆஸ்பத்திரியில் கௌரவ ஸர்ஜனுக அவன் வேலையை ஏற்றுக்கொள்ளவேண்டிய தினத்துக்கு முதல்நாள் வந்து சேர்ந்தான். தங்கையும் தகப்பனுரும் ஆவலோடு கோயம்புத்தூரில் நடந்த விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டார்கள்.

''கோபாலய்யர் இன்னும் என்ன சொன்னுர்?'' என்று ஜானகிராம ஐயர் விசாரித்தார்.

"இந்த ஏற்பாட்டுலே அப்பாவுக்குத் திருப்திதானேன்னு கேட்டார். ஆமாம்னு சொன்னேன்-சரிதானே?''

''ரொம்ப சரி'' என்று ஜானகிராம ஐயர் ஆமோதித்தார், பாவம்.

''அப்புறம், அந்த அம்மா ஆருயிரம் ரூபாயிக்கு ஒரு பெரியலிஸ்டு போட்டு ஆத்துலே பொம்மனுட்டிகள், பெரியவாள் யாரும் இல்லாததுனுலே, உன்கிட்டே காட்டும்படி கொடுத்தனுப்பிச்சாள். நான் அதெல்லாம் எடுத்துண்டு போகமாட்டேன்னு சொல்லிட்டேன்''

''என்ன அண்ணு இது! வரதக்ஷிணைதான் வாங்க மாட்டேன்னுல், சீர் செனத்தி ஏன் வேண்டாங்கறே? அந்த 'லிஸ்டை' கொண்டுவரதுக்கென்ன?'' என்று தங்கம் கோபித்துக் கொண்டாள்.

“இப்போ தலை போறதென்ன? அடுத்த வாரம் சிந்தாமணி அந்த ‘லிஸ்டோ’டே இன்னும் முப்பத்திரண்டு கொண்டுவரப் போருன்—அப்போ பார்த்துக்கோயேன். தங்கம், அங்கே சிந்தாமணி வச்சதுதான் சட்டம். அவாள் பணம் செலவழிக்கத் தயங்கவில்லை. அதுக்காக, கண்ணை மூடிண்டு, இது வேணும், அது வேணும்னு ரொம்ப ஆசைப்பட்டவாள்னு சொல்லும்படி வச்சுக்காதே. சரி, இனிமேல், ஒரு நிமிஷங்கூட என்னலே சும்மா இருக்க முடியாது; நாளைக்கு வேலையை ஒப்புக்கிறதுக்கு முந்தி எவ்வளவோ காரியத்தைப் பார்க்கணும்” என்று நாராயணன் பரபரப்புடன் தன் பீரோவைத் திறந்து, துணிமணிகளைப் புரட்ட ஆரம்பித்தான்.

அடுத்த நாள் காலையில், நாராயணன் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குச் சென்றபொழுது, அவனை அறிந்த சில டாக்டர்கள் அவனை அன்புடன் கைகொடுத்துப் பாராட்டினார்கள். அவனுக்குப் பிரித்துக் கொடுத்திருந்த ‘வார்டை’ இதுவரையிலும் பார்வையிட்டு வந்தவர், அதன் பொறுப்பை அவனிடம் ஒப்பித்தார். நாராயணன், தான் சிகிச்சை செய்யவேண்டிய ஒவ்வொரு நோயாளியையும் நிதானமாய்ப் பார்த்துச் சிறிது சிக்கலான வியாதியஸ்தர்களைக் கேள்விகள் கேட்டுக்கொண்டு மெள்ளத் தன் ‘வார்டு’ முழுவதையும் சுற்றிப் பார்த்தான். பிறகு, தனக்காக அமைக்கப்பட்டிருந்த அறையில் உட்கார்ந்து கொண்டு, தான் தெரிந்துகொள்ள வேண்டிய மற்றும் சில விஷயங்களைக் கவனித்தான்.

# 13

## விமலா

நாராயணனுக்குப் பதவியின் புதுமையால் ஏற்பட்ட பரபரப்பு சில தினங்களுக்குள் நீங்கிவிட்டது. சம்பளம் உண்டோ இல்லையோ, 'ஸர்ஜன்' என்ற ஸ்தானத்தில் இருந்தவர்களில் மிகச் சிறியவன் அவனே. இதனால், சில ருக்கு அசூயை உண்டானதும் அவனுக்குத் தெரியாமல் போகவில்லை. இதற்குத் தூபம் போடுவதுபோல், அவன் சேர்ந்த ஒரு வாரத்துக்குள்ளாகவே ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

ஆஸ்பத்திரியில் வயதிலும் அநுபவத்திலும் முதிர்ந்து அனைவராலும் "ஏ. ஆர்." என்று சகஜமாய் அழைக்கப் பட்டு வந்த ஒரு டாக்டர் இருந்தார். அவருடைய பிரை வேட் சிகிச்சையில் ஒரு மாதகாலம் இருந்த ஒரு குழந்தை, அவனுடைய வார்டில் சேர்க்கப்பட்டது. ஆனால் "ஏ. ஆர்" அதை முதல் முதலாகப் பார்த்து வந்தார் என்ற விஷயம் நாராயணனுக்குத் தெரியவே தெரியாது. குழந்தையின் வியாதி—'வயிற்றில் கட்டி' என்று நிர்ண யிக்கப்பட்டது. கட்டியால் ஜ்வரம் ஓயாமல் வந்துகொண் டிருந்தது. ஜ்வரம் நின்றால் ஒழிய, "ஏ. ஆர்"ருக்கு ஆப ரேஷன் செய்து, கட்டியை எடுக்க இஷ்டமில்லை. ஆனால், கட்டி போனால் ஒழிய ஜ்வரம் நிற்காது. எது முந்தி, எது பிந்தி என்று யோசித்துக்கொண்டே வருவதற்குள், குழந்தை மிகவும் கேவலமாகிவிட்டது. இந்த நிலையில் தான் அது நாராயணனிடம் வந்தது. இவ்வளவு தாம தித்ததற்குக் கோபித்துக்கொண்டு, குழந்தை வந்த சில மணி நேரத்துக்குள், அவன் வயிற்றைக் கீறிச் சுத்தம் செய்துவிட்டான். மந்திரம் போட்டாப்போல், குழந்தை யின் பலமும் ஆரோக்கியமும் அபிவிருத்தி அடையத் துவங்கின. ஆபரேஷன் ஆன இரண்டொரு தினங்களுக் குப் பிறகு, இவ்விஷயங்களெல்லாம் அவனுக்குத் தெரிய

வந்த பொழுது, அவன் மிகவும் வருத்தப்பட்டான். ஆனால் இனி என்ன செய்யமுடியும்?

சிந்தாமணிக்குச் சற்று நிதானமானாலும், எதையும் திருந்தச் செய்யவேண்டும். இல்லாவிட்டால், அவன் மனம் ஒப்பாது. விமலாவின் கல்யாண சம்பந்தமான உத்தியோகத்தை ஏற்றுக்கொண்ட பிற்பாடு, அவனுக்கு ஓய்வே இல்லாமல் போய்விட்டது. அவன் பல ஜாபிதாக்களைத் தயாரித்துக்கொண்டு சென்னைக்குவந்து, அவைகளை ஜானகிராம ஐயர், தங்கத்தின் முன்பாக வைத்து, ஒவ்வொன்றுக்கும் அவர்களுடைய அபிப்பிராயங்களைக் கேட்டான். பக்கத்தில் உட்கார்ந்திருந்த நாராயணனுக்கு இருந்தாற் போலிருந்து சிரிப்பு வந்தது. "டேய்! நீ பொம்மனாட்டியாய்ப் பிறந்திருக்கணும்டா!" என்றான்.

சிந்தாமணிக்குக் கோபம் வந்தது. "நீ மரியாதையாய் உன் ரூமுக்குப் போடா! பொம்மனாட்டிகள் அவ்வளவு கேவலமா? இவன் பேத்தறதைப் பாருங்க, மாமா!" என்று ஜானகிராம ஐயரைத் தனக்கு உதவியாக அழைத்துக்கொண்டு, அவன் வேலையைக் கவனித்தான். பக்கத்து அறையில் உட்கார்ந்திருந்த விசாலாக்ஷியும் பாகீரதியும் சிரிப்பை வெளிவிடாமல், வாயை மூடிக்கொண்டனர். நாராயணன் எழுந்துபோனவன் மறுபடியும் வந்து உட்கார்ந்துகொண்டான். அம்மூவருடைய ஆலோசனைகளைப் பார்க்க அவனுக்குத் தமாஷாக இருந்தது. இதனால் பக்கத்து அறையிலிருந்து அவர்கள் ஏற்பாட்டின் விவரங்களைச் சுவாரஸ்யமாகக் கவனித்து வந்த விசாலாக்ஷிக்கு, தன்னை அறியாமலே அவ்விரண்டு சிநேகிதர்களுடைய தாரதம்மியங்களை உற்றுநோக்க நேர்ந்தது.

நாராயணன் நல்ல உயரம்; சிவந்த மேனி. உயரத்துக்குத் தகுந்த பருமன்; நிமிர்ந்த தலை. எப்பொழுதும் லேசாய்ச் சிவந்திருந்த கண்களில், எந்த விஷயத்தையும் ஒரு க்ஷணத்தில் தெரிந்துகொள்ளக் கூடிய ஒருசக்தி;

தோற்றத்தில், 'துரு துரு' என்ற ஒரு பரபரப்பு. தனக்கு எல்லாம் வேண்டும். ஆனால் ஒன்றும் லட்சியமில்லை என்ற ஒரு பாவம். அவன் குணங்களை வர்ணிக்கச் சொன்னால், விசாலாக்ஷியால் முடியாது. ஆனால் அவை களை எல்லாம் அவள் மனம் அறிந்தது; இதயமும் ஆமோதித்தது.

சிந்தாமணி அவ்வளவு உயரமில்லை; ஆனால், ஒற்றை நாடிச் சரீரமானதால், உயரமாக எடுத்துக் காட்டியது. மாநிறம். உருண்ட விழிகளில் பரம சாந்தம். பார்க்கும் பொழுதே 'இவனை நம்பலாம்' என்ற எண்ணம் அனைவருக்கும் ஏற்படும். அவனுடைய நாவிலிருந்து வார்த்தை வருவதற்கு முந்தி, அவனுடைய கண்களே முதலில் பேசுவதுபோல இருந்தன. நாராயணனுக்கோ, அவனுடைய கண்களும் நாவும் ஒரே நொடியில் போட்டி போட்டுக்கொண்டு வேலை செய்யும். அவர்களுடைய முக பாவங்களைக் கவனிக்கும்போது, காலையில் வீட்டுக்குப் பிச்சைக்கு வந்த ஓர் ஏழைக் கிழவனின் ஞாபகம் அவளுக்கு வந்தது. சிந்தாமணி, அவனைக் கால்மணி நேரம் விசாரித்து, நாலணாவைக் கொடுத்து அனுப்பினான். அவன் வாசற்படிகள் இறங்கிப் போகும்பொழுது, ஒரு நோயாளியைப் பார்த்துத் திரும்பிவந்த நாராயணன் அவனைக் கண்டான். பரிதாப நிலையிலிருந்த கிழவன் கைகளைத் தூக்கினான். நாராயணன் பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்து, அவன் கையில்வைத்து, போய்வரச் சொன்னான். இந்தச் சம்பவம் ஒன்றே அவர்களுடைய தாரதம்மியங்களை எடுத்துக் காட்டுவதுபோல் இருந்தது.

ஆலோசனைகள் முடிந்தன. சிந்தாமணிக்கும் தன் கடமையைச் செய்த திருப்தி ஏற்பட்டது. "அப்புறம்" என்று அவன் வேறு விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தான். "அடுத்த வாரம் நுங்கம்பாக்கத்திலே ராமபத்திர ஐயர் வீட்டிலே கல்யாணம். எங்க மன்னிக்கு அவாள் ரொம்ப நெருங்கிய பந்துக்கள். அண்ணா வரதுக்கு

இல்லே. ஆகையினலே, மன்னியும் விமலாவுந்தான் வரப் போருள். துணைக்குக்கூட யாராவது வருவார்கள்; அவாள் உங்களுக்கும் உறவுபோல இருக்கே, மாமா? கல்யாணத்துக்கு உங்களுக்குக் கடுதாசு வராதோ?''

“கட்டாயம் வரும். ஒரு மாசமாய், ராமபத்திரன் எங்கிட்டே வந்துண்டு இருக்கானே. எங்க ஆபீஸுலே, ஜாதகங்கள் பார்க்கிறதுலே பஹு நிபுணர் ஒருத்தர் இருக்கார். அவரைத்தான் பொருத்தங்களை எல்லாம் நன்ளு பார்க்கச் சொன்னேன். கடுதாசோடே நிற்காது. நேரிலேயே வந்து கூப்பிடுவான்'' என்ருர் ஜானகிராம ஐயர்.

“அப்போ, ரொம்ப நல்லதாய்ப்போச்சு. மன்னியையும் விமலாவையும் ஆத்துக்கு அழைச்சிண்டு வந்து, இரண்டுநாள் இருக்கச் சொல்லுங்களேன்.''

“நான் அழைச்சால் வருவாளா?'' என்ருள் தங்கம்.

“நீ, மாமா, உங்கள் சித்தி, இத்தனை பேரும் அழைச்சால், வராமல் இருப்பாளா? இவனையும் வேணும்ஞல் சிபார்சுக்கு அழைச்சுண்டு போ'' என்று சிந்தாமணி நாராயணனைக் காட்டிஞன்.

“உன்க்கு ரொம்பத் திமிர்பிடிச்சுப் போச்சுடா!''

“நிஜம்தானே! எல்லாரும் உன்னை வருந்தி அழைக்கிருளே ஒழிய, என்னைச் சீந்துவார் யாரும் இல்லே.''

“ஏன் அண்ணு, நீயும் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்லு, அப்புறம் பாரி'' என்ருள் தங்கம்.

“ஆமாம், அது ஒண்ணுதான் பாக்கி எனக்கு இப்போ!'' என்ருன் சிந்தாமணி.

தங்கம் சிரித்தாள். “உனக்கு என்ன அண்ணு, அப்படி வந்துடுத்து? நல்ல வரும்படி வரதுங்கறே! நீ எதுலே குறைச்சல்? எல்லாரையும் சொல்லிவிட்டு நீ ஒரே அடியாய் வரதக்ஷிணை வரணும்னு பார்க்கறயா?''

''சிவ சிவ! வரதக்ஷிணை இல்லை. அநாவசியமாய்த் தம்படிகூடச் செலவழிக்க விடமாட்டேன். நீ பார்க்கத் தானே போறே!''

''இப்பவே பார்த்துடறேன். அண்ணு கலியாணத் தோடகூடவே நீயும் பண்ணிண்டுடேன்'' என்ருள் தங்கம்.

''அப்படிப் போடு! நீ உங்கண்ணுவுக்குத் தங்கை தான்—நான் அவ்வளவு சுலபமாய் ஏமாறுவேனு?''

''பின்னே, எப்போதான் பண்ணிக்கப்போறே?''

''நாராயணன் என்னைவிட இரண்டு வருஷம் பெரிய வன் இல்லையா? அவன் இப்போதானே பண்ணிக்கிருன்? ஆகையினுலே எனக்கு இன்னும் இரண்டு வருஷம் போக வேண்டாமா?''

''அது என்ன கணக்கு?''

''அவன் தலை கணக்கு!'' என்ருன் நாராயணன் குறுக்கிட்டு. ''சரி, நீ நாளைக்குப் போறது நிச்சயந் தாஞடா?'' என்று அவன் சிந்தாமணியைக் கேட்டான்.

''ஆமாம்! உன்னைப் பார்க்கிற சாக்கை வச்சிண்டு ஆஸ்பத்திரியை ஒருசுத்து சுத்திடறேன். அப்புறம் கிளம்ப வேண்டியதுதான்.''

''சரி, எழுந்திரு! ஒரு ரவுண்டு அடிச்சிட்டு வரலாம்!'' என்று நாராயணன் சிநேகிதனை அழைத்துக்கொண்டு போஞன்.

சிந்தாமணியின் யோசனைப் பிரகாரம், விமலாவும் அவளுடைய தாயார் தருமாம்பாளும் வந்து சேர்ந்தார்கள்; விசாலாக்ஷி வாய் திறவாமல், அடக்க ஒடுக்கத்தோடு அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தாள். ஆனுல், அவளுடைய விசால விழிகள் மட்டும் வந்தவர்களின் வெளித் தோற்றத்தைக் கவனிப்பதோடு நிற்காமல் அவர்களுடைய உள்ளங்களை ஆராய்ந்துகொண் டிருந்தன. தங்கத்தினுடைய அபிப்பிராயங்களும் அவளுடைய அபிப்பிராயங்களும் அநேகமாய் ஒத்துப்

போயின. விமலாவோடு கூடி, ஒரு குடும்பமாகக் குடித்தனம் செய்வதில் யாதொரு கஷ்டமும் இராதென்று அவளுக்குப் பட்டது. சில விஷயங்களில் விமலா ஒரு சிறு குழந்தைபோலவே இருந்தாள். அவளுடைய தாயார் தருமாம்பாளும் 'தான்' என்ற ஒரு 'ஹோதா'வில் அதிகாரம் முதலியவைகளைத் தவிர, ஒரு நல்ல மனுஷியாகவே காணப்பட்டாள். "வாரி இறைக்கும் கை" என்பது ஒவ்வொரு செயலிலும் நன்கு புலப்பட்டது. மொத்தத்தில், விசாலாக்ஷிக்கு எல்லாருமே நல்லவர்களாகக் காணப்பட்டார்கள்! அவளுடைய குணத்தைப்பற்றித் தருமாம்பாள் நேருக்கு நேராகச் சொல்ல ஆரம்பித்துவிட்டாள். "அம்மா விசாலாக்ஷி, முதல்லே நான் என்னவோன்னு கொஞ்சம் பயந்தேன். ஆனல் உன்னைப் பார்த்தப்புறம் எனக்கு ரொம்பத் திருப்தியாப் போச்சு. நீ இந்தக் காலத்துப் பொண்களாட்டம் இல்லே. நீயும் விமலாவும், மாமியார் மாட்டுப்பொண்ணுன்னு இல்லாதே, அக்கா தங்கைகளாட்டம் சுகமாய் இருக்கலாம்."

"நல்ல மாமியார், நல்ல மாட்டுப்பொண்ணு!" என்று விசாலாக்ஷி சிரித்தாள்.

"மாமியாரும் ஆச்சு, மாட்டுப் பொண்ணுமாச்சு! எல்லாருக்கும் சித்திதான். எங்களாட்டம், நீயும் சித்தின்னு கூப்பிடு, விமலா" என்ருள் தங்கம் குறுக்கிட்டு.

"ஊம்" என்று விமலா நாஸூக்காய்த் தலையை அசைத்தாள்.

"அதுதான் சரி! தங்கம் சொல்றது ரொம்ப 'ரைட்'!" என்று தருமாம்பாள் ஆமோதித்து, மேலே சொன்னுள்: "விமலா நெடுநெடுன்னு வளந்துட்டாளே ஒழிய, அவளுக்கு அப்படி வயசு ஒண்ணும் ஆகல்லே. ஆனல், வயசுக்குத் தகுந்த லோக ஞானங்கூடக் கிடையாது. என்ன பண்றது, அம்மா? ஒரே குழந்தை, செல்ல

மாய் வளர்ந்துட்டாள். அவள் அப்பா எதுக்கும் கவலைப் பட மாட்டார். முதல்லே, அவருக்குக் கவலைப்படற துக்குக்கூடப் பொழுது இருக்காது. ஆனல், என்னலே அப்படி முடியாதம்மா! ஒரு மணி நேரம் சேர்ந்தாப்போல அவளைப் பார்க்காமெ இருந்தால், எனக்கு வேதனை பிடுங்கித் திங்கும். எட்டு வயசு வரையிலும் அவளைத் தூக்கிண்டு திரிஞ்சேன்....பல்லைக்கூடத் தேச்சுவிட்டேன்.''

''போ, அம்மா! என்னை ஒரே அடியாய்ப் பயித்தியம் ஆக்கறே!'' என்று விமலா முகத்தைச் சுளித்துக் கொஞ்சினள்.

''இவாளெல்லாம் நம்பளவாள்தானே, அம்மா? உன் 'சித்தி'க்கு உன்னைப்பத்தி எல்லாம் தெரியவேண்டாமா? என்னவோ சொல்லவந்தேனே—இன்னிக்கும், விமலா எண்ணெய் தேய்ச்சுக்கணும்ஞல், அவளுக்கு ஒரு யக்கியம்தான்.''

''ஆமாம், அம்மாமி! தலையிலே கூந்தல் ரொம்ப இருந்தால் கஷ்டந்தான். நான் அவஸ்தைப் படறது எனக்குத் தெரியும்'' என்ருள் விசாலாக்ஷி.

''வீட்டுலே ஒருத்திக்கு இரண்டு பேராய் வேலைக்காரிகள் இருக்கா. ஆனல் அவாளெல்லாம் சரிப்படாது நானேதான் தேய்ச்சுவிடணும்'' என்ருள் தருமாம்பாள்.

''ஆமாம்! இவள் யாரையும் விடமாட்டாள், சித்தி. இது செய்யப்படாது, அது செய்யபடாதுன்னு, எனக்கு ஒண்ணும் தெரியாதபடி இவளேதான் செஞ்சாள்'' என்ருள் விமலா.

''பார்த்தயோடி, தங்கம்! இப்பவே அவள் சித்தியோடே சேந்துக்கிறதை!''

''அது நியாயந்தானே, அம்மாமி?'' என்ருள் தங்கம்.

''நீங்கள் ஏன் கவலைப்படறேள், அம்மாமி? நான் தேச்சுவிடறேன்!'' என்ருள் விசாலாக்ஷி.

"நீ செய்வேடி, அம்மா! நீ செய்வேடி! பகவான் கிருபையினுலே அவளுக்கு எல்லாம் சரியாய் அமைஞ்சிருக்கு!'' என்று தருமாம்பாள் சந்தோஷப்பட்டாள்.

''சரி, எல்லாருக்கும் நான் சித்தி ஆயிட்டேன். என் மாட்டுப்பெண்ணை நான் என்னன்னு அழைக்கிறது?'' என்ருள் விசாலாக்ஷி சிரித்துக்கொண்டு.

''பெண்ணையும் மாட்டுப் பெண்ணையும் பேரைச் சொல்லித்தான் அழைப்பாள். அதைக் கேட்பானேன், சித்தி?'' என்ருள் தங்கம்.

''கல்யாணமாகிப் பத்து வருஷம் பழகினவாள்கூட இப்படி இருக்கமாட்டாள்'' என்று தருமாம்பாள் ஆனந்தப்பட்டுக் கொண்டாள்.

''சரி, மாமியார் அதிகாரம் செய்யறேன் - விமலா, எண்ணெய் தேச்சுக்க வா!''—எல்லாரும் சிரித்தார்கள்.

விசாலாக்ஷியும் விமலாவும் பின்கட்டுக்குப் போஞர்கள்: ''முனியம்மாள்னு எங்களுக்கு ஒரு வேலைக்காரி இருக்காள். - அவளை வேலைக்காரின்னு சொல்லப்படாது - அவளையும் நம்ப குடும்பத்தைச் சேர்ந்தவளாட்டந்தான் வச்சுக்கணும். ரொம்ப நல்லவள். எங்கம்மாகூட அவ்வளவு சிரத்தையாய் எனக்குச் செய்ய மாட்டாள். அவளோடே ஒரு நாள் பழகினுல் போரும், உனக்கே தெரிஞ்சுடும். ஆனுல் இன்னிக்கு நான்தான் தேய்க்கப் போறேன். யாரோ சொந்தக்காராள் வந்திருக்கான்னு, நேத்துலேயிருந்து அவள் வரலை. இந்தப் பலகாய் மேலே உட்கார். தலையிலே எண்ணெய் வச்சுடறேன்'' என்ருள் விசாலாக்ஷி.

''வேண்டாம், சித்தி! நானே தேய்ச்சுக்கிறேனே! என்று விமலா கெஞ்சிக் கொஞ்சிஞள். கொஞ்சும் பழக்கம் அவளை அறியாமல் அவள் மனத்தில் ஊறிவிட்டது.

''இன்னெரு தடவை ஆகட்டும். இன்னிக்கி நான் தேய்க்கணும் - சித்தி சொன்னதைக் கேட்கவேண்

டாமா?'' என்று விசாலாக்ஷி வெளிப்படையாகச் சொன்ன போதிலும், உள்ளூற தன் வார்த்தைகளே அவளுக்குச் சிரிப்பை உண்டாக்கின.

விமலா வாட்டசாட்டமாய் வளர்ந்திருந்தாள். நாரா யணனுக்கு ஏற்ற ஜோடிதான். ஆனால், நாராயணனின் புத்தி சூக்ஷ்மத்துக்கு இவளுடைய அறிவு ஈடாகா தென்று விசாலாக்ஷிக்குப் புலப்பட்டது. அதுவும், அநியாயச் செல்லத்தால், அவளுக்குச் சாதாரணமாய்த் தெரிய வேண்டிய விஷயங்கள்கூடத் தெரியாமல் இருந்தன. நிறத்தில் தங்கம் சொன்னாற்போல 'வெள்ளைக்காரிச்சி' போல இருந்தாள். மூக்கு முழியிலும் ஒன்றும் குறை சொல்வதற்கில்லை. இருந்தும், அவளுடைய அழகு பூர்ணமாய்ச் சிறக்காமல் போனதற்குக் காரணத்தை விசாலாக்ஷி ஊகித்துக்கொண்டாள் - அது அவளுடைய பரந்த முகமே. சிறிது பரவல் சோபையை எவ்வளவு குறைத்துவிட்டது! தனது முகவெட்டால், தனக்கு ஏற் பட்ட வசீகரத்தை அவளால் எப்படி உணராமல் இருக்க முடியும்? ஆனால், தான் அழகென்ற கர்வம் அவளுக்கு இல்லை. தனக்குக் கர்வம் வேறு வேண்டுமா என்ற எண்ணமே அவளுக்கு அடிக்கடி வரும். ஆயினும், தன்னை அறியாமலே, பிறருடைய லக்ஷணங்களை அது எடை போடச் செய்தது போலும்!

ஸ்நானத்துக்குப் பிறகு, எந்தப் புடைவையை உடுத் துக்கொள்வதென்று விமலாவுக்குப் பெரிய யோசனை வந்துவிட்டது.

''நீலப் புடைவையைக் கட்டிக்கோயேன்!'' என்றாள் தாயார்.

''அதைத்தான், இப்படி மடிச்சு, அப்படி மடிச்சு, கசக்கிப் போட்டுட்டயே!'' என்றாள் விமலா.

''ஊதாப் புடைவைய உடுத்திக்கோயேன்.''

"ஆமாம், அது யாருக்கு வேணும்? உன்னை யார் வாங்கச் சொன்னுள்? ஒரே 'டார்க் கலர்'!" என்று விமலா சலித்துக் கொஞ்சியபொழுது, சிறிது தூரத்தி லிருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த பாகீரதி சிரித்து விடுவாள்போல் இருந்தது. விசாலாக்ஷி அவளை விழித்துப்பார்த்து, "வெந்நீர் அடுப்பு எரியறதா, பார்" என்று அங்கிருந்து அவளைத் துரத்தினுள்.

தருமாம்பாள், "அம்மாடீ!" என்று மெள்ளஎழுந்து, ஒரு பெரிய பெட்டியைக் கொண்டுவந்து தன் மகள் முன் வைத்து, "சரி, உனக்கு இஷ்டமானதை எடுத்துக்கோ, அம்மா" என்று கேட்டுக்கொண்டாள்.

தாயாரையும் பெண்ணையும் புடைவையைத் தேர்ந்து எடுக்க விட்டுவிட்டு, தங்கமும் விசாலாக்ஷியும் பின் கட்டுக்குப் போனுர்கள்.

"சித்தி, எடுப்பாரும் பிடிப்பாரும் இருந்தால், பிள்ளை களைச்சாப்போலத்தான் இருக்கும்" என்று தங்கம் ரகசிய மாய்ச் சொன்னுள்.

"வாயிலே சனி!" என்று விசாலாக்ஷி, தன் கையால் அவள் வாயைப் பொத்தினுள்.

ஆனுல் பாகீரதி மாத்திரம் பல்லைக் காட்டிக் கொண்டே இருந்தாள். அதன்பேரில் தங்கம், "சித்தி, நீ சொல்றது சரிதான். வரவர, பாகீரதி ரொம்பச் சோம் பேறி ஆயிட்டாள்" என்று உரக்கச் சொன்னுளே ஒழிய, அவளே முதலில் சிரித்துவிடுவாள்போல் இருந்தது.

## 14

## அடியும் அன்பும்

மறுநாள் நாராயணன், விமலா முதலானவரைத் தன் காரில் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டுபோய் ரெயில் வண்டியில் சௌகரியமாகப் பிரயாணம் செய்ய ஏற்பாடு

செய்தான். இன்னும் கல்யாணத்துக்கு இருபத்து மூன்று தினங்களே இருந்தன என்ற எண்ணம் வீட்டில் அதிகப் பரபரப்பை உண்டாக்கியது. தங்கம், விசாலாக்ஷி, அவர்களை விட்டுப் பிரிந்திருக்க இஷ்டமில்லாத பாகீரதி, இம்மூவரும் கடைகளுக்குப் போவதும் வருவதுமாகவே இருந்தார்கள்.

"என்ன பணம் இருந்தாலும் இவ்வளவு செல்லம் அடிச்சுக்கப்படாது" என்றாள் தங்கம்.

"ஒரே குழந்தையாய் இருந்தால் அப்படித்தான். நாலு பேரோடே பழகினால் சரியாய்ப் போயிடும். ஆனால் ராங்கி இல்லையே. எல்லாரோடும் 'கலகல'ன்னு கலந்து பழகணும்னு ஆசையிருக்கே!" என்றாள் விசாலாக்ஷி.

"அதெல்லாம் இருக்கு. கள்ளம் கபடம் இல்லை. அண்ணாவுக்கும் பிடிச்சிருக்காள்!" என்றாள் தங்கம்.

"அதுதானே முக்கியம்!" என்றாள் விசாலாக்ஷி புன் முறுவலுடன். "அவளுக்கும் அவர் மேலே பிராணன். கல்யாணம் ஆனதும் இங்கே வரவேண்டியதுதானே?"

"திடீர்னு வந்துவிடுவாளா, என்ன? ஒரு மாசம், இரண்டு மாசம் ஆகாதா? அதுவும் அவள் அம்மா லேசிலே அனுப்பிச்சுடுவாளா? என்னவோ அம்மா, நான் ஊருக்குப் போறதுக்குள்ளே வந்தால், அவள் குடித்தனம் பண்றதை நானும் பார்த்துட்டுப் போவேன்."

"இன்னும் இரண்டு மாசம் இருங்களேன்."

"அம்மம்மா! அவர் அங்கே ரொம்ப கஷ்டப்பட்டிண்டு இருக்கார். வேலை வேறே இப்போ ஜாஸ்தி; சம்பளம் உயரும் சமயம் இது. அதனாலேதானே அவர் வரல்லை. கலியாணத்துக்குக்கூட முக்கால்வாசி வரமாட்டார்;"

"அது நன்னாயிருக்குமா?"

"அதுக்கு என்ன பண்றது, சித்தி! ஆனால் அண்ணா வித்தியாசமாய் எண்ணிக்க மாட்டான். மத்தப் பேரைப் பத்தி எனக்கு என்ன கவலை?"

"உங்கள் சங்கதியே அலாதி. நான் இப்போ இருந்தே மெள்ள மெள்ள, மாடியைக் காலிசெஞ்சு, மாடிபூரா வையும் அவாளுக்குக் கொடுத்துடலாம்னு பார்க்கிறேன்."

"அப்புறம் உனக்கு இடம் எங்கே?"

"கீழே, இந்த இடமெல்லாம் எங்களுக்குப் போராதா? பாகியையும் எங்கப்பா அழைச்சிண்டு போயிடுவார்."

"சிரிக்கப் போருள்! பாகீரதியாலே யாருக்குக் கஷ்டம்? பட்டிக்காட்டுக்கு அனுப்பிச்சு அவளைப் பாழாக் காதே!" என்று தங்கம் எச்சரித்தாள்.

"அவள் சேலத்துலேயின்னு இருக்கப் போருள்? அப்பா சேலத்துலே வீடு பார்த்துட்டாராமே! நேத்து சாயங்காலம் கடுதாசு வந்தது. இந்த அலைச்சலிலே உங்களண்டை சொல்ல மறந்துட்டேன், அப்பாவே இன்னும் இரண்டு மூணு நாளுலே வந்தாலும் வருவார்."

"ஜவுளிக் கடை வைப்பது நிச்சயம் ஆயிடுத்தா?"

"ஆமாம்; அதுக்காக இங்கே நம்பிக்கையான பெரிய கம்பெனிகளிலேயிருந்து சாமான்களை அனுப்பச் சொல் லணுமாம். இல்லாத போனுல், ஏமாத்திவிட்டால் என்ன செய்யறது?"

"ஆமாம், ஆமாம். ஜாக்கிரதையாய் இருக்கணும். தெரிஞ்சவாளையே ஏய்க்கிற ஊர் ஆச்சே இது? ஆனுல் அப்பாவுக்கு வேண்டியவாள் எத்தனையோ பேர் இருப் பாள். அதெல்லாம் ஏற்பாடு செய்துடுவார். இதுவும் ஒரு காரியத்துக்கு நல்லதுதான், சித்தி! சிந்தாமணியும் சேலத்துலேதானே இருக்கான்? வேண்டாமின்னுல்கூட, உங்காத்து வைத்தியத்தை அவன் விடமாட்டான். பாகீரதியையும் சேலத்துக்கு அனுப்பிச்சுட்டேயானுல் ரொம்ப சௌகரியமாய்ப் போய்விடும்" என்று தங்கம் சிரித்தாள்.

விசாலாக்ஷி, மலர்ந்த முகத்துடன் வாய் திறவாமல் தங்கத்தை உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

"பகவானுடைய சங்கல்பம்னு சொல்றதெல்லாம், இந்த மாதிரி விஷயத்துலேதான். சேலத்துலே சிந்தாமணின்னு ஒரு டாக்டர் 'பிராக்டீஸ்' பண்ணப் போறுன், அதே ஊருலே உங்கப்பாவும் குடுத்தனம் போடப் போறூர்னு நீ நினேச்சயோ?"

"இல்லவே இல்லே" என்று விசாலாக்ஷி பலமாய்த் தலையை ஆட்டினுள்.

"எனக்கு என்னவோ, அம்மா, சிந்தாமணி பாகீரதியை நிச்சயமாய்க் கல்யாணம் பண்ணிப்பான்னு தோன்றது. அதோ! மணிகூட அடிக்கிறது. நான் போறதுக்குள்ளேயே முடிச்சுடறேன், பாரேன்!"

"உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு!" என்றுள் விசாலாக்ஷி கையைக் கூப்பிக்கொண்டு.

"அவ்வளவு புண்ணியத்தை என்னுலே சுமக்க முடியாது, அம்மா! - சரி, அந்த 'பங்களூர் ஸ்டோர்ஸ்' காரன் இன்னிக்கி பார்சலிலே புது தினுசு பட்டுப் புடவைகள் வரும்னு சொன்னுனே. மூணு மணிக்குப் போய்ப் பார்க்கலாமா?"

"ஊம். மணி ஒண்ணுதான் ஆச்சு! அதுவரையிலும் என்ன செய்யப் போறேள்? ஸரஸ்வதி நல்ல புஸ்தகங்கள் இரண்டு கொடுத்து அனுப்பிச்சிருக்காள். நீங்கள் ஒண்ணேப் படியுங்களேன்!"

"ஆமாம், எல்லாத்தையும் நீயே படி. சுசீலாவுக்கும் இதே பைத்தியம். எனக்குக் கண்ணேச் சுத்தறது, அம்மா! நான் சித்தே நாழி படுத்துக்கப் போறேன்" என்று தங்கம் எழுந்து சென்றுள்.

ஐந்தாறு தினங்களுக்குப் பிறகு அண்ணுசாமி ஐயர் தமது மூத்த மாப்பிள்ளேயை அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தார். நாராயணனும் தங்கமும் அவரை அன்புடன் வரவேற்றூர்கள். இதில், ஜானகிராம ஐயருக்குப் பரம சந்தோஷம். சுசீலாவின் தகப்பனுர் வீராசாமி நாயுடு

வுக்குப் பல 'மில்' முதலாளிகளே சிநேகிதர்களாயிருந்த தால் அண்ணுசாமி ஐயருக்கும், அவருடைய மூத்த மாப் பிள்ளைக்கும் எதிர்பார்த்ததற்குமேல் பன்மடங்கு செளகரி யங்கள் ஏற்பட்டன. விசாலாக்ஷியின் 'அத்திம்பேருக்கு' சந்தோஷத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை. "விசாலம், இவ்வளவு சகாயம் உண்டாகும்னு நாங்கள் நினைக்கவேயில்லை. நாயுடு வார்த்தைக்கு எவ்வளவு மரியாதை தெரியுமா? அடேயப்பா! இன்னும் ஒரு வருஷத்துக்குள்ளே நம்ப கடைதான் எல்லாத்துக்கும் மேலே ஓங்கி நிற்கும்" என்று அவர் உறுதியாகச் சொன்னார்.

அண்ணுசாமி ஐயர் ஊருக்குப் புறப்படும்பொழுது, தங்கம், அவர் குடும்ப சகிதமாய்க் கட்டாயம் கல்யாணத் துக்கு வரவேண்டுமென்று பல முறை வற்புறுத்திக் கேட்டுக்கொண்டாள்.

"எங்கள் 'சித்தி' அம்மாவைப் பார்க்கணும்னு எனக்கு ரொம்ப ஆசையாய் இருக்கு. நீங்கள் எல்லாரை யும் அழைச்சிண்டு தவறுமல் வரணும். ஆமாம், இல்லாத போனல், நான் சித்தியை லேசுலே விடமாட்டேன்."

"நிச்சயமாய் வறேன், அம்மா. இவ்வளவு பிரியமாய் யார் சொல்வாள்!" என்று அண்ணுசாமி ஐயர் எல்லா ரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு ஊருக்குச் சென்றார்.

கோயம்புத்தூரில் நாராயணனுக்கும் விமலாவுக்கும் கல்யாணம் நடைபெற்றமேன்மையை சொல்லிமுடியாது. சில விஷயங்களில், விமலாவின் தாயார் தருமாம்பாள் அடக்க முடியாத குதூகலத்தால் செய்த ஆடம்பரங்கள் நாராயணனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆயினும், அவைகள் அன்பினுல் ஏற்பட்ட அசட்டுத்தனங்கள் என்று சிந்தாமணி அவனைச் சமாதானப்படுத்தியதால், அவன் பொறுத்துக்கொண்டான். அவனுடைய மாமனர்

கோபாலையர் ஒன்றிலும் தலையிட்டுக்கொள்ளவில்லை. அவர் தன் தகப்பனருக்கு ஏற்ற சம்பந்தியாகவே இருந்தார். தருமாம்பாள் அதிகாரமே கொடிகட்டிப் பறந்தது. சில வேளைகளில் அது அளவுக்கு மிஞ்சிப் போனது. அப்பொழுது நாராயணனுக்கு உண்டான அருவருப்பைச் சிந்தாமணி கவனிக்காமல் போகவில்லை. அச்சமயங்களில் சிந்தாமணி தன் 'மன்னி'க்கு ரகசியமாகச் 'சாட்டை' கொடுக்கத்தான் செய்தான். தருமாம்பாளும் மாப்பிள்ளை நாராயணனுக்குப் பயந்து தன் அட்டகாசத்தைச் சிறிது அடக்கிக்கொண்டாள் என்றே சொல்லவேண்டும்.

விசாலாக்ஷிக்கோ, எல்லாம் ஒரே ஆச்சரியமாய் இருந்தது. சுசீலாவின் கல்யாணத்தைப் பிரமாதமாக நினைத்தது தவருகிவிட்டது. தங்கத்துக்குக்கூட, தங்களுடைய கை சற்றுத் தாழ்ந்தது என்ற உணர்ச்சி வந்துவிட்டது. விசாலாக்ஷியின் தாயார் சீதாலக்ஷ்மி அம்மாள், பாவம், பெட்டிப் பாம்பாய்ப் பதுங்கிக் கிடந்தாள். ஆனல் பெண் வீட்டுக்காரர்கள் செய்த உபசாரங்களுக்கு ஒன்றும் குறைவில்லை. முக்கியமாக, சிந்தாமணி அவர்களை வெகு மரியாதையுடன் கவனித்து வந்தான்.

"வந்தவாள் போனவாளுக்கெல்லாம் வேஷ்டி, புடைவையா?—இப்படிப் பணத்தை வாரி இறைச்சவா நான் பார்த்ததே இல்லையடி, அம்மா!" என்று சீதாலக்ஷ்மி அம்மாள் தங்கத்தோடு மெதுவாய்ச் சொன்னாள்.

"வக்கீல் என்றால் அப்படித்தான், அம்மாமி. கணக்கு வழக்கு இல்லாதே வரும்படி வரும். ஆனல் எல்லாருக்கும் வரும்னு நினைக்காதங்கோ!" என்றாள் தங்கம்.

"விசாலம் அசடாட்டம் ஆசைப்படறாளே. இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவாளோடே சம்பந்தம் பண்ண எங்களுக்கு என்ன யோக்கியதை இருக்கு?" என்றாள் சீதாலக்ஷ்மி அம்மாள்.

"உங்களுக்கு என்ன யோக்கியதை இல்லை?" என்றாள் தங்கம் சிரித்துக்கொண்டு.

“இவாளுக்கு இருந்தால், சிந்தாமணிக்கு என்ன ஆச்சு?” என்றாள் விசாலாக்ஷி.

“இவள் சொல்றதைப் பாரடி, தங்கம். என்ன இருந்தாலும், சிந்தாமணி அவர் தம்பியாட்டம்தானே? அவன் மட்டும் சம்பாதிக்க மாட்டானா?”

“யார் இல்லேன்னு சொன்னது? வேணாது சம்பாதிப்பார். ஆனால், அவர் சங்கதி வேறே அம்மா, உனக்குத் தெரியாது” என்றாள் விசாலாக்ஷி.

“ஆமாம், அம்மாமி! சித்தி சொல்றது ரொம்ப ரைட்” என்றாள் தங்கம் புன்சிரிப்போடு.

இப்பொழுது, இவர்களை நோக்கி, தருமாம்பாள் கைகளையும் கால்களையும் ஆட்டிக்கொண்டு வந்தாள். “அம்மா, தங்கம்! நீதான் உங்கண்ணாவுக்குக் கொஞ்சம் சொல்லணும்; நலங்கு என்கிற பேச்சே கூடாதுன்னு சொல்றாராம் மாப்பிள்ளை. எல்லாம் ‘நான்ஸென்ஸ்’ இங்கறாராம். கொஞ்சம் சொல்லேன்” என்று அந்த அம்மாள் கெஞ்சினாள்.

“நான் சொன்னால் கேட்பானா, அம்மாமி? சிந்தாமணி எங்கே?”

“இதோ வந்துடுவான். நான்தான் ஒரு வேலையாய் அனுப்பிச்சேன். நீங்கள் இரண்டு பேருமாச் சொல்லிக் கொஞ்சம் மனசுவைக்கச் சொல்லுங்கோ. சீமைக்குப் போய்வந்த மாப்பிள்ளை—பெரிய ஆஸ்பத்திரி டாக்டர் கூட அவரண்டை அவ்வளவு மரியாதையாய் இருக்கார். நான் எப்படிப் பலமாய்ச் சொல்றது? எனக்குப் பயமாய் இருக்கு, அம்மா! இனிமேல் பெறப்போறேனா! வளர்க்கப் போறேனா! ஆசை ஒண்ணு இருக்கோ இல்லையோ, அம்மாமி?” என்று அவள் சீதாலக்ஷ்மியம்மாளைப் பார்த்துச் சொன்னாள். சீதாலக்ஷ்மியம்மாள் அவள் சொன்னதை மனப்பூர்வமாய் ஆமோதித்தாள்.

தங்கம் எழுந்து அரைமனத்துடன் நாராயணனிடம் சென்ருள். நல்லவேளையாய் நாராயணன் கோபமில்லாமல் பக்கத்திலிருந்தவர்களுடன் வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருந்தான். ஆனுல் அவள் எவ்வளவு சொல்லியும் அது பலிக்கவில்லை. இதற்குள் சிந்தாமணியும் வந்தான். அவனுடைய வற்புறுத்தலால் நாராயணனுக்குக் கோபம் வந்தது.

"என்னடா, 'ஸென்ஸ்' இல்லாதே உளர்றே?"

"அட, 'ஸென்ஸோ, நான்ஸென்ஸோ', இந்தச் சின்ன விஷயத்தாலே எல்லாருக்கும் சந்தோஷம் ஏற்படறபோது நீ ஏன் அதை மறுக்கணும்? அதனுலே உனக்கு என்ன கஷ்டம்? இந்தக்குறையை எங்கள் மன்னி மறக்கவே மாட்டாள். திருப்பித் திருப்பி அதைச் சொல்லி வருத்தப்படுவாள். அதுலே உனக்கு என்னலாபம்? நாம் செய்யறதெல்லாம் 'ஸென்ஸோ'டேதான் செய்யறமாக்கும்?"

"அது என்னவோ, 'ரைட்டு'டா. இல்லாதபோனுல் நீ சொன்னபடியெல்லாம் கேட்பேனு?—நீ போ, எல்லாருக்கும் நல்லவனுயிடறே!"

சிந்தாமணி சிரித்தான்.

"நீ சொன்னபடியெல்லாம் நான் கேட்காதபோனுல், அப்போ ஏன்னு கேள்!"

"நிஜந்தானு, சிந்தாமணி அண்ணு?" என்று தங்கம் கேட்டாள்.

"சந்தேகமே வேண்டாம். இவாள் எல்லாரையும் சாக்ஷி வைச்சுக்கோ."

பிறகு, தங்கம் நாராயணன் காதில் .ரகசியமாக ஏதோ சொன்னுள்.

"ரைட், ரைட்!" என்ருன் நாராயணன் குதூகலத்தோடு. "அடேய், உனக்குப் பரீக்ஷை இன்னிக்கி சாயங்காலமே இருக்கு!"

"பேஷாக வை, நான் பயந்தால்தானே?—சரி, இப்போ மாப்பிள்ளை கொஞ்சம் தயவுபண்ணி மணையிலே உட்காரணும்" என்று சிந்தாமணி அவனை அழைத்துக் கொண்டு போனான்.

மாப்பிள்ளை நலங்குக்கு ஒப்புக்கொண்டுவிட்டார் என்ற சமாசாரம் தெரிந்ததும், பெண்பிள்ளைகள் ஏராள மாகக் கூடிவிட்டார்கள். ஹால் மிகவும் விஸ்தாரமா யிருந்தும், இடத்துக்கு நெருக்கடி ஏற்பட்டுவிட்டது. ஹாலின் நடுவில் போடப்பட்டிருந்த பெரிய ஊஞ்சற் பலகை, ஹாலின் கோடியிலிருந்த நாகபாசங்களில் தொங்கவிடப்பட்டது. அது மணையில் இருந்தவர்களுக்கு நேராக இருந்ததால், சிறு பெண்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு அதில் உட்கார்ந்துகொண் டார்கள்.

அவர்களில் பாகீரதியும் ஒருத்தி. வரவர, சிறுமி களின் உபத்திரவம் அதிகமாய்விட்டது: இரண்டொருவர் பலகையின்மீது ஏறி நின்றுகொள்ள முயன்றார்கள். பாகீரதி ஒரு ஓரத்தில் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு, பட்டும் படாமலும் உட்கார்ந்திருந்தாள். ஏழெட்டு வயதுள்ள இரண்டு சிறு பெண்கள், தங்களுக்குச் சரியாகக் காணப்படாததால், சேர்ந்தாற்போல் குதித்துப் பலகைமீது ஏறினார்கள். அதே சமயத்தில் பாகீரதி பிடித் திருந்த சங்கிலி, உச்சியில் ஒடிந்து, 'படார்!' என்று அவள் தலைமீது விழுந்தது. "அம்மா!" என்று அவள் கதறிக் கொண்டு கீழே உட்கார்ந்தாள். தலையிலிருந்து ரத்தம் பீரிட்டுக்கொண்டு வந்தது. ஹாலின் ஒரு மூலையிலிருந்த சீதாலக்ஷ்மியம்மாளும் விசாலாக்ஷியும் வருவதற்குள், சிந்தாமணி எங்கிருந்தோ ஓடி வந்துவிட்டான். ரத்தப் பெருக்கை நிறுத்தி, தன் வேஷ்டியைக் கிழித்து, அகப் பட்ட பஞ்சால் ஏதோ ஒரு கட்டுக் கட்டினான். "காயம் ஆழமாடா? நான் வேணும்னால் வரட்டுமா?" என்று

கேட்ட நாராயணனுக்கு, "அதெல்லாம் ஒண்ணும் இல்லே யடா, பக்கத்துத் தெருவுலே என் சிநேகிதர் டாக்டர் விசுவநாதன் இருக்கார். போய் டிரஸ் பண்ணிண்டு வந்துடறேன்" என்று அவன் சமாதானம் சொன்னான். பிறகு, தவித்துக்கொண்டிருந்த சீதாலக்ஷ்மியம்மாளையும் கூடவரச் சொல்லி, அவன் பாகீரதியைச் சுமந்தவாறு நடத்திக்கொண்டுபோய், ஒரு காரில் அமர்த்தி, டாக்டர் விசுவநாதன் இருப்பிடத்துக்கு விரைந்து சென்றான்.

அப்பொழுதே டாக்டர் வெளியே போயிருந்ததால், கம்பௌண்டரிடமிருந்து வேண்டிய சாமான்களை வாங்கி அவன் தானே சிகிச்சை செய்தான். காயத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்ட சீதாலக்ஷ்மியம்மாளுக்கு, சும்மா இருக்கும்படி சமிக்ஞை காட்டினான்.

"இன்னிக்கி ஒரு நாள், அசையாதே, யாரோடையும் பேசாதே, படுத்துண்டு இரு. நாளைக்கு எல்லாம் சரியாய்ப் போயிடறது, பார். நான் சொல்றது தெரியறதா?"

"ஊம்" என்றாள் பாகீரதி ஈனசுவரத்தில். அடிபட்ட போது, "அம்மா" என்று பயந்து கூவினதைத் தவிர, இது வரையிலும் அவள் யாதொரு சத்தமும் செய்யவில்லை.

"உனக்கு வலிக்கில்லையே, பாகி?" என்று அவன் கேட்டபோது, அவள் "இல்லை" என்று மெல்லப் பதில் அளித்தாள். அப்பொழுது அவனுக்கு உண்டான ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. அவளுடைய அற்புதமான பொறுமை அவனுக்குப் புத்தி மாறாட்டத்தை உண்டாக்கி விட்டது. பொங்கி எழுந்த உணர்ச்சியை அடக்கிக் கொண்டு, "பாகீ, பாகீ!" என்று அன்பு பரவசத்தோடு அவளுடைய கன்னங்களை லேசாய்த் தட்டினான். பிறகு, அவர்கள் இறங்கியிருந்த வீட்டுக்கு வந்து, பாகீரதி சௌகரியமாகப் படுத்திருக்க ஏற்பாடு செய்து, பேச்சுக் கொடுத்து யாரும் அவளைத் தொந்தரவு செய்யாமல்

பார்த்துக் கொள்ளும்படி சீதாலக்ஷ்மியம்மாளிடம் சொல்லிவிட்டு, அவன் மட்டும் கல்யாண கிருகத்துக்கு வந்தான்.

பாகீரதியின் நிலைமையைத் தெரிந்துகொள்ளக் கவலையுடன் காத்திருந்தவர்களுக்கு, தனக்குத் திருப்திகரமாகத் தானே சிகிச்சை செய்துவிட்டதாகவும், யாதொரு பயமும் இல்லையென்றும் உறுதிமொழி சொன்னான். "ஆனால்-என்ன நாராயணா!-காயம் மாத்திரம் நல்ல ஆழம். இருந்தாலும், இரண்டு மூணு நாளுலே சரியாய்ப் போயிடறது. எனக்கு என்ன ஆச்சரியமின்னால், அதை சுத்தப்படுத்தி, தலைமயிரைக் கத்தரிச்சு, பாண்டேஜை இறுகக் கட்டி, இவ்வளவு செஞ்சும், அவள் வாயிலே யிருந்து 'ஊ'ன்னு ஒரு சத்தம் வரணுமே! அடேயப்பா! என்ன பொறுமை!" என்று சிந்தாமணி புகழ்ந்தான்.

"அதுக்குத்தான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்றேன்!" என்றான் நாராயணன்.

"பண்ணிக்கத்தானே போறேன்!" என்றான் சிந்தாமணி. எல்லாரும் கை கொட்டிச் சிரித்தார்கள்.

விசாலாக்ஷியும் தங்கமும் ஆத்திரத்தோடு பாகீரதியைப் பார்க்கப் போனார்கள். விசாரத்துடன் உட்கார்ந்திருந்த சீதாலக்ஷ்மியம்மாளைத் தங்கம் தைரியப்படுத்தினாள். "நீங்கள் கவலையே படவேண்டாம், அம்மாமி. நாளைக்கு ஒருநாள்; நாளையன்னிக்கி, அவள் எழுந்திருந்து நடமாடலாம்னு சிந்தாமணி அண்ணா சொல்லிவிட்டான். நானாகச் சொல்லிக்கப்படாது; எங்கண்ணா, சிந்தாமணியண்ணா இரண்டு பேரும் எவ்வளவு கெட்டிக்காராள் தெரியுமா? நீங்கள் இப்போ சந்தோஷப் படணுமே! சிந்தாமணி அண்ணா என்ன சொன்னான் தெரியுமா?—பாகியைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறானாம்!"

"அதென்னது!" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள், ஆனந்தத்தால் பூரித்து. விசாலாக்ஷி நடந்ததைச் சொன்னாள்.

சீதாலக்ஷ்மியம்மாள் கைகளைக் கூப்பி, "எல்லாம் பகவானுடைய கிருபை, அம்மா! இதுக்காகத்தான் தலையிலே அடிபட்டதோ என்னவோ!" என்றாள் பக்தியோடு.

"இது நாங்கள் எதிர்பார்த்ததுதான், அம்மாமி. ஆனால், அடிபட்டது நல்லதாய்ப் போச்சு. பாகியைப் போல, சிந்தாமணி அண்ணாவும் ரொம்ப அழுத்தக்காரன். இல்லாதபோனால் வாயை விட்டுச் சொல்லியிருக்க மாட்டான்."

"என்னவோ, அம்மா. எனக்கு இன்னும் சந்தேகந்தான்" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள்.

"உனக்கு எடுத்ததுக்கெல்லாம் பயம்" என்று விசாலாக்ஷி சினந்துகொண்டாள்.

"சித்திக்கும் கோபம் வருது, பார்த்தேளா?" என்று தங்கம் விசாலாக்ஷியின் தோள்பட்டைகளைப் பிடித்து அசைத்தாள். "நீங்கள் சந்தேகமே படாதங்கோ; கல்யாணம் பண்ணிக்கிறயான்னு கேட்டு, இந்த அழுத்தக்காரியும் ஆகட்டும்னு சொல்லியிருக்காளாக்கும்? இந்த சமாசாரம் நேத்துதான் எங்களுக்குத் தெரிஞ்சுது."

"நிஜம்மாவா?"

"அவளையே கேளுங்களேன்!" என்றாள் தங்கம். பாகீரதி வெட்கத்துடன் தன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டாள்.

"அடி பாகீ!" என்று அன்புப் பெருக்கால், சீதாலக்ஷ்மியம்மாள் அவள் கன்னங்களை வழித்து, திருஷ்டி முறித்தாள்.

# 15

## இளம் தம்பதிகள்

இருபத்துநான்கு மணி நேரம் எப்படியோ பல்லைக் கடித்துக்கொண்டு, பாகீரதி அலையாமல் இருந்தாள். பிறகு தனக்கு வலியே இல்லையென்றும், கல்யாண கிருகத்துக்குப் போக ஆசையாக இருக்கிறதென்றும் மன்ருடி, கடைசியில் கல்யாண சம்பவங்களில் கலந்துகொண்டாள். நாராயணன் எவ்வளவு தடுத்தும், தருமாம்பாள் பண்டைக் காலத்து வழக்கம்போலவே, எல்லாக் காரியங்களையும் செய்து முடித்தாள். கும்பல் படிப்படியாகக் குறைந்தது. பாகீரதி தன் பெற்ருேர்களோடு சேலம் போக வேண்டியதாக நிச்சயிக்கப்பட்டது. ஆனுல் தங்கத்துக்கு மட்டும் ஒரு குறை. சிந்தாமணி ஆறு மாதங்களுக்கு அப்புறந்தான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதாகச் சொல்லிவிட்டான். எவ்வளவு சொல்லியும் அவன் கேட்கவில்லை. பாகீரதியின் கல்யாணத்தைப் பார்க்கவேண்டுமென்று அவள் ஆசைப்பட்டது நிறைவேற முடியாமல் போய்விட்டது.

தங்கம் எதிர்பார்த்ததற்கு முன்னதாகவே, விமலா கணவனேடு குடித்தனம் செய்ய வந்தாள். இதில் அவளுக்கு மிகச் சந்தோஷம். விசாலாக்ஷி, தான் தீர்மானித்துக்கொண்டபடி, மாடி முழுவதையும் தன் 'மகனுக்கும் மருமகளுக்கும்' பிரத்தியேகமாக உபயோகித்துக்கொள்ளும்படி விட்டுவிட்டாள்.

குடும்ப வாழ்க்கை ஆனந்தமாய் நடந்தது. தன்னை அறியாமலே, தானே வீட்டுக்குப் 'பெரியவள்' என்ற பெருமை விசாலாக்ஷிக்கு உண்டாயிற்று. இதற்குக் காரணம், அவள் கணவன் உள்பட, எல்லோரும் அவள் மீது வைத்த கௌரவம்தான். எந்த விஷயமானுலும் "சித்தி'க்குத் தெரியாமல் நடக்காது. விமலாவும்

எவ்வளவோ மாறிவிட்டாள். ஒவ்வொரு காரியத்துக்கும் கோயம்புத்தூரில் பிறர் கையை எதிர்பார்த்தவள், இப்பொழுது ஆடி ஓடி வேலை செய்ய ஆரம்பித்துவிட்டாள். அதிலும் தன் கணவனுடைய பணிவிடைகளையெல்லாம் தானே செய்ய ஆசைப்பட்டாள். அவன் நினைக்கும்போதே அவன் விரும்பிய சௌகரியங்கள் கவனிக்கப்படும்! அவன் சுகத்தில் அவள் அவ்வளவு கண்ணும் கருத்துமாக இருந்தாள்.

சில வேளைகளில், அபார மோகத்தால் அவள் அசட்டுத்தனமாய் நடந்துகொண்டது, விசாலாக்ஷிக்கும் தங்கத்துக்கும் சிரிப்பை உண்டாக்கியது.

"அவன் மேலே காற்றுப் படக்கூடாதாம். போகட்டும், அவனுக்கு மட்டும் யார் இருக்காள்?" என்று தங்கம் பரத்தியானமாய்ச் சொன்னது, விசாலாக்ஷியையும் சிந்திக்கச் செய்தது.

"இதைவிட உங்களுக்கு என்ன சந்தோஷம் வேணும்? ஆனால் திடீர்னு அவள் சோம்பேறித்தனம் பறந்து போயிடும்னு நான் நினைக்கவேயில்லை" என்றாள் விசாலாக்ஷி.

"அதுக்கு அண்ணாதான் காரணம்" என்றாள் தங்கம் புன்முறுவலுடன்.

"பித்தம் தலைக்கு நன்றாய் ஏறிப்போச்சு. அய்யோ, கேட்டுண்டு வந்து சேரப்போறாள்" என்றாள் விசாலாக்ஷி சிரித்தவாறு, வாசற்புறம் பார்த்துக்கொண்டு.

"அதுக்குள்ளே எப்படி வருவாள்? இன்னும் சினிமா கலையறத்துக்கே அரை மணி இருக்கே! வந்தால்தான் என்ன? அவாள் சுகமாய் இருக்கணும்னுதானே நாம் ஆசைப்படறோம்?"

"அது அவாள் மனசுக்கு மட்டும் தெரியாதா?" என்றாள் விசாலாக்ஷி.

"இருந்தாலும் சித்தி, அவள் அம்மா அடிக்கடி இங்கே வரது எனக்குப் பிடிக்கல்லே. விமலா சொல்றது சரிதான். அவளாலேதான் விமலாவினுடைய குணம் விகஸிக்காதே போச்சு!"

"நீங்கள் சொல்றது நன்னு இருக்கே! ஐந்தாறு குழந்தைகள் பெத்தவாள்கூடத் தங்கள் குழந்தையின்னுல் பிராணனேவிடருள். பாவம், அந்த அம்மாளுக்கு இருக்கிறது ஒண்ணு. அவளுக்கு ஆசை இருக்காதா?"

"அது என்னவோ, அம்மா! ஒவ்வொரு தடவை, அவள் அதிகாரம் பண்றதைப் பார்த்தால், எனக்குப் பிடிக்கவேயில்லே."

"எனக்கு மட்டும் பிடிக்கிறதா? நீங்கள் ஏன் பயப்படறேள்? அவள் அதிகாரம் ஒண்ணும் உங்கள் அண்ணுகிட்டே பலிக்காது."

"அது எனக்குத் தெரியும். இருந்தாலும், கொஞ்சம் தூரத்துலே வைக்கிறதே நல்லது, சித்தி! உனக்குத் தெரியாது—இந்த ஊர்ப் பிரயாணம் ஒண்ணு எனக்கு. லீவ் எடுத்துக்கிண்டு வாங்கோன்னு எழுதிக்கிண்டேயிருக்கேன்; முடியாது, முடியாதுங்கிருர். அவர் அங்கே கஷ்டப்படறபோது, எனக்கு இங்கே என்ன சுகம் வேண்டியிருக்கு? நான் என்ன பாவம் பண்ணினேனே எனக்கு அந்த ஊர் பிடிக்கவே யில்லே!"

"இங்கே மாத்திண்டு வர வழிஇல்லாமலா இருக்கும்? சம்பளத்தை வேணும்னுல் குறைச்சுக்கறேன்னு சொல்றது."

"அதுலே பாதிச் சம்பளம் கொடுத்தால்கூடப் போதும், சித்தி; அவரும் ஆசைப்பட்டவரில்லே. பார்த்தால் நீயே சொல்லுவே! அண்ணு ஏதோ வழி இருக்கு, ஏற்பாடு பண்ணலாம்னு சொல்ருன். இன்னும் கொஞ்ச நாள் போனுல்தானே அவனுக்கும் நாலு பேரைத் தெரியும்?"

''சித்தே பொறுத்துக்கோங்கோ, கஷ்டந்தான். அவ்வளவு தூரம் போயிட்டு வரதுன்னுல் வேலெலே இருக்கா? இந்தக் கோயம்புத்தூருக்குப் போயிட்டு வந்ததுக்கே, என்னுலே இரண்டு நாள் எழுந்திருக்க முடியில்லேயே?'' என்று விசாலாக்ஷி கண்கலங்கினுள்.

தங்கம் அவளைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள். பேச இஷ்டமில்லை. மனம் வேதனைப்பட்டது. விசாலாக்ஷிக்கு இருமல் வரவே, ''சித்தி, நீ இருந்தாலும் ரொம்ப அழிச்சாட்டியம் பண்ணறே. மருந்தைச் சாப்பிடாமல் ஏன் உடம்பைக் கெடுத்துக்கொள்ளணும்?'' என்று தங்கம் சினந்துகொண்டாள்.

''சாப்பிட்டுண்டுதான் இருக்கேன். ஒவ்வொரு நாளைக்கு மறந்துபோயிடறேன். ஒரு நாள் தலைவலின்னு நான் படுத்துண்டது இல்லை. இதுலே யிருந்துதான் எனக்குப் பீடை பிடிச்சிண்டுது!'' என்று அவள் தன் உடலைக் காட்டினுள்.

''ஆமாம், அதனுலே ஒண்ணுமில்லை! லோகத்துலே குழந்தைகள் பிறக்காமலா இருக்கு? முதல் தடவை சில பேருக்குக் கொஞ்சம் கஷ்டமாய்த்தான் இருக்கும். உடம்பை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளணும்!''

''இப்போ குழந்தை இல்லைன்னு யார் அழுதாள்?''

''சரி, போரும், ரொம்ப சாமர்த்தியமாய்த்தான் பேசறே!—சுசீலா அம்மா பெரம்பூருலேருந்து வந்துட்டாளா என்ன? பாவம், அவள் ஒருத்தி! ஏங்கிச் சாகருள். அவளைப் போய்ப் பார்த்துப் பேசிட்டு வரலாம், வா'' என்று தங்கம், விசாலாக்ஷியை அழைத்துக்கொண்டு எதிர் வீட்டுக்குள் சென்ருள்.

பக்கத்துக் காலி நிலத்தில், நாராயணன் முதலில் போட்ட பிளானுக்குச் சற்றுப் பெரிதாகவே கட்டிடம் அமைத்தாகிவிட்டது. வாசற்புறம், அவனுடைய பெயரும் பட்டங்களும், எந்த வேளையில் அவனைக் காணலாம்

என்ற விவரங்களும், அனைவருக்கும் புலப்படும்படி தெரி விக்கப்பட்டன. வீட்டின் ஹாலில், நிலைக்கு வேண்டிய அளவு இடிக்கப்பட்டு, கதவும் வைத்தாகிவிட்டது. இதனால் வெளிப்புறம் போகாமலே, வீட்டுக்கும் ஆஸ்பத் திரிக்கும் நடமாட அவனுக்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. ஹாலின் வாசற்பக்கத்து அறையிலிருந்து, ஜன்னலின் திரையை ஒதுக்கினால் அவன் நோயாளிகளைப் பரீக்ஷை செய்வதைக்கூடப் பார்க்கலாம். ஆனால், அந்தப் பக்கமே யாரும் போகமாட்டார்கள். விமலா மாத்திரம் எப்பொழுதாவது தன் கணவனை அழைக்க வேண்டு மானால், சமயம் பார்த்து, அங்கிருந்து கூப்பிடுவாள்.

இந்தச் சமயத்தில், தன் ஆஸ்பத்திரிக்குச் சிந்தாமணி வைத்திய சாமான்களை மும்முரமாகச் சேகரித்துக்கொண் டிருந்ததால், அடிக்கடி சென்னைக்கு வர நேர்ந்தது. அப் போதெல்லாம். நாராயணனுடன் ஜெனரல் ஆஸ்பத் திரியை ஒரு சுற்றுச் சுற்றாமல் அவன் போக மாட்டான். சஸ்திர சிகிச்சை விஷயங்களில் ஒரு நிமிஷங்கூடப் பின் தங்க அவனுக்கு இஷ்டமில்லை. இரவிலும், இருவரும் எதைக் குறித்தாவது சர்ச்சை செய்துகொண்டே இருப் பார்கள். விமலா இன்பமாய் வாழ்ந்து வந்தாள் என்ப தைச் சிந்தாமணிக்கு யாரும் சொல்லத் தேவையில்லை. அவள் பிறந்தகத்தை அடியோடு மறந்துவிட்டது போல் இருந்தது. ஒரு நாள் நாராயணன் ஜெனரல் ஆஸ்பத்தி ரிக்குப் போயிருந்த சமயத்தில், அவளைச் சோதிப்பது போல, "என்னம்மா, மாமியார் நாத்தனார் எல்லாம் உன்னைச் சரியாத்தானே பார்த்துக்கறாள்?" என்று சிந்தாமணி வேடிக்கையாகக் கேட்டான்.

"'மன்னி' என்னைச் சும்மா கேலி பண்ணறாள், சித் தப்பா! சித்தி மட்டும் லேசுங்கறயா? பூனையாட்டம் மன்னியோடே சேர்ந்திண்டு சிரிக்கிறாள்!" என்று விமலா குற்றம் சாட்டினாளே ஒழிய, முகமெல்லாம் சந்தோஷத் தால் மலர்ந்து இருந்தது.

"அய்யய்யோ! உங்களாலே எனக்கும் கெட்ட பேரு!" என்றாள் விசாலாக்ஷி புன்முறுவலுடன்.

"கெட்ட பேராவது; நல்ல பேராவது, சித்தி, சிந்தாமணி அண்ணாவே நியாயத்தைச் சொல்லட்டுமே.—ஏன் அண்ணா, சேலத்துக்கு வந்தப்புறம் நீ தினம் பாகீரதியைப் பார்த்துட்டு வரயோ இல்லையோ!"

விசாலாக்ஷிக்கும் விமலாவுக்கும் சிரிப்பு வந்து விட்டது.

"சித்தப்பா, மன்னி சங்கதியை நீயே பார்த்துக்கோ! இப்போ உன்மேலேயே திரும்பிட்டாள்!"

"திரும்பட்டுமே. அதென்ன, தங்கம், தினம் போய்ப் பார்க்கணுமா என்ன? அது எனக்குத் தெரியாதே!"

"உனக்கு ஒண்ணும் தெரியாது; நீதான் பச்சைக் குழந்தையாச்சே! இருந்தாலும், இதுலே என்ன தப்பு சொல்லு. எதிர் வீட்டிலே விமலா என்று ஒருபெண் வந்திருக்கிறப்போலே இருக்கு. நேத்துக் காலம்பர ஒன்பது மணிக்கு, அவள் அப்பாவோ யாரோ 'விமலா, விமலா'ன்னு வாசலுலேயிருந்து பலக்கக் கூப்பிட்டாள். நம்ப விமலா புழக்கடைப் பக்கம் இருந்தாள். அண்ணாதான் தன்னைக் கூப்பிடறானுக்கும் என்று விழுந்து அடிச்சிண்டு ஓடி வந்தாள். நாங்கள் சிரிச்சோம். இது ஒரு தப்பா?"

"இருங்கோ, இருங்கோ! எனக்கும் ஒரு 'சான்ஸ்' வரும்" என்று விமலா ஆள்காட்டி விரலை அசைத்தாள்.

"இது, நாத்தனார், மாமியார், நாட்டுப்பெண் சங்கதி; இதுலே நான் தலையிட்டுக்கொள்ள மாட்டேன். சரி, சித்தியின் அப்பா, அம்மா, பாகீரதி எல்லாரும் உங்களை ரொம்ப ரொம்பக் கேட்டதாகச் சொல்லச் சொன்னாள், தங்கம்."

"அய்யோ பாவம்! நீ அந்தப் பக்கமே போறதில்லையே! உங்கிட்டே எப்படிச் சொன்னாள்?" என்று தங்கம் கேட்டாள்.

"நான் போறதே இல்லேன்னு உங்கிட்டே சொன்னேனு?"

"சரிதான், நீயாகச் சொல்லிக்கலாம். வேறு யாரும் சொல்லப்படாது போலிருக்கு."

"உங்கள் வம்பு இருக்கட்டும்; வீடு சௌகரியமாய் இருக்கான்னு கேளுங்கோ" என்று விசாலாக்ஷி சொன்னுள்.

"வீடு நன்னு காத்தோட்டமாய் இருக்கு; சமையல் கட்டு தவிர எல்லாம் மச்சுதான். சௌகரியத்துக்கு ஒண்ணும் குறைவில்லே" என்ருன் சிந்தாமணி.

"சரி, பாகீரதி கல்யாணத்துக்குக் கடுதாசு போட மறந்துடாதே! நான் எப்படியாவது அவரையும் அழைச்சிண்டு வந்துடறேன். ஆச்சு, இன்னும் பத்து நாளேக்கெல்லாம் நான் ஊருக்குப் போகணும்."

"அதென்ன தங்கம், அவ்வளவு சீக்கிரம்?"

"அப்புறம் நல்ல துணே கிடைக்காது. எங்களுக்கு ரொம்ப வேண்டியவாள், குடும்பத்தோடே லீவுலேயிருந்து திரும்பிப் போருள். அவாளோடே புறப்பட்டு வரச் சொல்லி எழுதியிருக்கார். பிறந்தாம்னு எத்தனே நாள் உட்கார்ந்திருக்கிறது? சரி, நாங்களெல்லாம் பக்கத்துத் தெருவுக்குப் போயிட்டு வரோம். பூச்சூட்டலுக்கு அழைச்சிருக்காள்" என்ருள் தங்கம்.

"சந்தோஷமாய்ப் போயிட்டு வாங்கோ" என்று சிந்தாமணி, புஸ்தகத்தைப் பார்வையிட்டான்.

டில்லிப் பிரயாணிகள் வந்ததும், தங்கம் தன் பிரயாணத்துக்கும் தயார் செய்துகொண்டாள். அவளுக்கும் விசாலாக்ஷிக்கும் பரஸ்பரம் உண்டான துக்கத்தைச் சொல்ல வேண்டியதில்லே. தங்கத்தின் இரண்டாவது குழந்தை முத்து, விசாலாக்ஷியை விட்டுப் பிரியவே மாட்டான். அவனேத் தன்னிடம் விட்டுப் போகும்படி விசாலாக்ஷி கேட்டுக்கொண்டாள். அவனும், "சித்தி கிட்டயே

இருக்கேன்; நான் வரமாட்டேன், போ!" என்று வம்பு செய்தான். தனக்கு இஷ்டமாய் இருந்தபோதிலும், தன் கணவர் கோபித்துக்கொள்வார் என்ற பயத்தால், தங்கம் மறுக்கவேண்டி யிருந்தது. தங்கத்தின் பிரிவு விமலாவுக்கும் கஷ்டத்தைத்தான் உண்டாக்கியது. அவள் முகம் வாடினுள்.

"வரும்போது உன்னை விழுங்கிடணும்னு வந்தேன்" என்று மேலே பேச வார்த்தை வராமல், தங்கம் விசாலாக்ஷியைப் பார்த்துத் தவித்தாள். இவ்விதச் சமயங்களில், விசாலாக்ஷிக்குப் பேச்சு அடியோடு நின்றுவிடும். அவளுடைய நாவின் வேலையைக் கண்களே செய்யும். எப்படியோ, தங்கம் அனைவரிடமும் விடை பெற்றுக் கொண்டு சென்றுள்.

விமலா ஆனந்த ஸாகரத்தில் மூழ்கிக் கிடந்ததால், பிறருடைய கஷ்ட சுகங்களைப் போதுமான அளவு அவளால் உணர முடியாமல் போய்விட்டது. இதற்கு அவள்மீது குறை சொல்வதற்கில்லை. ஆயினும், தங்கத்தின் பிரஸ்தாபத்தையே எடுக்காமல், அவளை அவ்வளவு சீக்கிரத்தில் விமலா மறந்ததில் விசாலாக்ஷிக்குச் சற்று வருத்தந்தான். சதா தன்னையும் தன் கணவனையும் பற்றிய பிரதாபங்களையே விமலா பேசிவந்ததில், அவளுக்குச் சிறிது அருவருப்பு ஏற்பட்டதென்றுகூடச் சொல்ல வேண்டும். சுசீலாவோடும் தங்கத்தோடும் மனசோடு மனசு ஒத்துப் பழகியதுபோல் இவளோடு இயலாதென்று விசாலாக்ஷிக்குப் பட்டது. எவ்வளவு யத்தனித்தாலும், இருவருக்கும் நடுவே தாண்ட முடியாத ஒரு வேலி இருப்பதுபோல அவள் ஊகித்தாள். எப்படியோ பரீக்ஷைகளில் தேறிவிட்டாளே யொழிய, விமலாவுக்குப் படிப்பில் ஆசையில்லை. எப்பொழுதும் "மொச்சு, மொச்சு" என்று பேச்சித்தான். அந்தப் பேச்சிலும் சுவை இருக்காது. அடிக்கடி கணவனுடன் சினிமா, டிராமாக்களுக்குப் போக

ஆசைப்படுவாள். இந்தச் சமயங்களில் விசாலாக்ஷியும் அழைக்கப்படுவாள்; ஆனால் தன் தேகஸ்திதியை உத்தேசித்து-அல்லது சாக்கிட்டு என்றும் சொல்லலாம் - அவள் மறுத்துவிடுவாள். தனிமையாக இருக்க அவகாசம் கிடைத்தபொழுது, விசாலாக்ஷி காலத்தை வீணாக்கவில்லை; பல தலைப்புகளில் வியாசங்களை எழுதலானாள். ஹாலின் வாசற்புறம் இருந்த அறை இப்பொழுது விசாலாக்ஷியின் அநுபவத்துக்கு வந்துவிட்டது. அதில் ஒரு மூலையில் விசாலாக்ஷி சில சமயங்களில் ஏகாந்தமாக உட்கார்ந்துகொண்டு, படிப்பதிலோ எழுதுவதிலோ, ஈடுபட்டிருப்பாள். இங்கும விமலாவால் இம்சைதான் ஏற்படும்; 'குடு, குடு' என்று அவள் வருவாள்; தன் புருஷன் நோயாளிகளைப் பரீக்ஷிப்பதை அவன் அறைக்கு நேராக இருந்த ஜன்னலின் திரையை மெள்ள ஒதுக்கிப் பார்ப்பாள். இதைத் திருட்டுத்தனம் என்று சொல்வதற்கில்லை. அர்த்தமில்லாத ஒரு மோகம்தான். இந்த உபத்திரவத்திலிருந்து தப்பித்துக்கொள்ளும் பொருட்டு, விசாலாக்ஷி ஹாலின் மற்றொரு புறம் இருந்த அறையில் தன் அலுவல்களைக் கவனிக்க ஆரம்பித்தாள். ஆனால் இங்கும் விமலா விட்டபாடில்லை. வரவரத்தான் விமலாவின் வேதனைக்குக் காரணம் அவளுக்குப் புரிந்தது.

ஒரு நாள் எழுதிக்கொண்டிருந்தவளை விமலா வந்து 'தர தர' என்று கையைப் பிடித்து அவசர அவசரமாய் வாசற்புறம் இழுத்துக்கொண்டு போய், 'டாக்டரை' வைத்தியத்துக்காகப்பார்த்துத் திரும்பிய ஒரு யுவதியைக் காண்பித்து, "இது யாருன்னு உங்களுக்குத் தெரியுமோ?'' என்று படபடப்புடன் விசாலாக்ஷியைக் கேட்டாள்.

"அது யாரோ, நான் என்னத்தைக் கண்டேன்?"

"இதோ பாருங்கோ, சித்தி! வைத்தியத்துக்கு வந்தவள் மருந்தை வாங்கிண்டுன்னா போகணும்? அவள் மினுக்கும் தளுக்கும் யாருக்கு வேண்டியிருக்கு? இவள்

மாதிரியே இன்னும் மூணு பீடைகள் இருக்கு. அதுகள் பல்லைக் காட்டறதும், உடம்பைக் குலுக்கிக்கிறதும்—சனியன்கள்! இவளுக்கு வைத்தியம் ஏதுக்கு? கல்லுக் குண்டாட்டம்னு இருக்காள்?''

விசாலாக்ஷி சிரித்தாள்! ''புஸ்தகங்களிலே, காதல் பைத்தியம்னு சொல்லுவாளே, அதுதான் போலிருக்கு: பேசாதே கொள்ளாதே, வியாதியை எப்படித் தெரிஞ்சுக் கிறது, விமலா? குண்டாட்டம் இருக்கிறவாளுக்குத்தான் வியாதி பிடுங்கித் திங்கும். ஒவ்வொத்தர் ஒரு தினுசு, சில பேர் எல்லாரோடும் சகஜமாய்ப் பழகுவார்கள். சில பேர் வெட்கப்பட்டுண்டு இருப்பார்கள். இதுக்கெல்லாம் நீ மனஸைக் கஷ்டப்படுத்திக்கலாமா? கொஞ்ச நாள் போனால் உனக்கே தெரியும்!'' என்று புன்முறுவலுடன் அறுபது வயதுக் கிழவிபோல் விசாலாக்ஷி புத்திமதி கூறினாள்,

## 16

## தோழியின் வருகை

விசாலாக்ஷியின் புத்திமதியால் விமலாவுக்குச் சமாதானம் ஏற்படவில்லை. அவள் வீணாய் அவஸ்தைப் பட்டுக்கொண்டேயிருந்தாள். ஆனால் விசாலாக்ஷி இந்த விஷயத்தைப் பொருட்படுத்தாததால், இதைப்பற்றி அவளிடம் பேசுவதை விமலா நிறுத்திவிட்டாள். விசாலாக்ஷியும், ஏதோ அசட்டுத்தனம், நாளடைவில் அதுவே சரியாகப் போய்விடும் என்று, அவள் போன போக்கிலேயே அவளை விட்டுவிட்டாள். அதுவும் தவிர, அவளுடைய தேக நிலைமையும் இப்பொழுது அதிக வேதனையைக் கொடுக்க ஆரம்பித்தது. அவளுடைய

தாயார் அவளைச் சேலத்துக்கு அழைத்துக்கொண்டுபோய், பிரசவத்துக்குத் தன்னிடமே வைத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆசையோடு, அடிக்கடி கடிதங்கள் எழுதினாள். ஆனால் இதற்கு நாராயணன் சம்மதிக்கவில்லை. மற்ற விஷயங்களில் எல்லாம் வீட்டில் 'சித்தி' க்குப் பெரியதனம் கொடுக்கப்பட்டிருந்த போதிலும், அவளுடைய ஆரோக்கியத்தைப் பற்றிய வரையில், நாராயணன் இட்டதே சட்டமாக இருந்தது.

''சிந்தாமணி இருக்கான், வாஸ்தவந்தான். ஆனால் அவன் என்ன செய்வான்? 'லேடி' டாக்டர்களையே நீ பக்கத்துலே விடமாட்டேங்கறே. அங்கே 'லேடி' டாக்டர்களும் ரொம்பக் குறைவு. இந்த ஊர் மாதிரியா? இங்கே எத்தனையோ பேர் இருக்கா. ஒரு அவசரத்துக்கு எவ்வளவோ செளகரியங்கள் கிடைக்கும். நீ போறது எனக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. உன் உடம்புலே ரத்தமே இல்லையே! உன் உடம்பைப்பத்தி உனக்கு என்ன தெரியும்? உங்கம்மாவை நாளைக்கே வரச் சொல்லு, எங்களுக்கெல்லாம் சந்தோஷந்தான். இவ்வளவும் ஏதுக்காகச் சொல்றேம்னு தெரிஞ்சுக்காதபோனால் என்ன பிரயோஜனம்?'' என்று அவன் சற்றுக் காரத்தோடு சொன்னான். விசாலாக்ஷி கண்ணெடுத்து அவனைப் பார்த்தாள். அவளுடைய 'கொட்டாங்கச்சி' போன்ற விழிகள் நன்றி உணராததற்கு வருந்துவதுபோல் இருந்தன.

''சரி, அம்மாவை வரச்சொல்லிக் கடுதாசு எழுதிடறேன்'' என்று அவள் தாழ்ந்தகுரலில் சொல்லிவிட்டு அங்கிருந்து சென்றாள்.

சென்னையிலேயே தங்கிவிடுவதென்ற தீர்மானத்துக்கு ஒரு வாரத்துக்கப்புறம், சுசீலா அவளுக்கு எழுதிய கடிதமும் உதவியாய் இருந்தது. இன்னும் ஒரு மாதத்துக்குள்ளாகவே தானும் தன் கணவரும் திரும்பி வருவதாயும், சென்னையில் அவர் இஷ்டப்பட்டபடியே

பேராசிரியர் பதவி கிடைத்துவிட்டதென்றும், இனிமேல் சென்னையை விட்டு அவர்கள் எங்கும் போகவேண்டிய அவசியம் இல்லையென்றும், அவள் வெகு உற்சாகத்தோடு எழுதியிருந்தாள். விசாலாக்ஷியின் ஆனந்தத்தைச் சொல்ல வேண்டியதில்லை. ‘அக்கா’ வரப்போகிறாள் என்ற எண்ணமே அவளுக்கு என்றைக்கும் இல்லாத தைரியத்தை அளித்தது. ஏகாந்தமாய் இருந்த வேளைகளில், அவள் எவ்வளவோ பிளான்கள் போட்டுவைத்திருந்தாள்; அவைகளையெல்லாம் இனி நிறைவேற்றலாமென்று பூரித்தாள். தன்னைப்பற்றிய விஷயங்களையெல்லாம் விவரமாய் எழுதி, அவள் வருகையை வெகு ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாகவும், அவள் வரும் வரையிலும் தனக்கு ஒரு வேலையும் ஓடாதென்றும் அவள் தெரிவித்தாள். அவள் மனது இருந்த நிலைமையில், தன் தாயாரும் பாகீரதியும் வந்ததுகூட அவளுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஒவ்வொரு நாளையும் கணக்கிட்டுக்கொண்டு, அவள் சுசீலாவின் வரவை ஆசையோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

குறிப்பிட்ட தினத்தில், அவர்கள் ரெயில் ஏறுவதற்கு முன், சுசீலாவின் கணவர் சேஷாசல நாயுடு தம் மாமனாருக்குத் தந்தி கொடுத்தார். அதன்மேல் வீராசாமி நாயுடு, அந்த வண்டி வருவதற்கு அரைமணி முன்னதாகவே தம் மனைவியுடன் ஸ்டேஷனுக்குச் சென்று, மகளையும் மருமகனையும் பரமானந்தத்தோடு வரவேற்று, வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தார். வண்டியை விட்டு இறங்கினதும், சுசீலா ஓடி, தன் வரவுக்காக ஏங்கி நின்ற விசாலத்தின் கரங்களைச் சந்தோஷ பரவசத்தோடு பிடித்துக்கொண்டாள். “ஏன் விசாலம், இவ்வளவு இளைச்சுப்போயிட்டே! இவ்வளவு பலஹீனமாய் இருக்கேன்னு எனக்குத் தெரியவே தெரியாதே! இதைப்பத்தி நீ எழுதவே இல்லையே! ஏதாவது ஜுரம் அடிச்சுதா?—

இப்படி வெளுத்துப் போவானேன்?'' என்று அவளுடைய அன்பு மொழிகள் பலபலவென்று உதிர்ந்தன.

“அதெல்லாம் ஒண்ணும் இல்லே, அக்கா. ரொம்ப நாள் கழிச்சுப் பார்த்தால் அப்படித்தான் இருக்கும்.''

“சரிதான், பேசத் தெரிஞ்சிண்டு இருக்கே.—நீங்களெல்லாம் எப்போ வந்தேள்?'' என்று அவள் சீதாலக்ஷ்மியம்மாளேயும் பாகீரதியையும் விசாரித்தாள். விசாலாக்ஷி விமலாவை அறிமுகப்படுத்தவே, அவளுடன் சிறிது பேசிவிட்டு, ஸ்நான பானங்களே முடித்துக்கொண்டு, சீக்கிரம் வருவதாகச் சொல்லிவிட்டுச் சுசீலா போனுள்.

சாப்பாடு முடிந்ததும், சிரமத்தையும் பார்க்காமல் சுசீலா வந்துவிட்டாள். வங்காளிகளேப் பற்றியும் அவர்களுடைய நாட்டைப் பற்றியும் சுசீலா பிரமாதமாய்ப் பிரசங்கம் செய்தாள். எல்லாரும் நிச்சப்தமாய் வெகு சுவாரஸ்யத்தோடு கேட்டுக்கொண் டிருந்தார்கள். பொழுது போனதே தெரியவில்லே.

“மொத்தத்துலே, அந்த ஊர் எனக்குப் பிடிச்சிருக்கு, அம்மா. ஆனுல், அந்த ஊருலே மீன் திங்காதவாளே கிடையாது. அவருக்கு சிநேகிதர் ஒருவர் எங்களே அவர் கிராமத்துக்கு அழைச்சிண்டுபோய், நல்ல விருந்து பண்ணி வச்சார். ஒரு ‘அயிட்டம்’ மீன்! “இதென்னடீது!'' என்று சீதாலக்ஷ்மியம்மாள் வியந்து, தன் மோவாய்க் கட்டையைப் பிடித்துக்கொண்டாள்.

“அந்த ஊரிலே, நூத்துக்கு ஒருத்தர் சாப்பிடாத இருந்தால், அதுவே ஜாஸ்தியாம்! எங்காத்துக்காரர் சொல்ருர்'' என்ருள் சுசீலா.

“நல்ல ஊர், அம்மா அது'' என்ருள் சீதாலக்ஷ்மியம்மாள்.

“ஊர் தங்கமான ஊர்தான், அம்மாமி. ஒரே பச்சைப் பசேர்னு இருக்கும். ரொம்ப செழிப்பான இடம். கிராமங்களிலே சாதாரணமாக இருக்கிறவாளுக்குக்கூட,

மூணு குளங்கள் இருக்குமாம். ஒண்ணு ஸ்நானம் முதலானதுக்கு; இன்னொண்ணு குடிக்கிற ஜலத்துக்கு; மூணாவது மீன் வளர்க்கிறதுக்கு!"

"பேஷ்! நல்ல ஊரடி, அம்மா" என்று சீதாலக்ஷ்மியம்மாள் சிரித்தாள். இப்பொழுது நாராயணன் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பிவந்தான்.

"என்ன, அம்மா, சுசீலா! சௌக்கியமா? ரொம்ப நாளாச்சு பார்த்து" என்று அவன் அன்போடு அவளை விசாரித்தான்.

"ஆமாம் அண்ணா, தங்கத்தைப் பார்க்க முடியாதே போச்சேன்னு, எனக்கு வருத்தமாய் இருக்கு. நாங்கள் ரொம்ப தூரத்துலே போய் அகப்பட்டுண்டோம். உன் கல்யாணத்துக்குக்கூட வர முடியவில்லை" என்று அவள் மன்னிப்புக் கேட்டுக்கொள்வது போலச் சொன்னாள்.

"அதனாலே என்ன? நாங்கள் உன் கல்யாணத்துக்கு வந்தோமா? வர முடியாத அசௌகரியங்கள் இருந்தால் நாம் என்ன செய்யலாம்? விமலா, தங்கம் எப்படியோ அப்படிதான் சுசீலாவும். அவளும் நம்மாத்துப் பொண்ணாட்டம்தான்" என்று நாராயணன் தன் மனைவிக்குச் சொன்னான். விமலாவும், அதை அங்கீகரிப்பது போல் தலையை அசைத்தாள்.

பிறகு, சுசீலா எழுந்து போவதைப் பார்த்து, "நீங்கள் பேசிண்டு இருங்களேன், அம்மா. நான் சாப்பிட்டதும் மாடிக்குப் போயிடுவேன்!" என்றான் நாராயணன்.

"நான் பத்தரை மணிக்கு வந்தேன், அண்ணா! மணி ஒண்ணாகப் போறதே. எங்கள் பேச்சு அவ்வளவு சீக்கிரம் முடிஞ்சுடுமா? கொஞ்சம் 'ரெஸ்டு' எடுத்துக் கறேம்" என்று அவள் போனாள். விமலா தன் கணவனின் சௌகரியங்களைக் கவனிக்கச் சென்றாள்.

விசாலாக்ஷி சுசீலாவை தெரு வாசற்படி வரையில் தொடர்ந்து, "உங்கிட்டே சொல்லறத்துக்கு எவ்வளவோ

சங்கதி இருக்கு, அக்கா. நம்ப ரெண்டுபேரும் தனியாய் இருக்கிறபோதுதான் அதெல்லாம் சொல்லணும்!'' என்ருள்.

''எங்கே ஓடிப்போறது விசாலம்! நீ முதல்லே உன் உடம்பைப் பார்த்துக்கணும். இப்போ நீ மனஸுலே ஒரு கவலையும் வச்சுக்கப்படாது.—டாக்டர் என்ன சொல்ருள்? பிரஸவத்துக்கு இன்னும் ஒரு மாசம் ஆகுமா?''

''பத்து பதினைந்து நாளுக்கு மேலே போகாதுன்னு சொல்ருள்.''

''ஊஹூம், சரி, நீ போய்ப் படுத்துக்கோ. நாலு மணிக்கு மேலே அவர் வெளியிலே போயிடுவார். நாம் இஷ்டம் போலப் பேசிக்கலாம்'' என்று சுசீலா தன் வீட்டுக்குள் நுழைந்தாள்.

சாயங்காலம் விசாலாக்ஷி, விமலா வரமாட்டாள் என்று தெரிந்தபோதிலும், அவளையும் சுசிலா வீட்டுக்கு அழைத்து வைத்தாள். பாகீரதியோ, வேண்டாமென்ருலும், தனக்கு முந்தியே போய் அங்கே உட்கார்ந்து கொண்டாள்.

''இதோ பார், அக்கா. பெரியவாள் பேசறதெல்லாம் கேழ்க்கப்படாதுன்ஞல், இந்த பாகீ வம்பு பண்ணறது'' என்று விசாலாக்ஷி சுசீலாவினிடம் புகார் செய்தாள்.

''நான் வெறுமனே புஸ்தகங்களைப் பார்த்துண்டு இருந்தால் உங்களுக்கு என்ன வந்தது? நான் இங்கே வந்து எத்தனை நாளாச்சு? ஏதாவது புதுப் புஸ்தகங்கள் இருக்கான்னு பார்க்கிறேன். போ, அக்கா, நான் போக மாட்டேன்'' என்று பாகீரதி சண்டித்தனம் செய்தாள்.

இருவரும் மௌனமாய் பாகீரதியை உற்றுப் பார்த்தார்கள். அவளுடைய உருவத்திலும் தோற்றத்திலும் ஏற்பட்டுக்கொண் டிருந்த மாறுதலைக்கண்டு சுசீலாவின் முகம் விகஸித்தது.

"உனக்கு நல்ல புஸ்தகம் ஒண்ணு வச்சிருக்கேன். அதை எடுத்துண்டு போய், அக்கா ரூமிலே உட்கார்ந்து படி" என்று சுசீலா எழுந்திருந்து தன் பெட்டியிலிருந்து ஒரு புஸ்தகத்தை எடுத்து அவளுக்குக் கொடுத்தாள். அதைப் பெற்றுக்கொண்டு அரை மனத்துடன் பாகீரதி வெளியே சென்றாள்.

பிறகு விசாலாக்ஷி, சுசீலா ஊரில் இல்லாத காலத்தில் நடைபெற்ற விஷயங்களையெல்லாம் அவளுக்குத் தெரிவித்தாள். தோழிகள் இருவரும் வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தனர்.

"கொஞ்சம் கர்வந்தான். தனக்குச் சமானம் யாரும் இல்லேங்கிற எண்ணம் போலிருக்கு" என்று சுசீலா விமலாவைப்பற்றிச் சொன்னாள்.

"அப்படிச் சொல்றதுக்கு இல்லே. என்னைக் கேட்டால் நான் அசடுன்னுதான் சொல்வேன்" என்றாள் விசாலாக்ஷி.

"அசடோ கிசடோ, வைத்தியத்திற்கு வர பொம்மனாட்டிகளை தூஷிச்சால் அது என்ன போக்கிரித்தனம்?"

"நமக்கென்ன வந்தது, அக்கா. போகப் போக அவளுக்கே புத்தி வரும்."

"நன்னா வந்தது போ! எனக்கே உடம்புக்கு வந்துதுன்னு வச்சுக்கோ. நான் அண்ணா வேண்டியவனாச்சேன்னு வைத்தியம் பண்ணிக்கொண்டால், என்னையுந்தான் தூஷிப்பாள். நாக்கிலே நரம்பில்லாமல் தூஷிக்கிறதுன்னு வச்சுட்டால், அப்புறம் அதுக்கு எல்லே ஏது? நாலுபேர் காதுலே பட்டால், இது எப்படி இருக்கும் தெரியுமா?"

"நீ ஒருத்தி, ஏதாவது ஒண்ணைப் பிடிச்சுண்டால், அப்புறம் அதை விடவே மாட்டே. உங்கிட்டே நான் சொன்னதே தப்பாய்ப் போச்சு" என்று விசாலாக்ஷி கடிந்துகொண்டாள்.

"அடி அசடே! நான் நிம்மதியாய்த்தான் சொல்றேன்'' என்று சுசீலா குரலைத் தாழ்த்திப் பேசினாள். "நாராயணன் எவ்வளவு கெட்டிக்காரனாய் இருந்தாலும், இவள் இதுமாதிரி இருந்தால், அவன் எப்படி முன்னுக்கு வருவான்? இன்னொண்ணு பண்ணச் சொல்லு—புருஷாளுக்கு மாத்திரந்தான் வைத்தியம், பொம்மனாட்டிகளுக்குக் கிடையாதுன்னு போர்டை மாத்தச் சொல்லு.''

"சரி, இந்தப் பேச்சை விட்டுத் தொலையேன்!''

"சரி, ஆனால் அந்தப் பெண்ணை எனக்கு நீ காட்டணும். அது யாருன்னு நான் தெரிஞ்சுக்கணும்.''

"ஆகட்டும், ஆகட்டும்; முக்கியமான சமாசாரத்தைச் சொல்ல விடமாட்டேங்கறயே!''

"அதென்னடி அம்மா, அவ்வளவு முக்கியமானது?''

"உனக்கு சிந்தாமணியைத் தெரியுமோ?—டாக்டர் சிந்தாமணி.''

"சிந்தாமணியைத் தெரியாமல் இருக்குமா? நாராயணனோடே படிச்சவன்தானே? ஏன், விமலாவுக்கு அவன் ஏதோ சொந்தம். அவன்தானே இந்தக் கல்யாணத்துக்கே காரணம்?—''

"அதெல்லாம் எனக்குத் தெரியும் அக்கா, அவர் எப்படிப்பட்டவர்னு கேட்டால்—''

"அவனுக்கு 'ஸர்டிபிகேட்' கொடுக்க எனக்கு என்ன யோக்கியதை இருக்கு, விசாலம்? அவன் ரொம்பப் பெரிய மனுஷன், புத்திசாலி; நாராயணனாவது செய்யறதை எல்லாம் செஞ்சிட்டு, ஒரு வார்த்தையிலே தூக்கிப் போட்டுடுவான். அவன் ரொம்ப நிதானம். எதுக்காக இந்த விசாரணை?''

"அவருக்கு யோக்கியதை இருக்கான்னு பார்க்கிறதுக்குத்தான்.''

"எதுக்காக?''

"பாகியைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு!"

சுசீலா மூக்கின்மீது விரலை வைத்தாள்: "விசாலம்! நீ பழைய விசாலம் இல்லை. என்ன தைரியம்! ஒரு வருஷத்துக்குள்ளே இப்படி ஆயிட்டயே!" என்ருள் சுசீலா, மேலே என்ன சொல்வதென்று தெரியாமல்:

"பின்னே, அவர் பாகியைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு பிராணனை வாங்கிஞல், இதையெல்லாம் கேட்கத்தானே வேண்டியிருக்கு!" என்று ஆனந்தத்துடன் பாகீரதியின் கல்யாணம் நிச்சயமானதைக் குறித்துக் கதையாகச் சொன்ஞள்.

"பேஷ்! பேஷ்! நான் வந்தவுடனே இதைத்தான் நீ சொல்லியிருக்கணும்! பாகி நல்ல அதிர்ஷ்டக்காரி! அவள் எப்படி இருக்கப்போகிருள், பார்!"

"ஆஞல், நல்லவாளுக்கும் ஏதாவது துர்க்குணம் இருக்கும்தான் போலிருக்கு. அவர் கல்யாணத்துக்கு ஒரு ஆடம்பரமும் கூடாதாம். ஆடம்பரம் பண்ற பந்துக்களுக்குக் கல்யாணத்துக்கு வர முடியாதபடி கல்யாணத் தன்னிக்கிச் சேரும்படித்தான் கடுதாசி போடுவாரும்!"

"இதெல்லாம் ஒரு தப்பா? நீ தேவலையே, அவன் இஷ்டம். வீண் செலவு வேண்டான்னு சொல்ருன். எங்காத்துக்காரரும் அதே மாதிரிதான். அது எவ்வளவு பெருந்தன்மை!—ஆயிரத்தைக் கொண்டா, பதிஞயிரத்தைக் கொண்டான்னு கேழ்க்கல்லையே!"

"அது சரி, அக்கா. ஆஞல், ஆறு மாசத்துக்கப்புறந்தான் முகூர்த்தம் வைக்கணுமிங்கருர்: எங்கப்பாவோ ஒரு கர்நாடகம். அதுக்குள்ளே பாகீரதி பெரியவள் ஆயிட்டால் என்ன செய்யறதுன்னு பயப்படருர்—"

"ஆயிட்டால், குடி முழுகிப்போயிடுமா?"

"நாலும் தெரிஞ்சு, நன்ஞப் படிச்சவாளுக்கே புத்தி மாறமாட்டேங்கறதே: பாவம்! அவரைப் போய்ச் சொல்றயே. இப்போ, என் பிரசவம் ஆனதும், அவரைக்

கல்யாணத்துக்குச் சம்மதிக்கும்படி செய்யணும். அதுக்கு என்ன பண்ணனும், சொல்லு!''

''மாமாகிட்டே சொல்லேன். நானும் வேணும்னுல் வறேன். அவர் மேலே அவனுக்கு ரொம்ப கௌரவம் உண்டு.''

''நிஜந்தான். இருந்தாலும் எங்கள் 'டாக்டர்' பலமாய்ச் சொன்னுல், அவர் அதைத் தட்டமாட்டார். அது எனக்கு நன்னுத்தெரியும்.''

''விமலாவைச் சிபார்சு பண்ணச் சொல்லேன்'' என்று சுசீலா சிரித்தாள்.

''அதுவும் செய்யறேன்—நீயும் டாக்டரைக் கொஞ்சம் தூண்டணும். நீ தைரியமாய்க் கேட்பே.''

''சரிதான், அப்புறம் விமலா என்மேல் சண்டைக்கு வரப்போருள்!''

''ஊம், அவளை ஒரு கணக்கிலே வைக்காதே. என்ன ரகசியமா? அவளை வச்சிண்டே கேட்டால் போச்சு! ஏனென்ருல், இன்னும் நாலேஞ்சு நாளிலே அவர் வராரும்.''

''என்ன பிரமாதம்! எல்லாம் முடிச்சுடலாம். மாப்பிள்ளை என்னமோ நம்பளவன் ஆயிட்டான்'' என்ருள் சுசீலா புன்முறுவலுடன்.

இப்பொழுது தாயார் கூப்பிடவே, விசாலாக்ஷி தன் வீட்டுக்குச் சென்ருள்.

## 17

## லோக மராமத்து

சிந்தாமணி சென்னைக்கு வருவதற்கு இரண்டு தினங்கள் முன்னதாகவே, விசாலாக்ஷி பாகீரதியின் கல்யாணத்தைக் குறித்துத் தன் கணவனுடன் பிரஸ்தாபித்தாள்.

அவளுக்குச் சகாயமாய்ப் பேச, சுசீலாவும் முன்னேற்பாடு செய்துகொண்டபடி பக்கத்தில் இருந்தாள்.

"உங்கள் வார்த்தையைத் தட்டமாட்டார், மாமா" என்றாள் சுசீலா.

"அம்மா, சுசீலா, ஒண்ணு சொல்றேன் கேள். இந்தக் காலத்துப் பிள்ளைகளில் யாரையும் நம்பறத்துக்கு இல்லை. 'சரி'ன்னு ஒத்துக்கொண்டாலும் ஒத்துப்பான். இது ஒரு மடிசஞ்சின்னு நினைச்சுக்கிண்டாலும் நினைச்சுப்பான்" என்றார். சுசீலா சிரித்தாள். "ஆமாம், அம்மா! ஆசாரமாய் இருக்கிறவாளைக் கண்டால், இத்தனூண்டு பசங்கள்கூட அப்படித்தான் கேலி பண்றதுகள். நான் சொல்றதைவிட நாராயணன் சொன்னால், அதுக்கு ரொம்பபலன் இருக்கும்."

"அண்ணுவுக்கும் நீங்கள் சொல்லுங்களேன்" என்றாள் சுசீலா.

"எனக்கு ஒரு ஆக்ஷேபணையும் இல்லை. ஆனால் என்னை எல்லாரும் ஒரு அசடுன்னு வச்சுட்டாளே!" என்று ஜானகிராம ஐயர் பரிதாபப்படும்படி சொன்னார்.

"டாக்டருக்கு நீ சொன்னால் போரும், அக்கா. ஒத்தாசைக்கு விமலாவுந்தான் இருக்காளே?" என்றாள் விசாலாக்ஷி.

"அதுதான் சரி, விசாலம்! நாராயணன் ஓங்கி அடிச்சால், சிந்தாமணி பதில் சொல்லமாட்டான். அது எனக்குத் தெரியும்" என்று ஜானகிராம ஐயர் பெருமையுடன் சொல்லிக்கொண்டார்.

சிந்தாமணி வந்ததும், ஆளுக்கு ஒரு பக்கம் அவனை உடனே கல்யாணம் செய்துகொள்ளும்படி தூண்டியதில் அவனுக்குச் சந்தேகம் பிறந்தது. அவனும் நாராயணனும் சமுத்திரக் கரைக்குச் சென்றபொழுது, "என்ன 'கான்ஸ்பிரஸி'டா இது?" என்று அவன் தன் சிநேகிதனைக் கேட்டான்.

"உன் மூளையே மூளை! 'கான்ஸ்பிரஸி' எங்கேடா வந்தது?— அந்த 'அப்பம் வடை' அவஸ்தைப் படற தாம்—"

"'அப்பம் வடை' யாருடா?"

"உன் மாமனார்தான்" என்றான் நாராயணன் சிரித்துக் கொண்டு.

"டேய்! உன் பல்லை உடைச்சுடுவேன்" என்றான் சிந்தாமணி, புன்முறுவலை மறைக்க முடியாமல்.

"அடேய்! உனக்கு இன்னும் மாமனார் ஆகல்லே. இன்னிக்கு எங்கள் சித்தி அப்பாவாக்கும். எனக்குச் சொல்ல 'ரைட்' இருக்கு!"

"நீ குட்டிச்சுவராய்ப் போனே! அவருக்கு என்ன அவஸ்தை வந்துடுத்து?"

"அவர் தீக்ஷிதர் குடும்பத்தைச் சேர்ந்தவராம். ருது வானப்புறம் கல்யாணம் பண்றது அவர் வம்சத்துலேயே கிடையாதாம். 'குல பிரஷ்டம்' ஆயிடுமாம். நீயோ வாய்தா ரொம்ப ஒத்திப்போடறே. அதுக்குள்ளே பெண் பெரியவளாகிவிட்டால் என்ன பண்றதுன்னு, அவர் தூக்கமில்லாதே தவிக்கிறார். உனக்கு என்ன வந்தது கேடு? நாளைக்கே தாலியைக் கட்டிட்டுப் போயிடேன்" என்றான் சிரித்துக்கொண்டு.

"எல்லாம் ஒரு கணக்காதாண்டா சொல்றேன்."

"உன் கணக்கோ, உன் மூஞ்சியோ!— அநாவசியமாய்ப் பிறத்தியார் மனசுக்குக் கஷ்டம் கொடுக்கப்படாதுன்னு எனக்கு உபதேசம் பண்றயே, அந்த மூளை இப்போ உனக்கு எங்கே போச்சு?—பாகீரதியைக் கல்யாணம் பண்ணிக்கிறது நிச்சயந்தானே?"

"பேத்தாதேடா!"

"அப்போ சட்புட்னு காரியத்தை முடிச்சுடேன், அதுக்குள்ளே, அந்தப் பெண் பெரியவள் ஆயிட்டால், அந்தப் பிச்சு சாகிற வரையிலும் சங்கடப்படுமே."

சிந்தாமணி சிறிது யோசித்தான். பிறகு அவன் மனத்தில் இருந்ததைச் சொன்னான்.

"அண்ணாவுக்கு இன்னும் மூவாயிரம் பாக்கி இருக்குடா. அதைக் கொடுத்துடணும். இந்தப் 'பேபி ஆஸ்டினை'த் தொலைச்சுட்டு, ஒரு நல்ல காராய் வாங்கணும்னு பார்க்கிறேன்."

"போனாப் போறது, இப்போவாவது மண்டையிலே ஏறித்தே."

"தெரிஞ்சு என்னடா பண்றது? பணம் வேண்டாமா? அண்ணா கடனை வச்சுக்கிறதுலே எனக்கு இஷ்டம் இல்லை. அவர் ஒண்ணும் வாயைத் திறக்கமாட்டார். சித்தியும் பணத்துக்காக அழமாட்டாள். ஆனால், பெருமை அடிச்சுக்கிறதுலே அவளை மிஞ்சினவாள் யாரும் இருக்கமாட்டார்கள். அவளுக்கு அப்படிப் பண்ணினேன், இவனுக்கு இப்படிப் பண்ணினேன் என்று எப்பவும் எதையாவது அளந்துண்டே இருப்பாள். என்னைப் பத்தின வரையிலேகூட எனக்குச் சில வார்த்தைகள் காதுலே விழுந்தது. அது எனக்குப் பிடிக்கல்லை. எங்கள் ஊர் பாங்கி ஒண்ணுலே, ஏலச்சீட்டு நடத்திண்டு இருக்காள். ஐயாயிரம் ரூபாய்ச் சீட்டுலே நான் ரெண்டு எடுத்துண்டு இருக்கேன்."

"மாசம் தவறாதே அதைக் கட்டணுமேடே?"

"அதுலே ஒண்ணும் எனக்கு கஷ்டம் இல்லையடா! எப்படியோ சமாளிச்சுக்கறேன். அடுத்த மாசம் ஒண்ணை ஏலத்துலே எடுத்து, அண்ணா பணத்தைக் கொடுத்துடப் போறேன். இன்னொண்ணை நாலு மாசம் கழிச்சு சீட்டு முடியறபோது முழுசாய் எல்லாப் பணத்தையும் வாங்கிடுவேன். அப்போ கார், கல்யாணம் எல்லாத்தையும் கவனிக்கலாம்னு பார்க்கறேன்" என்றான் சிந்தாமணி அசட்டுச் சிரிப்புடன்.

நாராயணன் ஒரு கணம் மௌனமாய் இருந்தான். "சரி, அடுத்த மாசம் சீட்டுப் பணத்துலே, உங்க அண்ணா

கடனைத் தீர்த்திடு. கார் வாங்கிறதுக்கு நான் ஏற்பாடு பண்ணறேன். கல்யாணச் செலவுக்கும் எப்படியோ பார்த்துக்கலாம். முகூர்த்தத்தை மட்டும், சித்திக்குப் பிரசவமானதும் சீக்கிரமே நடத்திடலாம்.''

''சரி, மாமாவை நாள் பார்க்கச் சொல்லு.''

''உன் 'மாமனுரை'யும் பார்க்கச் சொல்லுடா. அவர் தான் உள்ளூரிலேயே இருக்காரே. கல்யாணத்தைச் சேலத்துலேயே நடத்திடலாமா?''

''வேண்டவே வேண்டாம். இதோ பார், இங்கேயிருந்து எட்டு மைலிலே திருவொற்றியூர் இருக்கு. ஓசைப் படாதே, அங்கே செஞ்சுடலாம், இல்லையா; இந்தப் பக்கம் பத்து மைலிலே திருநீர்மலை இருக்கு. இரண்டாம் பேருக்குத் தெரியாதே அங்கே நடத்திடலாம். திருநீர் மலைக்குத்தான் நாம் 'மேஜர்' கல்யாணத்துக்குப் போனுேமேடா. மறந்துட்டயா?''

''அது எப்படிடா மறப்பேன்? அவன் மச்சுனன் பயல் என் பவுண்டன் பேனவை அடிச்சுடல்லையா?'' என்ருன் நாராயணன் சிரித்தவாறு. பிறகு, சிநேகிதர்கள் இருவரும் வண்டியில் ஏறிக்கொண்டு, மெதுவாக ஊர் சுற்றத் தொடங்கினர்.

இரவில் சாப்பாடு நடக்கும்பொழுது, சமுத்திரக் கரையில் நிர்ணயிக்கப்பட்ட தீர்மானம் அனைவருக்கும் தெரிவிக்கப்பட்டது. சீதாலக்ஷ்மி அம்மாளுக்குப் பூமியில் கால் பதியவில்லை; ஆகாச மார்க்கத்தில் பறப்பது போல் இருந்தது. தன் கணவருக்கு மனச் சாந்தி ஏற்படுவதோடு சுபம் சீக்கிரத்திலேயே நடைபெறுவதைக் குறித்து அவள் அகமகிழ்ந்தாள். விசாலாக்ஷிக்கு மாத்திரம் நாராயணன் உதவி இல்லாவிடில், சிந்தாமணியின் மனத்தைத் திருப்பியிருக்க முடியாதென்று நன்கு தெரியும். நன்றிப் பெருக்கால் அவள் உள்ளம் உருகித் தவித்தது.

எவ்விதத்தில் அவளால் அவருக்குப் பிரதி உபகாரம் செய்ய முடியும்? இப்பிறப்பில், எல்லா விஷயங்களிலும், அவளைவிட அவர் மேன்மையானவரே. அவளால் அவருக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. ஆயினும், அவளால் ஒன்று செய்யமுடியும்—அவர் நீடூழி சுகமாய் வாழ்ந்திருக்கவேண்டுமென்று ஆண்டவனிடம் பிரார்த்திப்பதே. இது பிறருக்குத் தெரியவேண்டிய விஷயமல்ல. ஆதியிலிருந்து, அவளுடைய க்ஷேமத்துக்கு அவர் எவ்வளவு ஆதரவாய் இருந்தார் என்பதை அவள் அறியாளா? அவருக்கு நமஸ்கரித்து, தான் எவ்வளவு கடமைப்பட்டவளென்று அவரிடம் சொல்லவேண்டும்போல் இருந்தது. ஆனால், அது நடக்கிற விஷயமா? அவர் அவளுடைய 'மகன்' ஆயிற்றே! அதற்குப் பதிலாக, இரண்டு மூன்று தினங்கள் வரையில், அவர் கண்ணுக்குத் தென்படக்கூட அவள் பயந்தாள். முதலில், தன் கல்யாணத்தால் தன் பெற்றோர்களுக்கு மட்டும் நன்மை ஏற்படுமென்று அவள் நினைத்தாள். இப்பொழுது, பாகீரதியின் சுகத்துக்கும் தன் கல்யாணமே காரணமென்று அவள் நினைக்க நேர்ந்த பொழுது, பலர் சுகப்படும்பொருட்டு, ஒருவர் கஷ்டப்படுவது நியாயமே என்று அவளுக்குப் பட்டது. ஆனால், அவள் என்ன கஷ்டத்தை அநுபவித்தாள் என்பதை அவளால் விவரிக்க முடியவில்லை. அதை மேலே தொடர்ந்து நினைக்கவும் அவளுக்கு இஷ்டம் இல்லை.

மனத்துக்குச் சாந்தியும் ஒருவித சந்தோஷமும் ஏற்படவே, விசாலாக்ஷி தான் எழுதி வைத்திருந்த வியாசங்களில் சிலவற்றைப் பொறுக்கிச் சுசீலாவினிடம் கொடுத்து, நிதானமாய்ப் படித்து, அவளுடைய அபிப்பிராயத்தைச் சொல்லும்படி கேட்டுக்கொண்டாள்.

"உன்னுடைய கேலி,பரிகாசத்தை எல்லாம் கொஞ்சம் தூரக்கட்டி வைச்சுட்டு, நான் எழுதினதுலே ஏதாவது அர்த்தம் இருக்கான்னு பார்?'' என்றாள் விசாலாக்ஷி.

சுசீலா, வாய் திறவாமல் கொடுத்த பத்துப்பதினைந்து கட்டுரைகளைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். முகம் மலர்ந்தது. "ரொம்ப வேலைதான் செஞ்சிருக்கே. இந்த யோசனைகளெல்லாம் உனக்கு எப்படிவந்தது விசாலம்?"

"அதுலே ஏதாவது அர்த்தம் இருக்கா, இல்லையா?.. அதைச் சொல்லு, நீ!"

"வேண்டிய அர்த்தம் இருக்கு. நீ எழுதினால் அர்த்தங்கூட இல்லாமல் போயிடுமா? ஏது, உனக்கு இவ்வளவு தைரியம் வந்துடுத்து?"

"நான் எதுக்காகப் பயப்படணும், அக்கா? சொன்னால் நீ சிரிப்பே. எனக்கு எப்படி இருக்கு தெரியுமா? லீலா ராணியாட்டம் நம்ப ஸ்திரீ சமூகத்துக்கு உழைக்கணும்னு ஆசையாக இருக்கு. நாலும் தெரிஞ்சவாள் கஷ்டப் பட்டால்தானே, எல்லாரும் சுகப்படலாம்? பார்க்கப் போனால், அது கஷ்டம்னு எப்படிச் சொல்ல முடியும், அக்கா? லீலா ராணி கஷ்டப்பட்டுண்டா இருக்காள்? பிறத்தியார் கஷ்டம்னு நினைக்கிறது, அவளுக்கு அவ்வள வுக்கவ்வளவு சுகமாக்கும்! அது எனக்குத் தெரியும்; அது எப்படி இருந்தாலும் சரி, நான் 'மாதர் சங்கத்'துலே சேரப் போறேன். சேர்ந்தப்புறம், மெள்ள மெள்ள என்னாலே ஆனதைச் செய்யறேன்.—ஏன் அப்படி முழிக்கிறே?"

"உன்னை அந்தப் பிரசங்கத்துக்கு அழைச்சிண்டு போனது என் தப்பு."

"தப்பு இல்லை, அது நீ செய்த பெரிய உபகாரமாக்கும்! நீ சொன்னதுபோல, நான் பழைய விசாலம் இல்லை, அக்கா: அப்போ என்னமோ, மனஸு ரொம்ப கஷ்டப் பட்டது; அழுதேன், நிஜந்தான். ஆனால், இப்போ எல்லாம் தெளிஞ்சு போச்சு. ஒருத்தர் எவ்வளவு வேணும்னால் கஷ்டப்படலாம். ஆனால் பாழும் உலகம், அவாள் கஷ்டம் அவாளோடேன்னு இருக்கமாட்டேங்

கிறதே—எந்தப் பக்கம் திரும்பினுலும், ‘நீ கஷ்டப்படறே, நீ துக்கப்படறே’ன்னு சுட்டிக் காட்டறுப்போல இருக்கே, இந்த எழவைத்தானே சகிக்கப்படல்லே!''

சுசீலா மௌனமாய் உட்கார்ந்திருந்தாள்.

''அது என்னவோ அக்கா, நான் சங்கத்துலே சேரத்தான் போறேன். நீ சேர்க்க மாட்டேன்னுல், நான் எப்படியாவது சேர்ந்துடுவேன்.''

“மாமா வேண்டாம்னுல் என்ன பண்றது விசாலம்? நாராயணன் அண்ணு என்ன சொல்வானே?''

“எல்லாத்துலேயும் நான் அவாளுக்குக் கடமைப் பட்டவள்தான் அக்கா. நான் கீழ்ப்படிந்து நடப்பேன். இந்த விஷயத்தில் மட்டும் யார் பேச்சையும் கேட்க மாட்டேன்!''

“இரையாதே! நான் உனக்கு வேண்டியதெல்லாம் செய்யறேன். உன்னைக் கமிட்டியிலேகூடப் போடச் சொல்றேன். நீ மாத்திரம் பிரசவம் ஆகிறவரையிலும் இதைப்பத்திப் பேசாதே. எல்லாம் சௌகரியமா முடியட்டும். நம்ப ரெண்டு பேருமாய் அந்தச் சங்கத்துக்கே ஒரு புத்துயிரைக் கொடுக்கலாம். உனக்கு இவ்வளவு உற்சாகம் இருக்கிறபோது நம்ப ரெண்டு பேருமாய் லோகத்தையே மராமத்து பண்ணிடலாமே!''

''பார்த்தாயா?—கேலி பண்ண ஆரம்பிச்சுட்டயே!''

''அதுதான் அசட்டுப்பேச்சு! நிஜம்மாய்ச்சொல்றேன், விசாலம், உன் யோசனைகள் சிலதெல்லாம் அற்புதமாய் இருக்கு. நம்ம ஊர் மட்டும் இல்லே. லோகத்துலே இருக்கிற மனித சமுதாயத்துக்கே அதெல்லாம் பொருந் தும்போல இருக்கே. ஒவ்வொரு இடத்துலே நெருப்புப் பொறி தெறிக்கிறதே!''

“ஆமாம் — அதுக்குள்ளே நீ என்னத்தையெல்லாம் படிச்சுட்டே?''

“எனக்கும் கொஞ்சம் மூளை இருக்கு, விசாலம். பார்த்தவுடனே கிரகிக்கத் தெரியும்.''

"சரி, நீ சண்டைக்கு வராதே, அம்மா. நீ லோக மராமத்துன்னுல் எனக்கு இப்போ ஞாபகத்துக்கு வரது. லோகத்துலே யுத்தமே இல்லாதபடி ஸ்திரீகள் பண்ண முடியும்னு ஒண்ணு எழுதியிருக்கேன்!"

"இதுலே இல்லையே அது."

"அதை அப்புறம் தரலாம்னு ஆத்துலேயே வச்சிருக்கேன். உன்னைக் கண்டால், பயமான்னு இருக்கு? பரிகாசம் பண்ணி என் பிராணனை வாங்கிடறயே!"

"என் பிராணன் இருக்கிற வரையிலும் உன் பிராணனுக்குப் பயமில்லை, போ. அதையும் எடுத்துக் கொடு. படிச்சுப் பார்க்கிறேன்."

"சரி, வா பின்னே! வாசல் பக்கத்து அறையிலே ஒரு மேஜையிலே வச்சுப் பூட்டியிருக்கேன். முதல்லே அந்த ரூமைத்தான் நான் உபயோகிச்சிண்டு இருந்தேன். அப்புறம்—அதுதான் சொன்னேனே—இந்த விமலா அங்கே வந்து டாக்டரைக் கூப்பிடறதும் பார்க்கிறதும் எனக்கு ரொம்ப ஹிம்சையாய்ப் போச்சு! அதுமேலே எதிர் ரூமுக்குப் போனேன். ஆனல் மேஜைச் சாவி என்கிட்டே தான் இருக்கு" என்று விசாலாக்ஷி சுசீலாவை அழைத்துக் கொண்டு தன் வீட்டுக்குப் போனள்.

ஹாலில், நாராயணனும் விமலாவும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். இவர்களைக் கண்டதும், நாராயணன், "என்ன சுசீலா, இந்த வீட்டுப் பக்கமே வரதில்லை போலிருக்கே?" என்றான்.

"சரிதான், என்னலே வராமல் இருக்க முடியுமா, அண்ணு? உனக்குத்தான் வேலை சரியா இருக்கு—" இப்பொழுது, வாசற் பக்கத்து அறையில் மேஜையைத் திறந்துகொண்டு இருந்த விசாலாக்ஷி, 'அம்மாடீ!' என்று கூவித் துள்ளிக் குதித்தாள். எல்லாரும் என்னவென்று பார்க்க ஓடினர்கள்.

"இவ்வளவு பெரிய எலி, அக்கா! என் மேலே விழுந்து ஓடிப்போச்சு" என்று விசாலாக்ஷி, அசட்டுச் சிரிப்புடன் சொன்னாள். அவள் நடுக்கம் இன்னும் நீங்கவில்லை.

"அது ரொம்ப நாளாய்ப் பூட்டிக் கிடந்ததாக்கும்; அதுலே என்ன வச்சிருந்தே?" என்று நாராயணன் கேட்டான்.

"ஒரு காயிதம்—ஐயய்யோ! எல்லாத்தையும் துருவிக் கொட்டிடுத்தே, அக்கா! சுக்குத் தூளாப் போச்சே!" என்று மேஜையின் அறையை இழுத்துப் பார்த்து, அழாத குறையாய் விசாலாக்ஷி சொன்னாள்.

"அதென்ன முக்கியமான காயிதமா?—ஏதாவது டாகுமெண்டா?"

"விசாலம் எழுதின ஒரு கட்டுரை, அண்ணா!" என்றாள் சுசீலா புன்முறுவலுடன்.

"இவ்வளவுதானா! சித்திதான் எழுதி எழுதிக் குவிக்கிறாளாமே! விமலா சொல்றாளே, இன்னொன்று எழுதிக் கொண்டால் போறது."

"அது சாதாரணமான கட்டுரை இல்லை, அண்ணா! ஸ்திரீகளின் பிரயத்தினத்தினாலே, லோகத்திலே யுத்தமே இல்லாமல் செய்ய யோசனைகளாக்கும்!"

"அக்கா! எனக்கு வர கோபத்துக்கு—"

"என்னத்துக்குக் கோபம், சித்தி? அது நல்ல 'ஐடியா'தானே?" என்றான் நாராயணன்.

"அண்ணா, நான் தமாஷுக்குச் சொல்லவில்லை. அவளுக்கு 'ஐடியாஸ்' ரொம்ப இருக்கு. ஸ்திரீ சங்கத்துலே சேரணுமிங்கறாள். சேர்ந்து நாங்கள் ரெண்டு பேரும் கொஞ்சம் 'லோக மராமத்து' செய்யலாம்னு பார்க்கிறோம்!" என்றாள் சுசீலா சிரித்துக்கொண்டு.

"பலே! அவசியம் செய்யவேண்டியதுதான்; விமலாவையும் சேர்த்துக்கோங்களேன்!"

"சரிதான், சித்தி. சேருகிறதுக்கே நீ ஆக்ஷேபிப்ப யோன்னு நான் பயந்துண்டு இருந்தால்..."

"ஒரு ஆக்ஷேபணையும் கிடையாது. ஆனால், சித்தி! உனக்கு மாத்திரம் ஒரு வார்த்தை சொல்றேன்—கோபிச் சுக்காதே. பிரசவம் ஆகிற வரையில் வீணாய் இதுலே யெல்லாம் மனசைக் குழப்பிக்காதே. ஏற்கனவே பல ஹீனம்; அதுலே இது வேறயா? ஒரு மாசம் போகட்டும், அப்புறம் நீங்கள் மூணுபேரும் சேர்ந்திண்டு லோகத்தை உங்கள் இஷ்டம்போலே மராமத்துப் பண்ணுங்கோ!" என்று சிரித்துக்கொண்டு, அவன் தன் வேலைகளைக் கவனிக்கப் போய்விட்டான்.

# 18

## மதிக்குத் தக்கின வாழ்வு

காலக் கிரமத்தில், யாதொரு கோளாறும் இல்லாமல், விசாலாக்ஷிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. பார்த்தவர்களெல்லாம் அது தத்ரூபம், விசாலாக்ஷியையே கொண்டிருந்ததென்று சொன்னார்கள். வீட்டுக்கெல்லாம் ஒரே குழந்தையாக இருந்ததால், அதைக் கவனிப்பதற்கும் சீராட்டுவதற்கும் மனுஷாளுக்குக் குறைவே இல்லை. இதனால் விசாலாக்ஷிக்குக் குழந்தைக் கவலையே இல்லை என்றே சொல்லலாம். அதுவும், அதை முனியம்மாளிடம் ஒப்பித்துவிட்டு, அவள் நிர்விசாரமாய்த் திரிந்தாள்.

அண்ணுசாமி ஐயருக்கு இனி பாகீரதியின் கல்யாணத்தை ஒரு நிமிஷங்கூடத் தாமதிக்க இஷ்டமில்லை. சீக்கிரமாக முகூர்த்தத்தை வைத்து, தம்பதிகளின் க்ஷேமத்தைப் பரிபூர்ணமாகக் கோரிய பந்துக்கள் மத்தியில், திருவொற்றியூர் க்ஷேத்திரத்தில் அவர் பாகீரதியைச் சிந்தாமணிக்குக் கன்னிகாதானம் செய்தார். கல்யாணத்

தில், ஆடம்பரத்துக்குப் பதிலாக ஆனந்தம் தாண்டவமாடியது. திருவொற்றியூரில் ஒரு நாள் முகூர்த்தம் முடிந்ததும், கல்யாணத்துக்கு வந்தவர்கள் அனைவருக்கும் நாராயணன் தன் கிருகத்தில் ஒரு நேர்த்தியான விருந்தை அளித்தான். இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு, அண்ணுசாமி ஐயர் முதலானோர் பாகீரதியுடன் சேலத்துக்குப் புறப்படும்பொழுது, விசாலாக்ஷியையும் அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று, அவளுடைய தாய் சீதாலக்ஷ்மியம்மாள் மிகவும் ஆசைப்பட்டாள். ஆனால், விசாலாக்ஷி இன்னும் ஒரு மாதம் கழித்து வருவதாகச் சொன்னாள். இதில் சீதாலக்ஷ்மியம்மாளுக்கு மிகவும் மனக் குறை.

“எந்த வேளை எப்படி இருக்குமோ, பிரசவத்துக்கு இங்கே இருக்கிறதுதான் நல்லதுன்னு சொன்னேள்; நான் ஒத்துக்கொண்டேன். இப்போகூட வரமாட்டேன்னால் நான் என்ன பண்றது? இரண்டு மாசம் ஆத்துலே குழந்தை இருக்கணும்னு எனக்கு ஆசை இருக்காதா?” என்று சீதாலக்ஷ்மியம்மாள் ஜானகிராம ஐயரையும் நாராயணனையும் பார்த்து முறையிட்டாள்.

“அட ராமா! நாங்களா வேண்டாம்னு சொல்றோம்? சித்தி என்ன ‘பிளான்’ போட்டுண்டு இருக்காளோ?.... ஏன் சித்தி, போகமாட்டேங்கறே?” என்று நாராயணன் கேட்டான்.

“அது சரி, பாகீரதி கல்யாணத்தை முடிக்கிறதுக்கு அவ்வளவு சிரமப்பட்டேளே, அவள் வீடு எப்படி இருக்குன்னு பார்க்கவேண்டாமா? ஆனால், பட்டணத்தைப் பார்த்தப்புறம், எங்கள் ஊர் பட்டிக்காடாட்டந்தான் இருக்கும்....” சிந்தாமணி குறுக்கிட்டுச் சொன்னதைத் தடுத்து, விசாலாக்ஷி சொன்னாள்: “நீங்கள் அப்படி எல்லாம் சொல்லலாமா? வேண்டாம்னு கழுத்தைப் பிடிச்சுத் தள்ளினால் கூட, நான் உங்காத்துலே

இரண்டு மாசமாவது இருக்கத்தான் போறேன்.—அம்மா, நீ ஏதாவது உளறி வைக்கறே! நான்தான் ஒரு மாசம் கழிச்சு வறேங்கறேனே. எனக்கு இங்கே கொஞ்சம் வேலே இருக்குன்னு, கேழ்க்காதே வம்பு பண்ணறயே!''

''அவ்வளவு முக்கியமான வேலே, அதென்ன சித்தி?'' என்று நாராயணன் கேட்டான்.

''சங்கத்துலே சேர்ந்து சிலதையெல்லாம் செய்ய ணும்'' என்ருள் விசாலாக்ஷி, தலே குனிந்தவாறு.

''ஓஹோ! ஊருக்குப் போயிட்டு வந்தப்புறம், சாவ காசமாய் எல்லாம் செய்யலாமே! சங்கம் எங்கே ஓடிப் போறது?'' என்ருன் நாராயணன்.

''இப்போ நான் செய்யப்போறது ஒண்ணும் இல்லேயே. முதல்லே 'மெம்பர்' ஆகணும்; அப்புறம் அக்கா மூலமாய் கமிட்டியிலே புகுந்துக்கணும். அதுக்கப் புறம், ஊருக்குப் போகலாம்னு பார்க்கறேன்'' என்ருள் விசாலாக்ஷி சிரிப்பை அடக்கிக்கொண்டு.

''சரி, நீங்கள் போங்கோ, அம்மாமி. ஒரு மாசம் கழிச்சு, சித்தியை உங்காத்துக்கு அழைச்சிண்டு வரத் துக்கு நான் ஜவாப்தாரி'' என்ருன் நாராயணன்.

''அசடு மாதிரி பேசாதே, அம்மா. ரொம்ப ஹிம்சைப் படுத்தினயோ, வரவே மாட்டேன் பார்த்துக்கோ!'' என்று விசாலாக்ஷி, தன் தாயாரைப் பயமுறுத்திஞள்.

''நீங்கள் எல்லாம் சமர்த்தாக இருந்தால், அதுவே எனக்குப் போரும்டி, அம்மா! சரி, உன் இஷ்டம்போல் செய்'' என்று சீதாலக்ஷ்மியம்மாள் தன்னேத் தானே சமாதானப் படுத்திக்கொண்டாள்.

பாகீரதி முதலானேர் சேலத்துக்குச் சென்று மூன்று மாதங்கள் ஆகியும், விசாலாக்ஷிக்குச் சென்னேயைவிட்டு நகர முடியாமல் இருந்தது. அவ்வளவு வேலேயை உற் பத்தி செய்து கொண்டுவிட்டாள். ஆனல், தன் குழந் தையை அவள் கவனிக்கவில்லே என்று சொல்லக்

கூடாது—அதற்கு முனியம்மாள் செய்த சுசுரூஷைக்கு மேல் அவளால் என்ன செய்ய முடியும்? மாதத்துக்கு ஒரு முறையாவது தவறாமல் சென்னைக்கு வந்துகொண்டிருந்த சிந்தாமணி, அவர்களுடைய யோக க்ஷேமங்களைத் தெரிவித்துக்கொண்டே இருந்தான். பாகீரதி, இன்னும் குடித்தனம் செய்ய ஆரம்பிக்காவிட்டாலும் அநேகமாய்த் தன் கணவன் வீட்டிலேயே இருந்ததாகவும், அவளால் இரண்டு கண்களையும் இழந்த சிந்தாமணியின் தாயாருக்குப் பேருதவி ஏற்பட்டதென்றும் தகவல் கிடைத்தது. ஐந்து மாதங்களும் கடந்தன. அப்புறமும் விசாலாக்ஷி சேலத்துக்குப் புறப்பட்டபாடில்லை. இப்பொழுது பாகீரதியினிடத்திலிருந்தே நிஷ்டூரமான கடிதங்கள் வரத் தொடங்கின. ஒரு கடிதத்தில் அவளை எதிர்பார்ப்பதில் பிரயோஜனமில்லை என்று தெரிந்ததால், தன் கணவன் இஷ்டப்படி யாருக்கும் தெரிவிக்காமல் வீட்டோடு வீடாய், சாஸ்திரப்படி செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடித்துவிட்டு, அவள் தன் கணவனுடன் வசிக்க வந்துவிட்டாளென்றும், கல்யாணமானதும் தன்னையும் மற்றச் சகோதரிகளைப்போல மறந்துவிட்டாளென்றும், வெகு துக்கத்தோடு அவள் எழுதினாள்.

இந்தக் கடிதத்தைப் பார்த்து, விசாலாக்ஷிக்கு மனம் உருகிவிட்டது. சங்கப் பைத்தியம் 'பாகி'யையும் மறக்கும்படி செய்துவிட்டது. இனி, ஒரு நிமிஷங்கூடத் தாமதிக்க அவளுக்கு இஷ்டமில்லை. உடனே இரண்டு மாதங்கள் லீவ் எடுத்துக்கொண்டு, ஜானகிராம ஐயரையும் தன்னுடன் சேலத்துக்கு வந்து இருக்கும்படி கேட்டுக்கொண்டாள். ஆனால் புறப்படுவதற்கு அவருடைய அபிப்பிராயத்தில் இரண்டு வாரங்கள் வரையில் நல்ல தினம் ஒன்றுகூட இல்லை. மேலும், சேலத்தில் ஒருதினத்துக்குமேல் தங்க முடியாததற்கு அவர் மிகவும் வருந்தினார். ஏனெனில், அவர் உபகாரச் சம்பளம் பெறுவதற்கு இன்னும்

ஆறு மாதங்கள்தான் இருந்தன. ஆயினும், அவர் இலாகாவுக்கு அத்தியாவசியமாக இருந்ததால், மற்ெருரு வருஷம் வேலை பார்க்கும்படி சர்க்காரே அவரைக் கேட்டுக்கொண்டார்கள். ஆகையினுல் இச்சமயத்தில் 'லீவ்' வாங்கிக் கொண்டு வீண் காலம் கழிப்பது அவருக்குப் பெரிய அதர்மமாகப் பட்டது. எனவே, இரண்டு வாரங்களுக்குப் பிறகு இரண்டே தினங்கள் லீவ் எடுத்துக்கொண்டு விசாலாக்ஷியையும், குழந்தை வத்ஸலாவையும் சேலத்தில் 'மாமனூர்' அண்ணுசாமி ஐயர் கிருகத்தில் விட்டுப் பிரிய நேர்ந்தபொழுது, அவர் மனம் மிகவும் வருந்தியது. குழந்தையை ஜாக்கிரதையாய் கவனித்துக் கொள்ளும்படி' திருப்பித் திருப்பித் தலை நோவெடுக்கும் வரையில் விசாலாக்ஷியினிடம் அவர் சொல்லிட்டு விடை பெற்றுக் கொண்டார்.

விசாலாக்ஷிக்குப் பரமானந்தம். இவ்வளவு சௌகரியங்களோடு தன் தாயார் அவள் வாழ்க்கையில் எப்பொழுதாவது குடித்தனம் செய்வாள் என்று அவள் நினைக்கவேயில்லை. வீட்டில் ஒரு குழாய், புழைக்கடையில் நல்ல ராட்டினத்தோடு கூடிய ஒரு பெரிய கிணறு, மின்சார விளக்குகள்—இவைகளெல்லாம், ஒரு குடம் குடி நீருக்கு அரை மைல் நடந்துகொண்டிருந்த தன் தாயாருக்கு வெகு சகஜமாகிவிட்டன. பாகீரதி உடனே தன் வீட்டுக்கு வரும்படி பிராணனை வாங்கினுள்.

"என்னடி பாகீ, நேற்று மத்தியான்னம் வந்தேன். இன்னிக்கி மத்தியான்னம் இன்னும் ஆகல்லை. அதுக்குள்ளே அவசரப்பட்டால் எப்படியடி? நான்தான் சொல்றேனே, இங்கே ஒரு மாசம், உங்காத்துலே ஒரு மாசம் கட்டாயம் இருக்கப்போறேன்னு. அக்கா, அத்திம்பேர் இவாளோடேயெல்லாம் ஒரு நாளாவது பேசினுல்தானே எனக்குத் திருப்தியாய் இருக்கும். இங்கே, வியாபார விஷயங்களெல்லாம் எப்படி இருக்கோ?—"

"அதுக்கெல்லாம் ஒண்ணும் குறைவில்லை, அம்மா. ஸ்வாமி புண்ணியத்துலே, நன்னாதான் நடக்கிறதாம். உங்க அத்திம்பேர்தான் அதுலே கரைகண்டவர் ஆச்சே!" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள் குறுக்கிட்டு.

"இங்கேயிருந்து, உங்கள் வீடு எவ்வளவு தூரம் இருக்கும் பாகி?" என்று விசாலாக்ஷி கேட்டுக்கொண்டு இருக்கும்பொழுதே, "எவ்வளவு தூரம் இருந்தால் என்ன?—நீங்கள் நடந்தா வரப் போறேள்?" என்று சொல்லிக்கொண்டே சிந்தாமணி உள்ளே நுழைந்தான். விசாலாக்ஷி திடுக்கிட்டு எழுந்தாள்.

"வந்ததே தெரியில்லையே!" என்றாள் பாகீரதி.

"புதுக் கார் இல்லையா, பாகீ? உங்களை 'டிஸ்டர்ப்' செய்யப்படாதுன்னு, ஓசைப்படாதே வந்தேன்."

"அக்கா நாளைக்குத்தான் வருவாளாம்" என்று பாகீரதி இதழ்கள் துடிக்க முறையிட்டாள்.

"எங்கிட்டே சொன்னால், நான் என்ன செய்வேன்? நீதான் உங்கள் அக்காவைச் சரிப்படுத்தணும்" என்றான் சிந்தாமணி புன்சிரிப்புடன். பிறகு, விசாலாக்ஷியைப் பார்த்து, "அது சரி, அரைமணி நேரத்துலே எங்கள் வீட்டுக்கு ஒரு தடவை வந்து பார்த்துட்டுப் போவதிலே உங்களுக்கு என்ன கஷ்டம்?" என்று அவன் கேட்டான்.

"ஐயோ ராமா! எனக்குக் கஷ்டம் என்ன இருக்கு? சரி, பாகீ கிளம்பு! நான் இப்பவே வரத் தயார்."

"வேண்டாம், வேண்டாம்" என்றான் சிந்தாமணி சிரித்துக்கொண்டு. "வெய்யில் தாழ்ந்து நாலு மணிக்கு வந்து அழைச்சிண்டு போறேன்!"

"எங்கமாமா பெண் வந்திருக்காள். அவள் நாளைக்குக் காலையில் ரயிலுக்குப் போகிறாள். அவளுக்கு உங்களைப் பார்த்துட்டுப் போகணும்னு ஆசை. அவளுக்கு சமீபத்துலே ஒரு கஷ்டம் வந்ததாலே எங்கேயும் வெளியிலே போறதில்லை" என்று சிந்தாமணி இழுத்தான்.

இப்பொழுது, சீதாலக்ஷ்மியம்மாள் ஏதோ இரண்டொரு வார்த்தைகளை விசாலாக்ஷியின் காதில் மாத்திரம் படும்படி மெதுவாகச் சொன்னாள். விசாலாக்ஷியின் முகம் விசனத்தால் நொந்தது. "இப்படீன்னு தெரிஞ்சால் நான் காலம்பறவே வந்திருப்பேனே. துக்கத்தைக் கூடப் பாராட்டாதே, என்னைப் பார்க்கணும்னால், அந்தம்மா எவ்வளவு நல்லவளாய் இருக்கணும்? நீ ஏதாவது பெருமை அடிச்சிண்டயாக்கும்?" என்று அவள் பாகீரதியைப் பார்த்துச் சொன்னாள்.

"நான் ஒண்ணும் சொல்லலலை, அக்கா. அவர்தான்—" என்று தன் கணவனைக் காட்டினாள்.

"பேஷ்! பாகீ! சமயத்துலே இப்படித்தான் காட்டி விட்டுடுவே போலிருக்கு!" என்று சிந்தாமணி வேடிக்கையாய்ச் சொன்னான்.

"நான் எதோடு சேர்த்தி? என் பேச்சு எதற்கு வந்தது?"

"அல்லு அசலுலே சம்பந்தம் பண்ணிக்கிண்டதுக்குக் காரணம் என்னன்னு கேட்டாள். 'சித்தி' தங்கைங்கிறது ஒண்ணே போரும்னு நாராயணன் சிபார்சு பண்ணினான்னு சொன்னேன். இதுலே என்ன தப்பு?"

"நீங்கள் எல்லாம் என்னைத் தூக்கி வைக்கறேள்! எனக்கு யோக்கியதை வேண்டாமா?" என்று அவள் தலை குனிந்தவாறு சொன்னாள்.

பிறகு நாலு மணி சுமாருக்கு அனைவருடனும் விசாலாக்ஷி பாகீரதியின் வீட்டுக்குச் சென்றாள். பாகீரதியின் மாமியாரும் அந்த அம்மாளின் தமையனார் மகளும் அவளை அன்போடு வரவேற்றார்கள். விழிகளில் ஒளி அடியோடு ஒழிந்துவிட்ட போதிலும், 'பாட்டி'யின் பாவனையிலும் குரலிலும் உருக்கம் ததும்பியது.

"எனக்கு திருஷ்டி போய்ப் பதினைஞ்சு வருஷமாச்சு, அம்மா. அவள்தான் எனக்கு எவ்வளவோ சகாயமாய்

இருந்தாள். உப்புக் கல்லாட்டம் ஒரு பெண்ணை வச்சிண்டு இருந்தாள். பாவி! அவளையும் வாரிப் போட்டுட்டாள்!.... " சோகம் அடைந்த தாயின் கண்களில் நீர் பெருகியது.

"ஏனோ பகவான் நல்லவர்களுக்கெல்லாம் கஷ்டத்தைக் கொடுக்கிறார்!" என்று விசாலாக்ஷி மிகவும் வருத்தப் பட்டாள்.

"கஷ்டப்பட்டால்தான் ஞானம் வளரும்னு பண்ருரோ என்னமோ!" என்றாள் கிழவி.

இப்பொழுது, சிந்தாமணி குறுக்கிட்டு, "அம்மா, நான் வெளியிலே போகணும். ஒரு தரம் வீட்டைச் சித்திக்குச் சுத்திக் காட்டிடறேன்......" என்றான்.

"என்னடாது?—நீ கூடவா சித்தின்னு கூப்பிடறே?" என்றாள் சிந்தாமணியின் தாயார்.

சிந்தாமணி சிரித்தான். "நாராயணன் 'சித்தி'ன்னு கூப்பிடணும்னு சொன்னான். அது அப்படியே வழக்கமாயிடுத்து. அதுலே என்ன தப்பு, அம்மா?.....சரி, நான் ஆத்தங்கரை வரையிலும் தோட்டத்தையெல்லாம் காண்பிச்சுட்டு வறேன்" என்று விசாலாக்ஷியையும் மற்றவர்களையும் சிந்தாமணி அழைத்துக்கொண்டு போனான்.

அந்த வீடும் வெகு நாளைக்கு முந்தி கட்டிய கட்டிடமே. காலத்துக்கு ஏற்ற செளகரியங்கள் இல்லாவிடினும், விசாலமாக அமைந்திருந்தது. புழைக்கடை மாத்திரம் நூறடி அகலத்துக்கு, ஒரு பர்லாங்குக்கு அதிகமாகவே நீண்டு இருந்தது. பலஜாதி மரங்கள் இங்கொன்று அங்கொன்ருக இருந்தபோதிலும், மாமரங்கள் மட்டும் ஐம்பது அறுபதுக்கு மேல் இருந்தன எல்லாம் முதல் தரமான ஒட்டு மரங்கள். கொல்லைக்கும் ஆற்றுக்கும் இடையில் பத்துப் பதினைந்து அடி அகலமுள்ள வண்டிப் பாதை ஒன்றுதான் இருந்தது.

"இந்த ஆத்துலே வெள்ளம் வந்ததுன்னல், ஒரே யடியாய் எல்லாத்தையும் அடிச்சிண்டு போயிடுமாம்" என்ருள் பாகீரதி.

"நம்ப ஊர் பெரிய வாய்க்காலாட்டம் தானே இருக்கு!" என்ருள் விசாலாக்ஷி.

"வாஸ்தவந்தான். ஆனல், வெள்ளம் வந்ததோ, ஊரை ஒரு ஆட்டு ஆட்டி வச்சிடும். தடதடன்னு ஒரே வேகந்தான்! மரம், மட்டை, ஆடு, மாடு எல்லாத்தையும் உருட்டி அடிச்சுக்கொண்டு வரும். மனுஷாளையே எத்தனை பேரைச் சாப்பிட்டிருக்கு, தெரியுமா? ஒரு தடவை புழைக்கடை வாசல்படி வரையிலும் வந்துடுத்து!" என்ருன் சிந்தாமணி.

"அப்போ பார்க்கிறதுக்கு வேடிக்கையாக இருக்கும்" என்ருள் பாகீரதி.

"வேடிக்கை இருக்கட்டும். ரொம்ப ஆபத்தாக்கும்! திடீர்னு பொங்கும், திடீர்னு வத்திப்போகும். வெள்ளம் வந்தபோது, அசடாட்டம் இங்கே எல்லாம் வந்து வைக்காதே, பாகி!" என்று சிந்தாமணி எச்சரித்தான்.

சிறிது நேரம் தோட்டத்தில் உலாவிவிட்டு, எல்லாரும் வீட்டுக்கு வந்தார்கள். சிந்தாமணியும் தன் வேலையைக் கவனிக்கப் போகவே, விசாலாக்ஷி பாகீரதியின் மாமியாரோடு சாவகாசமாய்ப் பேசத் தொடங்கினுள். பாகீரதி சமையல் வேலையில் ஈடுபட்டாள்.

"இவ்வளவு வைத்தியம் பண்ருளே, உங்களுக்கும் ஏதாவது வழி இல்லாமலா இருக்கும்?" என்ருள் விசாலாக்ஷி பரிவுடன்.

"எனக்கா?—பகவானுடைய அநுக்கிரகம் இல்லாத போனல், வைத்தியம் என்ன பண்ண முடியும், அம்மா? நாற்பது வயசுக்கு மேலே பெரியம்மை போட்டினுள்:—நான் செத்தே போயிருக்கணும்.—நான் அவ்வளவுக்குப் புண்ணியம் பண்ணல்லே.—அந்தப் பராசக்தி கண் இரண்டையும் பிடுங்கிக்கொண்டு போயிட்டாள்.

என்ன பாவம் செஞ்சேனே, யாருக்குத் தெரியும்? ஆனால் என் குழந்தை எல்லாப் பிள்ளைகளாட்டமும் இல்லையடி, அம்மா! எது செஞ்சாலும் எங்கிட்டே சொல்லாமல் இருக்கமாட்டான். — சொல்லணும்னு நான் ஆசைப் படலை.—ஆனால், அவனாலே சொல்லாதே இருக்க முடியாது. பாகியைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முந்தி என்னோடே எவ்வளவு யோசனை பண்ணியிருப்பான், தெரியுமோ? உன்னைப்பத்திச் சகலத்தையும் சொன்னான்; ரொம்ப ரொம்ப சிலாகிச்சிண்டான்.''

''அய்யோ, நான் எதோடே சேத்தி, பாட்டி? எனக்கு என்ன தெரியும்?'' என்றாள் விசாலாக்ஷி உண்மையான தாழ்மையுடன்.

''தெரிஞ்சுக்கிறதுக்கு இந்த ஜன்மத்துலேயே இரண்டுதான், அம்மா—நல்லது, பொல்லாதது. நல்லதைச் செய்யாத போனாலும், இது நல்லது இது பொல்லாததுன்னு தெரிஞ்சிக்கிற விவேகத்தையே இழந்துட்டால், அப்படியாப்பட்டவர்களுக்கு விமோசனம் ஏது? உன் குணத்தில் பாதியாவது உன் தங்கைக்கு இருக்குமின்னு பண்ணிக்கோடா, அப்பான்னேன்.—சித்தே கிட்டே வாயேன், விசாலம். இன்னும் பக்கத்துலே வா, கூச்சம் எதுக்கு, அம்மா!'' என்று பாட்டி, விசாலத்தின் முகத்தைத் தன் கைகளால் அன்புடன் மெள்ளத் தொட்டு ஆராய்ந்தாள். பேச்சுக் கேளாத தூரத்தில், அம்மியில் எதையோ அரைத்துக்கொண்டிருந்த பாகீரதி இதைப் பார்த்துச் சிரித்தாள்.

''பாகி சிரிக்கிறாளாக்கும்!'' என்றாள் பாட்டி சிரித்த முகத்தோடு. ''உன் தங்கைதானே, அம்மா, எனக்குக் கண்ணு! அது முதலிலே எவ்வளவு சங்கோசப்பட்டதுங்கறே? இப்போ, நன்னாப் பழகிடுத்து, என் மடியிலே கூடப் படுத்துத் தூங்கிடும்'' என்றாள் பாட்டி ஆனந்தத்தோடு.

“நீங்கள் அவளுக்கு ரொம்பச் செல்லம் கொடுக்கிறேள் போலே இருக்கு.”

“என் குழந்தை இல்லையா அவள்? கண்ணில்லாப் பாவி, என்னால் அவளுக்கு என்ன செய்ய முடியும்? அவள்தான் எனக்குச் சகலமும் செய்கிறாள். பார்க்கிறவாள் நான் கஷ்டப்படுவதாக எண்ணலாம். ஆனால் என் சுகம் அவாளுக்கு என்ன தெரியும்? நீ புத்திசாலி, விசாலம்! சொன்னால் தெரிஞ்சுப்பே. போகப் போக உனக்கே நன்னாத் தெரியும்.—சுகம் இங்கிறது, இங்கேதான் இருக்கு, வேறெ எங்கேயும் இல்லே” என்று விசாலத்தின் நெஞ்சைத் தொட்டுக் காண்பித்தாள்.

“நீங்கள் பேசறதைக் கேட்டிண்டு இருந்தாலே போரும் போலே இருக்கே!” என்றாள் விசாலாக்ஷி மரியாதையுடன்.

“அப்படி நான் ஒன்றும் ஞானி இல்லே, அம்மா. ஆனால் ஒன்று சொல்றேன், கேள். பகவான் ஒன்னைக் கெடுத்தால், இன்னொன்னைக் கொடுப்பார். அந்தத் தராசை மட்டும் எப்பவும் சமானமாய் வச்சுடுவார். அது என்ன மாயையோ! ‘வாழ்வுக்குத் தக்கின மதி’யின்னு சொல்றது வழக்கம், என்னைக் கேட்டால் ‘மதிக்குத் தக்கின வாழ்வு’ன்னுதான் சொல்வேன். ஆனால், அந்த மதியை வழிக்குக் கொண்டுவரதுலேதான் சகலமும் இருக்கு” என்றாள் பாட்டி அழுத்தம் திருத்தமாய்.

இவ்வாறு இருவரும் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

# 19

# குழப்பம்

விசாலாக்ஷிக்குச் சேலத்தில் இரண்டு மாதங்கள் கழிந்ததே தெரியவில்லை. பாகீரதியின் வீட்டில், அவள் ஏழெட்டு நாளைக்குமேல் சேர்ந்தாப்போல் இல்லை. ஆயினும், தினம் சிறிது நேரமாவது அவள் அங்கே தங்காமல் இருக்கமாட்டாள். பாகீரதியின் மாமியாரோடு பேசிப் பழகுவது அவளுக்கு ஓர் அலாதியான உற்சாகத்தையும் சாந்தியையும் உண்டாக்கியது. அதோடு, பாகீரதி—சிந்தாமணியின் அந்நியோந்நியத்தைக் காண அவள் மனம் பூரித்தது. அவர்களுடைய நட்பு பல நூற்றுண்டுகளின் தொடர்புபோலக் காணப்பட்டது.

அன்பும் அபிமானமும் கலந்த இன்பப் பெருக்கில் அவள் தான் சென்னையில் வாழ்ந்ததை மறந்தாள். ஆனால், சென்னையில் இருந்தவர்கள் அவளை மறக்கவில்லை. அவளுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்ப்பதாக ஒன்றன்பின் ஒன்றுகக் கடிதங்கள் வரத் தொடங்கின. விளையாட்டுப்போல் விசாலாக்ஷி சென்னையைவிட்டு மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. இப்பொழுது, நாராயணனின் வற்புறுத்தல் அதிகரித்தது. 'சித்தி' இல்லாததனுல் வீட்டு விவகாரங்கள் சரியாகக் கவனிக்கப்படாமல், பாழாகிக்கொண் டிருந்தன என்றும், உடனே அவளை அழைத்துக்கொண்டு வரும்படி அவன் அண்ணுசாமி ஐயருக்கு எழுதினுன். சுசீலாவும் முறையிட்டாள். அவளுடைய சம்மதம் இருக்கும் என்ற உத்தேசத்தின் பேரில், விசாலாக்ஷியைச் சங்கத்துக்கு 'உதவி காரியதரிசி'யாக நியமித்தாகிவிட்டதென்றும், இரண்டு மாதங்கள் தங்கப் போனவள் சேலத்திலேயே 'ஆணி' அடித்துவிட்டால் என்ன செய்வதென்றும் அவள் புலம்பினுள். இதைக் கண்டதும், விசாலாக்ஷிக்குத் தூக்கம் கலைந்ததுபோல

இருந்தது; பழைய நினைவுகள் அலைமோதிக்கொண்டு வந்தன. அவள் செய்யவேண்டிய காரியங்கள் எவ்வளவு இருந்தன! சங்கத்துக்கு உதவி காரியதரிசியா! 'அக்கா' நல்லவேலை செய்தாள். அடுத்த பதவி காரியதரிசிதானே? அவளால் அதை வகிக்க முடியாதா? கடவுள் அருள் அவள்பால் இருந்தால், அவள் எதைத்தான் சாதிக்க முடியாது? இவ்வுலகத்தில் பிறர் நன்மைக்காக உழைப்ப தற்கு மிஞ்சிய சுகம் வேறு ஏது? இனி அவளுக்கு ஒரு நிமிஷங்கூட சேலத்தில் தங்க இஷ்டமில்லை; தகப்பனாரை அழைத்துக்கொண்டு சென்னை வந்து சேர்ந்தாள்.

சுசீலா முதலானோர் வருஷக் கணக்கில் பிரிந்து இருந் ததுபோல, அவளைச் சுற்றிச் சுற்றித் திரிந்தார்கள். வாசற் பக்கத்து ஜன்னலை மூடாததால், பல துணிமணிகள் திருட்டுப் போய்விட்டன என்று நாராயணன் புகார் செய்தான்.

"ஒருநாள் மத்தியான்னம், முனியம்மாள் வீட்டுக்குப் போயிருந்த சமயம் பார்த்து, யாரோ குழாயின் கீழே போட்டிருந்த கங்காளத்தை அடிச்சுண்டு போயிட்டான். இன்னும் என்ன என்ன போயிருக்கோ, நீ பார்த்தால் தான் தெரியும்" என்றான் நாராயணன் புன்சிரிப்புடன்.

"அடாடா! அது ரொம்ப நாள் சாமானாச்சே! இப்போ அது மாதிரி கிடைக்கவே கிடைக்காதே. கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருக்கப்படாதோ!"

"ஜாக்கிரதையாய் இருக்கத்தொட்டுதான், இதோடே நின்னது.—"

"உங்களுக்கு என்னமோ சிரிப்பாய் இருக்கு. . . ." என்று அவள் சினந்துகொண்டாள்.

"நான் என்ன செய்வேன், சித்தி? அந்தத் திருட்டுப் பயல் ரொம்ப நாழியா பார்த்துண்டு இருந்தான் போலிருக்கு. நான் புழக்கடைப் பக்கம்போய் ஒரு நிமிஷங் கூட இருக்காது, தூக்கிண்டு போயிட்டான்" என்று விமலா தன் குறையைச் சொன்னாள்.

"எல்லாம் சித்தியாலேதான் வந்தது. பிறந்தகம் ஆச்சேன்னு பெரிய முகாம் போட்டுட்டாள்!"

விசாலாக்ஷி வாய் திறவாமல், தலையெடுத்து நாராயணனைப் பார்த்தாள். அவள் விழிகளைக் கண்டதும் அவன் குறும்புத்தனம் மாறியது. இப்பொழுது, நீயும் போகணுமிங்கறே!" என்று அவன் பேச்சை மாற்றி விமலாவைப் பார்த்துச் சொன்னான்.

"ஆனால் அவளுக்கும் போகணும்னு இருக்காதா?" என்றாள் விசாலாக்ஷி, நிமிர்ந்த தலை குனியாமல்.

"நான் என்ன, வேண்டாம்னு சொல்றேனா?" என்றான் நாராயணன் ஸாத்துவிகமாய்.

"அவர் ஒண்ணும் சொல்லலை, சித்தி. எனக்குத் தான் இப்போ போகப் பிடிக்கலை.

"உங்கம்மா சங்கதியும் கொஞ்சம் கவனிக்க வேண்டாமா, விமலா? அஞ்சோடே நான் ஆறு; அப்படி இருந்தும், நான் வரல்லேன்னு எங்கம்மா எவ்வளவு கஷ்டப்பட்டாள் தெரியுமா? போய், ஒரு பத்து நாளாவது இருந்துட்டு வாயேன்; அவளுக்கு எவ்வளவோ சந்தோஷமாய் இருக்குமே!"

"இப்போ வேண்டாம்னு பார்த்தேன். உங்களோடே சங்கத்துக்கு வரணும்னு எனக்கும் ஆசையாய் இருக்கு; ஆனால், பத்துப் பதினைஞ்சு நாளானால் போயிட்டு வந்துடறேன், அம்மா" என்று விமலா ஒப்புக்கொண்டாள்.

விமலா பிறந்தகம் சென்றதால், விசாலாக்ஷிக்கு வீட்டு அலுவல்கள் சற்று அதிகரித்தன. அதோடு சங்கத்தைச் சேர்ந்த வேலையும் அதிகமாயிற்று. ஆயினும் நாராயணனுடைய தேவைகள் முன்னிலும் மேலாகவே கவனிக்கப்பட்டன என்றே சொல்லவேண்டும். இந்தச் சமயத்தில், நாராயணனுக்குத் தன் தாயார் மூலமாகச் சேரவேண்டிய சுமார் இருபதினாயிரம் ரூபாய்த் தொகை

கைக்குக் கிட்டியது. தங்கத்தின் பங்கு பூதனமாக வந்து விட்டதால் அதைப்பற்றிக் கவலை இல்லை. அதை என்ன செய்வதென்று நாராயணனுக்குத் தெரியவில்லை. 'அவன் கையில் இருந்தால் காற்ருய்ப் பறந்துவிடுமே!' என்று ஜானகிராம ஐயர் பயந்தார். இதைப் பற்றி அவன் சிந்தாமணிக்கும் எழுதினன். சாத்தியமானுல் ஒரு முறை வந்து போகும்படியும் கேட்டுக்கொண்டான்.

ஒரு நாள் இதைக் குறித்து ஜானகிராம ஐயர் நாராயணன், விசாலாக்ஷி மூவரும் வெகு நேரம் தீவிரமாக ஆலோசித்தார்கள். மயிலாப்பூருக்கு அருகில் சுமார் இரண்டு ஏகர் விஸ்தீர்ணமுள்ள தோட்டத்தோடு கூடிய ஒரு பங்களாவை வாங்கவேண்டுமென்று நாராயணன் ஆசைப்பட்டான். அதில் முதல்தரமான ஒரு 'நர்ஸிங் ஹோமை'யும் மற்றும் இரண்டு வீடுகளையுங்கூடக் கட்ட வசதி இருந்ததால். அதை மெள்ள மெள்ள விருத்தி செய்துகொள்ளலாம் என்பது அவனுடைய உத்தேசம். ஆனுல், தலைமுறையாய் வாழ்ந்துவந்த வீட்டை விட்டுப் போக ஜானகிராம ஐயருக்கு இஷ்டமில்லை. அதிலேயே எல்லாச் சௌகரியங்களையும் செய்துகொள்ள வேண்டு மென்று அவர் விரும்பினர். விசாலாக்ஷிக்கு இரண்டும் நியாயமாகப் பட்டன. ஆனுலும், தோட்டம் துரவோடு கூடிய இடமென்று சொல்லும்பொழுது, அதில் அவளுக்குச் சிறிது ஆசை பிறக்கத்தான் செய்தது.

இவ்விதமான சமயங்களில், 'சித்தி'யோடு சகஜமாய்ப் பழக நேர்ந்தபொழுது, நாராயணனுக்கு எப்பொழுதாவது ஒரு தடவை, தான் முதல் முதலாக அவள் விழிகளைப் பார்த்துப் பிரமித்த ஞாபகம் வரும். எல்லாம் கண நேரந்தான். ஆயினும், அது ஒரு குழப்பத்தை உண்டாக்கிவிடும். சரேலென்று சமாளித்துக்கொண்டு விடுவான். அவனிடம் பரிசுத்தமான அன்பும் கௌரவமும் ஏற்பட்ட விசாலாக்ஷியையும் அவன் குழப்பம் பாதிக்கும்.

அது அவள் வாழ்க்கையில் ஒரு பெருங் குறையை எடுத்துக் காட்டுவதுபோல இருக்கும். துக்கமும், எதற்காகவோ ஒருவித நன்றி உணர்ச்சியும் அவள் விழிகளில் தோன்றும். எல்லாம் க்ஷண நேரந்தான்.

பிறந்தகத்திலிருந்து ஒரு மாதத்துக்கெல்லாம் விமலா, தன் தாயின் வார்த்தையையும் தட்டிக்கொண்டு திரும்பி வந்துவிட்டாள். அவளும் சிந்தாமணியுங்கூட, பங்களா வாங்குவதையே ஆமோதித்ததால், ஜானகிராம ஐயர், உள்ளூற இஷ்டமில்லாவிடினும், 'சரி, சரி' என்று தலை ஆட்டினார். வந்த புதிதில், இரண்டொரு மாதம் விமலா, விசாலாக்ஷியுடனும் சுசீலாவுடனும் அலைந்து திரிந்தாளே தவிர, வரவர சங்க விஷயங்களில், அவளுக்கு உற்சாக மில்லாமல் போய்விட்டது. படிப்படியாக, அவள் அங்கே போவதைக்கூட நிறுத்திவிட்டாள். தான் உண்டு, தன் கணவன் உண்டு—அவர்களைப்பற்றிய வரையில், வாழ்க்கை யின் ஆதியும்-அந்தமும் தங்களிடமே அடங்கிவிட்டதாக அவள் நினைத்தாள். ஆனால், அவளுடைய வரவால், விசாலாக்ஷிக்கு வேண்டிய ஓய்வு கிடைத்தது. தான் சிரமப்படுவதோடு நிற்காமல், அவள் 'அக்கா' சுசீலா வையும் திணற அடித்தாள்.

இவ்வாறு ஜானகிராம ஐயரின் கிருகத்தில் குடும்ப வாழ்க்கை யாதொரு சிக்கலுமில்லாமல், 'கால்வாயில் காற்றோட்டத்துக்கு நகர்ந்தும், நகராததுபோல் காணப் படும் படகைப்போல்' அநாயாசமாய்க் கடந்தது. ஆனால், மாறுதலையே இயல்பாகக் கொண்ட இவ்வுலகில் எதுதான் நீடித்து இருக்குமென்று நம்ப முடியும்?

இது வரையிலும் நாராயணனுடைய திறமை சில ருக்கே தெரிந்திருந்தது. இப்பொழுது, ஜெனரல் ஆஸ்பத் திரியில் அவனிடம் சிகிச்சை செய்துகொண்டு போன வர்கள் மூலம் அவனுடைய பெயர் வெகு தூரம் பரவி விட்டது. அநேக நோயாளிகள் அவனையே நாடி வரத்

தொடங்கினர்கள். ஆஸ்பத்திரியிலும் வீட்டிலும் வேலை தாக்குப்பிடிக்க முடியாமல் போய்விட்டது. அவன் இச்சைப்படாமலே வருமானம் குவிந்தது. ஒரு சமயம் ஆஸ்பத்திரியின் கௌரவ வேலையை விட்டுவிடலாமா என்றுகூட அவன் ஆலோசித்தான். அதனால் தனக்கு அநுபவ ஞானம் குறைந்துவிடுமென்று அவன் பயப்படவில்லை. ஆனால், பல ஏழை மக்களுக்குத் தான் செய்து வந்த உபகாரத்துக்கு நிச்சயம் பங்கம் ஏற்படுமென்று அவனுக்குத் தெரியும். இதை நினைக்கும்பொழுது, அவன் அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டான். வேண்டிய தனத்தைக் கொடுக்கத் தயாராய் இருந்தவர்களுக்கே, வசதி கண்டுபிடிக்க முடியாமல் அவன் தவித்தபொழுது, ஏழை ஜனங்களை வைத்து நிர்வகிக்க அவன் இடத்துக்கு எங்கே போவான்? கடவுள் கிருபையால் புதிதாய்க் காலி நிலத்தில் பெரிய 'நர்ஸிங் ஹோமை'க் கட்டினால் அப்பொழுது அதைப்பற்றி அவன் யோசிக்கலாம். ஆனால், இப்பொழுது நடக்கக்கூடியதை யல்லவா கவனிக்க வேண்டும்! பிரபலம் அடைந்து, அதை நிலைநாட்டவும் விரும்புவோர் அதற்குரிய தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியுமா? நாராயணன் நிபுணனென்றும், அவனுக்குக் 'கைராசி' இருந்ததென்றும் அவனை வேண்டிய அளவு பொது ஜனங்கள் உபயோகித்துக்கொள்ள முயன்றார்கள். அவர்களுடைய அன்பும் விசுவாசமும் அவனுக்கு ஊக்கத்தை ஊட்டியபோதும், அளவற்ற வேலையால் சரீரத்துக்குச் சற்றுச் சோர்வு ஏற்படத்தான் செய்தது.

ஒரு நாள் விமலா வீட்டுக்குள் வராத சமயம். எப்பொழுதும் இரண்டு மணிக்குள்ளாகவே வருபவன், அன்று அவன் சுமார் நான்கு மணிக்குத்தான் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி வந்தான். மிகக் களைப்போடு ஒருவித அருவருப்பும் ஏற்பட்டிருந்ததால், ஸ்நானம் செய்யாமல்

தண்ணீரைக்கூடப் பருக அவனுக்கு இஷ்டமில்லை. மாடியில் படி ஓரமாக இருந்த ஒரு சிறு அறையில் விமலா உட்கார்ந்திருந்தாள். அவளிடம் ஏதோ பேசிவிட்டு, ஸ்நானத்துக்காக இறங்கினான். அப்பொழுதுதான் அவன் முகத்திலிருந்த அநியாயச் சோர்வை விசாலாக்ஷி கவனித்தாள். "இன்னிக்கு ஏன் இத்தனை நாழி?" என்று அவள் கேட்டாள். பேச்சுக் குரலைக் கேட்டு, விமலா தன் அறையில் சற்று உயரத்திலிருந்த ஜன்னலின் வழியாக எட்டிப் பார்த்தாள்.

"இன்னிக்குக் 'கேஸ்' கொஞ்சம் ஜாஸ்தியாய்ப் போயிடுத்து, சித்தி!'' என்று சொல்லிக்கொண்டே அவன் ஸ்நான அறைக்குப் போய்க்கொண் டிருந்தான்.

"நாளைக்குக் கொஞ்சம் வச்சுக்கப்படாதோ? இப்படியா உடம்பைப் பாழாக்கிப்பாள்!" என்று அவள் சொன்னபொழுது, அவ்வார்த்தைகளில் இருந்த உருக்கம், அவனை நின்று திரும்பிப் பார்க்கச் செய்தது. அவள் விழிகளைக் கண்டான்; பழைய ஞாபகம் வந்தது. ஒரு விநாடிதான். பிறகு பேசாமலே போய்விட்டான்.—ஆனால், அவர்கள் இருவரின் பார்வையையும் கவனித்த விமலாவின் மனத்தில், ஒரு பேய் குடிகொண்டுவிட்டது. எல்லாம் போக அவளுக்கு என்ன அவ்வளவு உருக்கம்? தன் புருஷனுடைய ஆரோக்கியத்தில் தன்னைவிட அதிக சிரத்தை வகிக்க அவள் யார்?

ஏதேதோ சந்தேகங்கள் பிறந்தன. துக்கம் ஒரு பக்கமும் கோபம் ஒரு பக்கமும் அவளை வதைத்தன; அன்று முழுதும் சுணக்கமாய்க் கிடந்தாள். விசாலாக்ஷி தன் சங்க விஷயங்களில் மூழ்கியிருந்ததால் அதைக் கவனிக்கவில்லை. ஆனால் அதுமுதல் விமலா போலீஸ் ஸி. ஐ. டி. போல் தன் கணவனையும், விசாலாக்ஷியையும் உற்றுக் கவனிக்க ஆரம்பித்தாள். அவளுக்கு விபரீதமாக ஒன்றும் புலப்படவில்லை. ஒருவேளை அவள் வருவதற்கு முந்தி,

அவ்விருவருக்கும் தவருன சிநேகிதம் ஏற்பட்டிருக்குமோ? அப்படி இருந்தால், 'சிந்தாமணி சித்தப்பா'வுக்கு அது தெரியாமலிருக்க முடியுமா? எள்ளளவு சந்தேகம் இருந் தாலும், இந்தச் சம்பந்தத்தில் அவர் தலையிட்டிருக்கவே மாட்டார்: அது நிச்சயம்: பார்க்கப் போனல், அவள் மீது இருந்த கௌரவத்தினலேதானே அவர் அவளுடைய தங்கையைக் கல்யாணம் செய்துகொண்டார்? அவளு டைய நடத்தையில் பிசகைக் கண்டிருந்தால், அப்படிச் செய்துகொண் டிருப்பாரா? ஆகையால், இதுவரையிலும் விகற்பமாக ஒன்றும் நடந்திருக்காது. அதில் சந்தேகமே இல்லை. ஆனல்—அவர்கள் இருவரின் பார்வையும் அவ ளுடைய மனக் கண்ணில் தென்பட்ட பொழுது—அந்தச் சனியனும் அடிக்கடி தென்பட்டுக்கொண்டே யிருந்தது— அவளுக்கு உடம்பு தீப்பற்றி எரிந்தது. என்ன ஆசை! பணத்துக்காகக் கிழவனுக்கு வாழ்க்கைப்பட்ட 'தரித் திர'த்துக்கு என்ன 'பவுஷு' வேண்டியிருந்தது? அவருந் தான் ஆகட்டும், சதா 'சித்தி, சித்தி' என்று என்ன ஸ்மரணை? ஆனல், அவர்மீது என்ன குற்றம் சொல்வது? யாரோ சொன்னதுபோல், அவளுடைய அழகெல்லாம் அவளுடைய கண்களிலேயே இருந்தன. ஏனே, பகவான் ஏழைப் 'பீடை'களுக்கெல்லாம் அவ்வளவு அழகைக் கொடுத்தார்! சிறிது பழகினல் போதும், எல்லாரும் அவளிடம் வசப்பட்டு விடுகிருர்கள்.—இவ்வாறெல்லாம் அவள் மனம் வாதித்துத் தவித்தது. ஆனல், ஒரு விஷயம் மாத்திரம் அவளுக்கு நிச்சயமாகப் பட்டது. இனி அவளோடு சேர்ந்திருந்தால், அது கட்டாயம் ஆபத்தில் முடியும்: ஆகவே, எவ்விதத்திலாவது சீக்கிரத்தில் பிரிந்து போய்விட வேண்டுமென்று அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

மானிட ஏற்பாடுகளுக்கு இணங்கிக் காலம் நிற் கிறதா? பார்ப்பதற்கு நேற்றுப்போல் இருந்தது. ஆனல்

அப்பொழுதே விமலா புக்ககத்துக்கு வந்து இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. நாராயணன் திரவியத்தை மாத்திரம் வாரிக் குவிக்கவில்லை; சமூகத்திலும் பதவியை மேல்மேலும் அடைந்துகொண்டே போனான். நகரில் எவ்வித நிகழ்ச்சிக்கும் அவனுக்கு அழைப்பு வரும். அவன் போகும்போதெல்லாம் விமலாவையும் கூடவே அழைத்துக்கொண்டு போவான். அதில் அவளுக்குப் பரம சந்தோஷம். சில சமயங்களில், கல்விச் சிறப்பிலும், செல்வப் பெருக்கிலும், சமூகப் பதவியிலும் தன்னைவிட எவ்வளவோ மேலானவர்களோடு அவள் வெகு சகஜமாய்ப் பழக நேர்ந்தபொழுது, அவளுக்குத் தன்னை அறியாமலே ஒரு பெருமை உண்டாகும். ஆனால், அப்பொழுதும் சில சந்தர்ப்பங்களில் அந்தப் பாழும் மனக் குரங்கு சும்மா இராது. அவளை ஏசிக் காட்டுவது போல், தன் கணவனும்-விசாலாக்ஷியும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்ட காட்சியை அவள் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும். மறு க்ஷணத்தில், நெருப்பில் நீரை ஊற்றியதுபோல் அவளுடைய உற்சாகம் குன்றும். விஸ்தரிக்க முடியாத ஒரு பயமும் வேதனையும் பிடித்துக் கொள்ளும்.

இவ்வளவு சஞ்சலத்தில் விமலா அவஸ்தைப்பட்டது விசாலாக்ஷிக்குத் தெரியாதென்றே சொல்லவேண்டும். அவள் சதா சுசீலாவோடு சங்க விஷயங்களைக் குறித்துத் தர்க்கம் செய்துகொண்டும், பாக்கி நேரத்தில், தான் சங்கத்தைப்பற்றித் தியானம் செய்துகொண்டும் மெய்ம் மறந்து கிடந்தாள்.

ஓர் இரவு நாராயணனும் விமலாவும் ஏகாந்தமாக இருந்த சமயம், நாராயணன் தன் தொழிலின் அபிவிருத்தியைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தான்.

"இனிமேல் இந்த இடம் போதாது, விமலா. இதைப் பெரிசாக்கிறத்துக்கும் முடியாது. அந்த பங்களாவிலே 'நர்ஸிங் ஹோமை'க் கட்டித்தான் ஆகணும்."

"கட்டிடுங்களேன். ஆன செலவு ஆகிறது. இந்தச் சந்துலே கிடந்து நாம் ஏன் கஷ்டப்படணும்?" என்ருள் விமலா.

"அதைத்தான் பலமாய் யோசிச்சிண்டு இருக்கேன். என் 'குரு'வும் அடுத்த வருஷம் டில்லிக்குப் போயிடருர். கெட்டிக்காராளையெல்லாம் கூடவே அழைத்துப் போகணும்னு பார்க்கிருர். அவர் போனப்பறம் எனக்கும் இருக்க இஷ்டமில்லே."

"ஏன்?"

"யோக்கியதை இருந்தாலும் கஷ்டமாயிருக்கு; இல்லாதபோனுலும் கஷ்டமாயிருக்கு. என்னைக் கண்டால் சில பேருக்கு இங்கே பிடிக்கல்லே. எனக்குப் பேர் வரது அவாளுக்குக் கஷ்டமாய் இருக்கு. நேத்து வந்தவனுக்கு என்ன இவ்வளவு மரியாதைன்னு சொல்லிக்கிருள். என் ஆசிரியர் இருக்கிறதுனுலே, அவாளாலே ஒண்ணும் பண்ண முடியல்லே. இல்லாதபோனுல், வாலே ஆட்டுவார்கள்."

"விட்டுத் தொலேச்சுடுங்களேன்; அவாள் கொடுக்கிற சம்பளம் தட்டுக்கிட்டுப் போறது!"

"சம்பளத்துக்காகவா நான் இருக்கேன்? அதுலே உழைக்கிறதுக்குப் பதிலாய், என் சொந்த வேலேயைக் கவனிச்சால், மாசம் ஆயிரம் ரூபாய் கூடவே வரும்படி எனக்கு வருமே! 'நர்ஸிங் ஹோமு'க்கு உதவி செய்ய எத்தனையோ பேர் தயாராக இருக்காள். பணத்தைப் பத்தி எனக்குக் கவலேயே இல்லே, விமலா! நான் என்ன நினேச்சிண்டு இருக்கேன் தெரியுமோ?—பங்களா பூர்த்தியானப்புறம், இந்த வீட்டைச் சித்திக்கே கொடுத்துடலாம்னு பார்க்கிறேன்!"

"இருக்கட்டுமே! சித்தி இங்கேயும் நாம் அங்கேயும் இருந்தால் போறது!" என்ருள் விமலா ஆவலோடு குறுக்கிட்டு.

"நான் அதைச் சொல்லல்லே, விமலா. இப்போ, இந்த வீடு, ஜாஸ்தி போனல், இருபதினுயிரத்துக்கு மேலே போகாது. அப்பா சம்பாதிச்சதெல்லாம் கணக்குப் போட்டால், அது ஒரு இருபதினுயிரத்துக்கு வரும். இதுலே பாதி என் பங்குன்னு வச்சுக்கோ. நமக்கு இது ஒரு பிரமாதமா? ஒரு வருஷத்து சம்பாத்தியங் கூட ஆகாது. அம்மா பணத்துலே பங்களா வாங்கி யாச்சு. பாங்கியிலே பதிமூணுயிரம் வச்சிருக்கேன். இன்னும் எவ்வளவோ சம்பாதிக்கிறதுக்குத் தைரியம் இருக்கு. இதெல்லாம் எனக்கு ஒரு கணக்கே இல்லே. போகப் போக நீயே ஆச்சரியப்படுவே, பார்! அதனுலே நம்ப விவகாரங்களெல்லாம் இரண்டு மூணு வருஷத்துலே 'ஸ்டெடி' ஆனப்புறம், எனக்குச் சேரவேண்டிய இந்தச் சுண்டைக்காய் ஆஸ்தியைச் சித்திக்கே எழுதிக் கொடுத்துடலாம்னு பார்க்கறேன். பாவம்! அதுகூட இல்லாத போனல் அவள் என்ன செய்வாள்?" விமலாவுக்குக் கோபம் வந்துவிட்டது.

"சிரிக்கப்போருள்! பெரியவாள் சொத்துலே கொஞ்சமாவது இருக்க வேண்டாமா? அது என்னவோ எது எடுத்தாலும் சித்திக்குப் பரிஞ்சிண்டு வறேளே!" என்று அவள் வாய் தவறி மனத்தில் இருந்த கஷ்டத்தை வெளியிட்டு விட்டாள்.

"என்ன உளறல்?" என்ருன் நாராயணன் ஆச்சரியத் துடன். உடனே அவளுக்கு அழுகை வந்துவிட்டது. அவன் மனம் புண்பட்டபோதிலும், அவளுடைய துக்கத்தை அவனுல் சகிக்க முடியவில்லே. "அடி அசடே! என்ன விமலா, இவ்வளவு பயித்தியம் ஆயிட்டயே!" என்று

அவளை அன்புடன் தட்டி, அவன் சமாதானப்படுத்தினன். விமலாவுக்கு ஒருவிதமாகச் சாந்தி ஏற்பட்டுத் தூங்கியபோதிலும், இரவெல்லாம் விசாலாக்ஷி தன் கண்களால் அனைவரையும் மயக்குவதுபோல அவள் கனவு கண்டாள்.

# 20

## தூஷணை

தன் மனைவிக்கு எதையுமே ஒளித்துவைக்கத் தெரியாதென்று நினைத்த நாராயணனுக்கு, 'சித்தி'யைப்பற்றி அவள் கபடமாக வைத்திருந்த அபிப்பிராயம் அவனைப் பிரமிக்கச் செய்தது. ஆனால் அவ்வபிப்பிராயம் அவனுக்கும் சம்பந்தப்பட்டதுதானே! அதை நினைக்கும்போது அவன் மனம் மிகவும் வருந்தியது. சில வேளைகளில் 'சித்தி'யோடாவது வேறு இளம் பெண்மணிகளோடாவது அவன் சகஜமாய்ப் பேச நேரிட்டபொழுது, விமலாவின் முகத்தில் உண்டான ஒருவித வாட்டத்தையும் கடுப்பையும் அவன் கண்டு திகைத்ததுண்டு. இப்பொழுதுதான் அவற்றின் மர்மம் அவனுக்கு விளங்கியது. என்ன அசட்டுத்தனம்! ஆனால், இவ்வித மனோவிகாரமெல்லாம் தன்மீது அவளுக்கு இருந்த அபாரமான அன்பினால்தான் என்று அவனுக்குத் தெரியாமல் போகவில்லை. ஆதலால், அவளுடைய வார்த்தைகளைப் பொருட்படுத்த அவனுக்கு இஷ்டமில்லை. ஆயினும், அவைகள் அடிக்கடி மனத்தை உறுத்தி, எச்சரிக்கை செய்வதுபோல அவனுக்குப் பட்டது.

விசாலாக்ஷி சஞ்சரித்த உலகமோ வேறாக இருந்தது. சங்கத்துப் பொறுப்பெல்லாம் தன்னைச் சேர்ந்ததாக அவள் பாவிக்கத் தொடங்கிவிட்டாள். இளமையின் ஊக்கத்தாலும் ஆவேசத்தாலும் பல நூற்றாண்டுகளில்

சாத்தியப்படாத காரியங்களை எல்லாம் ஒரே நாளில் நிறைவேற்றிவிட முடியுமென்று நம்பி அலைந்தாள். இப்பொழுது, அவளை அநேக தோழிகள் தேடிக்கொண்டு வந்தனர். அவர்கள் உலக விவகாரங்களைக் குறித்து வாதம் செய்துகொள்வது வேடிக்கையாக இருக்கும். அவர்களுக்கு அவள்மீது இருந்த அபிமானத்தையும் கௌரவத்தையும் காணக் காண விமலாவுக்கு வெறுப்பு அதிகரித்துக்கொண்டே போயிற்று. எல்லா விஷயங்களிலும் தான் விசாலாக்ஷியைவிடக் கீழ்த்தரமானவள் என்ற எண்ணம் ஒன்று அவளை இப்பொழுது பிடித்துக் கொண்டது. இனி ஒரு க்ஷணம்கூட சேர்ந்திருக்க அவளுக்கு இஷ்டமில்லை.

புது பங்களாவுக்குப் போனாலும், எல்லாரும் சேர்ந்து இருக்கவேண்டுமென்று தன் கணவன் விரும்புவதை அவள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆதலால், அவன் புத்தியை மாற்றுவதற்காக எவ்வளவோ சிரமப்பட்டாள். ஆனால் எதற்கும் நாராயணன் மசியவில்லை. பிடி கொடுக்காமல், சிறு குழந்தையை ஏமாற்றுவதுபோல அவள் கேட்பதைத் தவிர்த்து, மற்றக் கதைகளைச் சொல்ல ஆரம்பித்தான். விமலாவின் முகத்தில் ஒரு சோகம் குடி கொண்டுவிட்டது. தன் பேச்சைத் தட்டுவதால், தன் கணவனுடைய நடத்தையெல்லாம் வெறும் பாசாங்கு என்றும், தன்மீது அவனுக்கு உண்மையான அன்பு இல்லை என்றும் அவள் திகில் அடைந்தாள். விசாலாக்ஷியைப்போல ஒரு 'சுழலி' 'மயக்கி' வீட்டோடு வீடாக இருந்தால், எந்தப் புருஷன்தான் அவளுடைய வலையில் அகப்பட்டுக்கொள்ளமாட்டான் என்று தனக்குத்தானே வாதித்துக்கொண்டாள்; இதிலிருந்து தப்பித்துக்கொள்ள வழி தெரியாமல் தவித்தாள். நினைக்க நினைக்க, கோபமும் துக்கமும் அதிகரித்தன; சதா கண்ணும் கண்ணீருமாய் இருந்தாள். ஆனால், அவளுடைய செய்கைகளால்

நாராயணனுக்கு ஏற்பட்ட வருத்தம், வர வரக் கோபமாக மாறியது. இருவரும் சம்பாஷித்துக்கொண் டிருக்கும் போது, இருந்தாற்போலிருந்து, விமலாவின் பித்து குறுக்கிடும். பேச்சுத் தடிக்கும்; சின்ன சச்சரவும் உண்டாகும். நாராயணன் கோப வெறியில் எதையாவது உதாசீனமாகச் சொல்வான். விமலா 'ஹோ!' என்று அழத் தொடங்கிவிடுவாள். உடனே நாராயணன் 'நல்லதுக்கு அண்டயாளம், சொல்லாமல் போ'—என்பதுபோல அவ் விடத்தை விட்டு நகர்ந்துவிடுவான். இரண்டு மூன்று தினங்களுக்குப் புருஷனுக்கும் மனைவிக்கும் பேச்சு வார்த்தை இருக்காது; பிறகு எப்படியோ சமாதானம் ஆகும். இவ்விதச் சம்பவங்கள் அநேகம் நடந்துவிட்டன. நாராயணனும் அவள் பைத்தியத்தைப் போக்க என்ன மருந்தைக் கொடுப்பதென்று தெரியாமல் அவஸ்தைப் பட்டான்.

இந்தச் சமயத்தில் விமலாவுக்கு அத்தை முறையான பார்வதம்மாள் கோயம்புத்தூரிலிருந்து, தன் பேரனுக்கு நாராயணனிடம் வைத்தியம் செய்துகொள்ள வந்தாள். கோயம்புத்தூரில் அந்தச் சிறுவனுடைய வியாதி சஸ்திர சிகிச்சையால்தான் தீரும் என்று நிர்ணயித்துவிட்டார்கள். அந்த வைத்தியத்தைக் கண்டவர்களிடம் ஒப்படைக்க அவளுக்கு இஷ்டமில்லை. ஆனால் நாராயணன் சந்தேகத்தின் பேரில் பல நண்பர்களோடு ஆராய்ந்து பார்த்ததில், அந்த வியாதி சஸ்திர சிகிச்சை இல்லாமல் மருந்தின் மூலமாகவே தீர்ந்துவிடுமென்று தெரிந்தது. மருந்து உட்கொண்ட ஒரு வாரத்துக்கெல்லாம் தெளிவாகக் குணமும் தென்பட்டது. ஆனால் அந்த அம்மாள் தன் கிருக ஸ்திதிகளை உத்தேசித்துச் சீக்கிரமாக ஊருக்குப் போக வேண்டுமென்று விரும்பியதால் நாராயணன் அவள் மூன்று வாரங்களாவது சென்னையில் இருக்க வேண்டுமென்றும், பிறகு வேண்டுமானால் கோயம்புத்

தூரில் சிகிச்சையைப் பூர்த்தி செய்து கொள்ளலா மென்றும் தன் அபிப்பிராயத்தைச் சொன்னன். அந்த அம்மாளும் அதற்கு இணங்கி தங்கவே, நாராயணனும் விமலாவும் ரகசியமாக ஒரு கட்டுப்பாட்டுக்கு வந்தார்கள்; அத்தை பர்வதம்மாள் இருக்கும் வரையில், தங்களுக்குள் எவ்வளவு மனஸ்தாபம் ஏற்பட்டாலும் அதை வெளி யிட்டுக் கொள்ளக் கூடாது என்பதுதான் - இப்படியாவது அவள் புத்தி மாருதா என்று நாராயணன் ஆசைப் பட்டான்.

பர்வதம்மாள் மிகவும் சுறுசுறுப்பானவள். சுசீலா வைப் போல், நான்கு பேர்களோடு கல கலவென்று கலந்து பழக ஆசைப்படுபவள். கோயம்புத்தூர் 'லேடீஸ் கிளப்'பைச் சேர்ந்தவள். விசாலாக்ஷியின் விவகாரங்கள் எல்லாம் அவளுக்கு மிகவும் பிடித்து இருந்தன. அவளுடன் சங்கத்துக்கும் இரண்டொரு முறை போய் வந்தாள். தன்னையும் அழைக்கும்போதெல்லாம் விமலாவுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. போவ தற்கும் இஷ்டமில்லை, மறுப்பதும் நிஷ்டூரத்துக்கு இடமாகும்.

ஒரு நாள் சங்கத்தில் பெண் கல்வியைப் பற்றிச் சிலர் பேசப்போவதாகவும், அவர்களில் விசாலாக்ஷியும் ஒருத்தி என்றும் பர்வதம்மாளுக்குத் தெரியவந்தபொழுது, அவள் விமலாவையும் அங்கே இழுத்துக்கொண்டு போனுள்.

பேசுவதற்கு விசாலாக்ஷியின் முறை கடைசியாக வந் தது. அவளுடைய வார்த்தைகளில் உருக்கமும் கருத்தும் இருக்குமென்று பக்கத்தில் இருந்தவர்கள் பேசிக்கொண் டதை விமலாவுக்குக் கேட்கச் சகிக்கவில்லை. ஆனுல் பர்வதம்மாளின் முகம் சந்தோஷத்தால் விகஸித்தது.

விசாலாக்ஷி, இனிய குரலில், மெள்ள மெள்ள, பல பீடிகைகளைப் போட்டுக்கொண்டு, தன் கருத்தை வெளி யிட்டுக்கொண்டே வந்தாள்.

"ஸ்திரீகள் மாத்திரம் அடங்கிய சமூகமோ, அல்லது புருஷர்கள் மட்டும் சேர்ந்த சமூகமோ எங்கேயாவது இருக்குமா? ஆகையால் ஸ்திரீ புருஷர்கள் சமூகத்தில் சேர்ந்து வாழ வேண்டியது அத்தியாவசியம் என்றும், அது இயற்கையானதென்றும் நாம் நம்பும்பொழுது, அவர்களுடைய பயிற்சியும் சுபாவத்துக்கு ஏற்றவாறு சரிசமானமாக அபிவிருத்தி அடைய வேண்டுமென்பதையும் நாம் ஏன் நினைப்பதில்லை? ஒரு மனிதன் அபாரமான பயிற்சியால் வலது கையால் கூழாங்கல்லையும் நசுக்கித் தூளாக்கக் கூடிய வலுவை அடைந்து, இடது கையை மாத்திரம், மெலிந்து வலிவிழந்து வைத்து, விசிறியைக் கூட உபயோகிக்கச் சக்தியற்றதாக வைத்திருந்தால், அவன் நிலைமையை என்னவென்று சொல்வது? புருஷர்கள் மட்டும் மேல்மேலும் விருத்தியடைந்து, ஸ்திரீகளைப் பாதாளத்தில் அழுத்தி வைத்திருந்தால், அந்தச் சமூகத்தின் கதியும் அவ்வளவுதான்! ஒரு வண்டிக்கு ஒரு புறம் காளையையும், மற்றொரு புறம் பூனையையும் கட்டினால், அது எப்படி இருக்கும்? நான் உருவத்தை மட்டும் ஒப்பிடவில்லை" என்று அவள் புன்முறுவலுடன் சொன்னபொழுது, எல்லாரும் சிரித்தார்கள். "இந்தச் சந்தர்ப்பத்தில் எங்கள் ஊரில் இருந்த ஒரு பிரமுகர் எனக்கு ஞாபகத்துக்கு வருகிறார். அவர் நல்ல வித்துவான்; தர்ம சிந்தனையுள்ளவர்;பசியென்று யார் வந்தாலும் மனைவியின் வார்த்தையையும் மதிக்காமல், தமக்கு வைத்ததையாவது போட்டுவிடுவார். நமது மதத்திலுள்ள என்றும் அழியாத தத்துவங்களை, குழந்தைகளும் தெரிந்துகொள்ளும்படி, அவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்வார். ஆனால் அவருக்கு வாய்த்த மனைவிக்குக் கையெழுத்துக் கூடப் போடத் தெரியாது. அவள் இளமையில் கல்விப் பயிற்சிக்குப் பதிலாக, தயிர், மோர் விற்பதில் கைதேர்ந்திருந்தாள். ஒரு எருமையை வாங்கி நாளடைவில் அதை

ஒன்பதாக்கினுள். இதோடு நிற்காமல், 'சிறுவாடு' விற்பனையிலும் தலையிட்டாள். தன் கணவனுடைய சிநேகிதர் ஒருவருக்குப் பாலைக் கொடுக்க வேண்டியிருந்த பொழுது, அவள் அதில் நீரையும் கலந்து கொடுத்தாள் என்று கதை சொல்வார்கள். அவள் புருஷர் அடைந்த பக்குவமெல்லாம் அவளிடம் பலிக்காமலே போய்விட்டது. இருவருக்கும் எப்பொழுதும் சண்டையும் சச்சரவும்தான். டால்ஸ்டாயைப் போன்ற மகானே தம்மோடு நாற்பது வருஷங்களுக்கு மேல் வாழ்ந்து, சகல விஷயங்களையும் அறிந்த தம் மனைவியின் குணத்தையே மாற்ற முடியாமல் அந்திம காலத்தில் வீட்டை விட்டு ஓடவேண்டியிருந்தால், ஆணுக்கும் பெண்ணுக்கும், கல்வியிலும் பண்பிலும், மலைக்கும் மடுவுக்கும் போல் தாரதம்மியமுள்ள நம்முடைய சமூகம் ஏன் குட்டிச் சுவராய்ப் போகாது? புருஷன் கதர் கட்டி, காங்கிரஸ் பிரசாரம் செய்ய, மனைவி நூற்றுக்கணக்கில் விலையுள்ள பட்டாடைகளை அணிந்து திரிவதை நாம் பார்க்கவில்லையா?

''மேல்நாட்டின் சேர்க்கையால், நமக்கு நன்மைகளை விடத் தீமைகளே அதிகமாக ஏற்பட்டிருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். கல்வியின் அறிகுறிகள் நல்லொழுக்கமும் தெய்வ பக்தியும் என்று நாம் நம்பினுல், நம்மவர்களில் கோடானுகோடிகளுக்கு எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும், மேல் நாட்டாரைவிட நாமே ஒரு படி உயர்ந்தவர்களென்று சொல்ல வேண்டும். மேல் நாட்டு நாகரிகத்துக்குச் சிகரமாக விளங்கும் அமெரிக்காவில், இடறி விழுந்தால் கல்லூரிகளாம். ஆனுல், அந்தத் தேசத்தைப் போல், உலகில் எங்கும் தற்கொலைகளும், கொலைகளும், விவாகங்களும், கொள்ளைகளும் கிடையாதாம்! ஆகவே, எல்லாவற்றிலும் மேல்நாட்டாரை நாம் கண்மூடித்தனமாகப் பின்பற்றக்கூடாது. நமக்கு அநு

கூலமானவைகளேயே நாம் அநுசரிக்கவேண்டும். 'பெற்ற மனம் பித்து, பிள்ளே மனம் கல்'-என்பதிலிருந்தே தாயின் அன்பைப் பிள்ளேயால் போதுமான அளவு ஊகிக்க முடியாதென்று ஏற்படவில்லேயா? தாய் அன்பும் அதற்குரிய இரக்கமும் பெண்களிடம் இல்லாமல் புருஷர்களிடமா கரைபுரண்டு ஓடும்? சில விஷயங்களில் புருஷர்கள் குழந்தைகள் என்றே சொல்லவேண்டும்—துஷ்டக் குழந்தைகள் என்றும் சொல்லலாம். ஆனல் அவர்களேயும் தங்களுடைய தாய்மையால் பெண்கள் சீர்திருத்தி நல்வழிக்குக் கொண்டுவரக் கூடும். ஆகையால் உண்மையான கல்வியையும், அதனுல் உண்டாகும் பண்பையும் நம்முடைய பெண் மக்கள் அனைவரும் அடையும் படிச் செய்யவேண்டியது நமது கடமை. அப்படிச் செய்வதால், நம்முடைய சமூகம் மேன்மையடைவதோடு நிற்காமல், மேல் நாட்டு ஸ்திரீகளுக்கும் அது ஒரு வழி காட்டியாகி, உலகத்தைப் பங்கிட்டுக்கொள்ள வேண்டுமென்ற ஆத்திரத்தால், சதா சண்டை சச்சரவுகளேக் கிளப்பி விட்டுக்கொண்டு, மானிட சமூகத்துக்கே தீராத் துன்பத்தை விளேவிக்கும். அந்நாட்டு ஆண்களேயும் சீர்படுத்துவதுபோல் ஆகும்'' என்று விசாலாக்ஷி முடித்தாள்.

ஒரே மனதாகக் கூட்டத்திலிருந்தோர் எல்லாரும் கரகோஷம் செய்தார்கள்.

''என்ன இருந்தாலும் விசாலம் ரொம்ப புத்திசாலி தானடி'' என்ருள் பார்வதம்மாள் விமலாவினிடம். ஆனல் விமலா வாய் திறவாமல், 'சூள்' கொட்டி அவளே அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போகப் புறப்பட்டாள்.

''அவளும் வரட்டுமே!'' என்ருள் பார்வதம்மாள்.

''அவாள் கோஷ்டியே வேறு. நம்ப பாட்டிலே போகலாம், வா!'' என்று விமலா, அவள் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனுள்.

விமலா, அத்தை பர்வதம்மாள் எப்பொழுது ஊருக்குப் போவாள் என்று காத்துக்கொண்டு இருந்தாள். அவள் போனதும், பிரிந்து போகவேண்டுமென்று தலையணை மந்திரத்தை நாராயணனுக்குத் தீவிரமாக உபதேசம் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

ஆனால், நாராயணன் அதற்குச் சிறிதும் இடங் கொடுக்கவில்லை. விசாலாக்ஷியின்மீது வெறுப்பும் பகைமையும் அவளுக்குக் குமுறின. இதனால், மூளையும் கலங்கியதென்றே சொல்லவேண்டும்; விசாலாக்ஷியைப் பற்றி அந்நியரிடம் உதாசீனமாகப் பேசத் தொடங்கினாள்; எப்பொழுதும் இல்லாத ஒரு அசட்டுத் தைரியம் வந்துவிட்டது. வீட்டிலேயே, விசாலாக்ஷியை, 'சுழலி' 'மயக்கி' என்றெல்லாம், அவள் காதில் விழும்படி அவமதிக்க ஆரம்பித்துவிட்டாள். விசாலாக்ஷிக்கு ஒன்றும் புரியவில்லை; பொறுத்துப்பொறுத்துப் பார்த்தாள். ஆனால் தூஷணை அதிகரித்துக்கொண்டே போயிற்று. ஒரு நாள் காரணம் தெரியாமல் துக்கத்தோடு தவித்துக்கொண்டு இருக்கும்பொழுது விமலாவை அவள் பார்க்க நேர்ந்தது. அவ்வளவுதான்! அடுத்த க்ஷணமே, விமலா முகத்தை வேறு புறம் திருப்பிக்கொண்டு, "மயக்கற கண்ணுலே கொள்ளியை வைக்க!" என்று பகிரங்கமாகச் சொல்லிக் கொண்டே போனாள்.

விசாலாக்ஷி ஸ்தம்பித்துப் போனாள். கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று. "ஏன் திட்டுகிறாய்?" என்று கேட்க நாவு எழும்பவில்லை. அடிவயிற்றில் சகிக்க முடியாத சங்கடம் ஏற்பட்டுவிட்டது. தன் அறைக்குள் புகுந்து, உள்ளே தாழிட்டுக்கொண்டாள். அரைமணி நேரம் குலுங்கிக் குலுங்கி அழுதாள். பிறகு கண்களைத் துடைத்துக்கொண்டாள்; அழுகை அடங்கினாலும் பெருமூச்சு அடங்கவில்லை. இருந்தாற்போலிருந்து மறுபடியும் கண்ணீர் வழிய ஆரம்பித்துவிடும். இப்பொழுது, தன்

சிநேகிதிகள் யாராவது தேடிக்கொண்டு வந்துவிட்டால் என்ன செய்வதென்று பயந்தாள். வெகு கஷ்டத்தோடு தன்னைத் தானே சமாதானப் படுத்திக்கொண்டாள். துக்கத்தின் வேகம் தணிய, பற்பல யோசனைகள் அவள் மனத்தில் உதித்தன. என்ன பைத்தியக்காரத்தனம்! தன் வைராக்கியமெல்லாம் எங்கே போயிற்று? இது தானு தன்னுடைய தைரியம்? ஏதோ ஒரு அசடு பிதற்றினுல், தான் ஏன் மனத்துக்கு அவ்வளவு கஷ்டத்தைக் கொடுக்கவேண்டும்? அவளுக்கு இருந்த அதிகாரம் தனக்கும் அந்த வீட்டில் இல்லையா? அவளைத் திருப்பித் தூஷிப்பதற்கு எத்தனை நாழிகையாகும்? தான் ஏழை என்றதால் அல்லவா அவளுக்கு அவ்வளவு துணிச்சல்! ஆனுல் அவள் எப்படி ஏழையாவாள்? உடலை விற்றுத்தான் ஏழைத்தனத்தை மாற்றிக்கொண்டாகி விட்டதே? நேருக்கு நேராய், அவளைக் கண்டித்துக் கேட்கத் தைரியமில்லாமல், இப்போது உதைத்துக்கொள்வதில் என்ன பயன்? இதுவரையில் அக்கா சுசீலாவினிடம் விமலாவின் தூஷணையைக் குறித்து அவள் சொல்லவில்லை. தானுகவே அது மாறிவிடுமென்று நினைத்தாள். ஆனுல் அது சுருதிக்கு மீறிப் போய்விட்டபடியால், இனிமேல் சும்மா இருக்கமுடியாது. அக்காவோடு கலந்து பேசி தகுந்த வழி தேடவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டாள். ஒரு முரட்டுத் தைரியம் வந்துவிட்டது. ஹால் புறமாக விமலா வந்ததைப் பார்த்து, சரேல் என்று எழுந்து, தன் அறைக் கதவை உடைத்துப் போடுவது போல்'படார்' என்று மூடிக்கொண்டு வெளியே வந்தாள். முதலில், சுசீலா வீட்டுக்குப் போய்ச் சங்கதிகளைச் சொல்லவேண்டுமென்று நினைத்தவள், மனத்தை மாற்றிக் கொண்டு, சுசீலாவையே தன் வீட்டுக்கு அழைத்து நிர்ப்பயமாகவும் சம்பாஷணை எல்லாம் விமலாவின் காதில் விழும்படியும் சொல்ல வேண்டுமென்று தீர்மானித்துக்

கொண்டு கொல்லைப்புறத்திலிருந்த முனியம்மாளைக் கூப்பிட்டாள்.

"அக்காவைப் போய்க் கையோடே அழைச்சிண்டு வா. ரொம்ப அவசரமான சங்கதியாம், எந்த வேலையாய் இருந்தாலும் அப்படியே போட்டுட்டு வரச் சொன்னதாகச் சொல்லு—ஆமாம்!'' என்று அவள் உரக்கக் கூவியது, முனியம்மாளுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது.

அது விமலாவுக்கும் ஒருவித பயத்தை உண்டாக்கவே அவள் மாடி ஏறினாள்.

# 21

## அலட்சியம்

சுசீலா வீட்டுக்குள் நுழையும்பொழுதே, விசாலாக்ஷி கூச்சல் போட ஆரம்பித்தாள்: ''அக்கா! என் மயக்கற கண்ணுலே கொள்ளியை வைக்கணுமாம்! நான் சுழலியாம்—அப்படீன்னால் என்ன, அக்கா?''

அவள் பதற்றத்தை உணர்ந்த சுசீலா, ''என்ன, விசாலம்! ஏன் இவ்வளவு படபடப்பு? மெல்லச் சொல்லேன், சமாசாரம் என்ன?'' என்று கேட்டாள்.

''அதான் சொன்னேனே, அக்கா! என் கண்ணுலே கொள்ளி வைக்கணுமாம்!'' என்று அவள் பேரைச் சொல்லாமல் மாடியைக் காட்டினாளே ஒழிய, குரலின் ஒலியும் வேகமும் மாத்திரம் குறையவில்லை.

''நீ இப்படி எல்லாம் கத்தினால், நான் கேழ்க்கமாட்டேன். நீ முதல்லே உள்ளே வந்து உட்காரு. நரம்பு ரொம்ப பலஹீனமாயிடுத்து. நீ ஏதாவது 'டானிக்' சாப்பிடணும்'' என்று சுசீலா, அவளை அன்புடன் கையைப் பிடித்துக் கொண்டுபோய் அவள் அறையில் உட்கார வைத்தாள். அதன்மேல், மறுபடியும் விசாலாக்ஷிக்கு அழுகை வந்துவிட்டது.

"நீ புது விசாலமோ, பழைய விசாலமோ? காரிய தரிசி ஆயிடணும்னு ஆசைப்படுகிறவள், இவ்வளவு கோழையாவா இருப்பது? ஐயோ, அசடே!'' என்று சுசீலா அவளைத் தட்டிச் சமாதானப்படுத்தினாள்.

இதுவரையிலும் அவர்களுடைய சம்பாஷணை விமலா வுக்கு நன்றாகக் கேட்டது. இதற்குப் பிறகு அவர்கள் தாழ்ந்த குரலில் பேசிக்கொள்ளவே, எவ்வளவு உற்றுக் கேட்டும் விமலாவுக்கு ஒன்றும் தெரியவில்லை. அரை மணி நேரத்துக்கு அப்புறம், சுசீலா விசாலாக்ஷியைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனாள். ஆனால் இப்பொழுது விமலாவுக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை. நிச்சயம் விசாலாக்ஷி சகலத்தையும் சொல்லி யிருப்பாள்; அதில் சந்தேகம் இல்லை. சுசீலா லேசானவள் அல்ல. அவளுடைய நெஞ்சு தைரியமும் அவளும்!— அவள் சும்மா இருக்கமாட்டாள். தன் புருஷனிடத்தில் ஒன்றுக்கு மூன்றாகச் சொன்னாலும் சொல்லுவாள். இல்லை, தன்னையே மறித்துச் சண்டைக்கு இழுத்தாலும் இழுக்கலாம். இனி, அந்த வீட்டில் தங்க முடியாது. விசாலாக்ஷிக்கும் துணிவு அதிகரித்துவிட்டது. அவர் களுடைய முகங்களைப் பார்த்துக்கொண்டு அங்கே எப்படி இருப்பது? அந்த நிமிஷத்திலேயே, தன் தாய் வீட்டுக்கு ஓடிப்போக வேண்டும்போல் அவளுக்கு இருந்தது. இவ் வளவு கஷ்டங்களுக்கும் தன் கணவன்தான் காரணம். அவர் ஏன் புது பங்களாவைச் சீர்படுத்தி அங்கே போகக் கூடாது? இஷ்டப்பட்டால், பத்துத் தினங்களுக்குள் அங்கே குடித்தனம் போடலாமே! அந்த வீட்டிலேயே எல்லாரும் ஒன்றாக அழவேண்டுமென்று ஏன் அவருக்கு அவ்வளவு அக்கறை? இவ்வாறு விமலா மனத்தைக் குழப் பிக்கொண் டிருந்தபொழுது, கோயம்புத்தூரிலிருந்து அவள் தகப்பனாரின் பிரதம குமாஸ்தா விசுவநாத ஐயர் வந்து சேர்ந்தார். விசுவநாத ஐயருக்கு அறுபது பிராயத்

துக்குமேல் இருக்குமே ஒழிய, குறையாது. கோபால ஐயர் வக்கீல் தொழில் ஆரம்பித்தது முதல் அவரிடமே வேலை பார்த்து வந்தவர். ஆதலால் விமலாவைப் பிறந்ததிலிருந்து, அவருக்குத் தெரியும். அவர் எடுத்து வளர்த்த குழந்தை அவள். கோபால ஐயருடைய அப்பீல் வழக்குகளை, அவருடைய நண்பரான மற்றொரு வக்கீலிடம் ஒப்படைக்க, அவர் அடிக்கடி சென்னைக்கு வருவார். வரும்போதெல்லாம், 'மாப்பிள்ளை' டாக்டர் நாராயணன் கிருகத்தில்தான் தங்குவது வழக்கம். இப்பொழுது அவரைக் கண்டதும், விமலாவுக்குக் கடவுளே பிரத்தியட்சமானதுபோல் இருந்தது. யோக க்ஷேமங்களை விசாரித்துவிட்டு, "வந்த வேலை ரொம்ப நாள் ஆகுமா, மாமா?" என்று கேட்டாள்.

"நாளையோடு முடிஞ்சுடும், அம்மா. நாளைக்கு ராத்திரி வண்டிக்குப் புறப்பட வேண்டியதுதான்—ஏன்?"

விமலா எதையோ சொல்ல வந்தவள் வார்த்தையை நிறுத்திக்கொண்டாள். "சும்மாதான் கேட்டேன், மாமா!" என்று அவள் மழுப்பினாள். சுயநலத்தால், அவளுடைய வெகுளித்தனம் கபடமாக மாறியது.

அன்றிரவு, விமலா தன் கணவனோடு, பங்களாவைத் துப்புறவு செய்து தனிக் குடித்தனம் போடும்படி பிரமாதமாக வாதாடினாள். ஆனால், அவன் வழக்கம்போல், அதைச் சட்டை செய்யாமல், கல்லுப்பிள்ளையார்போல் உட்கார்ந்திருந்தான்.

"இதென்ன எழவாய் இருக்கே! என்னைக் கண்டால் உங்கள் சித்திக்கு எரிச்சல், அந்த சுசீலாவுக்கு அதுக்கு மேலே! சதா இந்த வீட்டுலே அவளுக்கு என்ன வேலைதான் இருக்குமோ? ஜெயிலுலே அடைபட்டதுபோல் நான் எத்தனை நாழி விழுந்து கிடப்பேன்? இப்படி ஏன் என் பிராணனை வாங்கறேன்? இது என்ன சுகம் எனக்கு வேண்டியிருக்கு? இரண்டு பேரும் என்னை விழுங்கி

விடுவதுபோல் பார்க்கிறார்கள். அவர்களைக் கண்டாலே எனக்குப் பயமாய் இருக்கு. அவாள் முகத்தைப் பார்த் துண்டு நான் எத்தனை நாள் இருப்பேன்?'' என்று தலை யில் அடித்துக்கொண்டாள். நாராயணன் பேசவில்லை.

"இதோ பாருங்கோ! என்னாலே கஷ்டத்தைச் சகிக்க முடியல்லை. நான் கோயம்புத்தூருலேயாவது கொஞ்ச காலம் இருந்துட்டு வரேன். அதுக்குள்ளே, உங்களுக்கு மனசு இரங்கி, தனியாய்ப் போனால்....''

"தனியாய்ப் போகவே முடியாது. அந்த எண்ணத்தை விட்டுடு!''

"அப்படியானால், இந்த ஆத்துலே நான் இருக்கவே மாட்டேன். இங்கே இருக்கிறதைக் காட்டிலும், எங்கே யாவது போய்ப் பிராணனை விடலாம்'' பிறகு எதையோ நினைத்துக்கொண்டவள்போல், "என்னைக் காப்பாத்தற துக்கு, எங்க அப்பா அம்மாவுக்கு சக்தி இருக்கு!'' என்றாள்.

நாராயணன் முகத்தில் தீப்பொறி பறந்தது! முறைத்துப் பார்த்தான். பிறகு, கோபத்தை அடக்கிக் கொண்டு, "இந்தத் துர்ப்புத்தி எல்லாம் உனக்கு யார் போதனை செய்தது?'' என்று கேட்டான்.

"எனக்கு ஒருத்தர் போதனை செய்யணுமா? எனக்குக் கண் இல்லையா? ஆனால் என் கண் எதற்குப் பிரயோஜனம்? எல்லாரையும் போல உங்களை மயக்க முடியறதா?''

"சீ! வாயை மூடு!'' என்றான் நாராயணன் சீறி எழுந்திருந்து. பிறகு, ஒரு கித்தான் சாய்வு நாற்காலியை இழுத்துக்கொண்டு போய், மொட்டை மாடியில் போட்டு, உட்கார்ந்துகொண்டு அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

மறுநாள் மாலை சுமார் நாலு மணி இருக்கும். நாராயணன் வெளியே புறப்படும்பொழுது, சமையற் காரனை அழைத்து, தான் ஒரு 'டின்னரு'க்குப் போவதாக

வும், திரும்பிவரப் பத்து மணிக்குமேல் ஆகும் என்றும், தனக்காக யாரும் காத்திருக்க வேண்டாமென்றும் சொல்லிவிட்டுப் போய்விட்டான். தன்னை மதிக்காமல் சமையற்காரனிடம் சொன்னது விமலாவுக்கு மனத்தை உறுத்தியது. ஆனால், மற்றொரு விஷயத்துக்கு அது சௌகரியமாகவும் இருந்தது. ஆயினும், மன நிம்மதி இல்லாமல் அவள் தவித்தது நன்கு புலப்பட்டது; சாய்வு நாற்காலியில் சிறிது நேரம் சாய்ந்துகொண்டாள். மொட்டை மாடியில் சிறிது நேரம் உலாவினாள். திடீரென்று தன் பெட்டியைத் திறந்து இரண்டு வருஷங்களுக்கு முன் தன் கணவன் எழுதிய கடிதங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். பிறகு ஒரு சிறு காகிதத் துண்டைக் கிழித்து, நுணுக்கி நுணுக்கி நான்கு வரிகளை எழுதி அதைத் தன் கணவனுடைய மேஜையின்மீது வைத்து, பறந்து போகாமல் அதன்மேல் ஒரு பளுவையும் வைத்தாள். மறுபடியும் தன் பெட்டியைத் திறந்து, சில துணிமணிகளை அதில் அடைத்தாள். பிறகு தெருப் பக்கமாக நின்றுகொண்டு கண் கொட்டாமல் விசுவநாத ஐயரின் வரவை ஆத்திரத்தோடு எதிர்பார்த்துக்கொண்டு நின்றாள். மணி ஆறாகிவிட்டது. அப்பொழுதுதான் விசுவநாத ஐயர் தெருவில் அவசர அவசரமாய் வந்து கொண்டிருந்தார்.

"ஏன் மாமா, இத்தனை நாழி? இன்னிக்கு ஊருக்குப் போகல்லியா?" என்று, அவர் தெருவிலிருக்கும்போதே அவள் ஆத்திரத்தோடு கேட்டாள்.

"கட்டாயம் போகணும், அம்மா!" என்று சொல்லிக் கொண்டே, கிழவர் இரைக்க இரைக்க மேலே வந்தார். "அந்த டைப்பிஸ்டு ஒரு அஸமஞ்சம். அவனாலேதான் லேட் ஆயிடுத்து. சரி, நான் கை, கால் அலம்பிக்கொண்டு கிளம்ப வேண்டியதுதான். ஏழேகாலுக்கு வண்டி

யாச்சே!'' என்று விசுவநாத ஐயர் வருத்தப்பட்டுக் கொண்டு, சட்டையை எடுத்தார்.

"உங்களோடே நானும் வரப்போறேன், மாமா. எனக்கு அம்மாவைப் பார்க்கணும்போலே இருக்கு. அவசரப்படாதங்கோ! 'போன்' பண்ணி டாக்ஸியை வரச் சொல்றேன். ஸ்டேஷனுக்குப் போகப் பதினைஞ்சு நிமிஷம் இருந்தால் போதும்'' என்று டெலிபோனை எடுத்து ஒரு டாக்ஸிக்காரனுக்குத் தகவல் சொல்லி விட்டாள்.

''ஆமாம், அம்மா! மாப்பிள்ளை ஆத்துலே இல்லை போலிருக்கே....'' என்று அவர் இழுத்தார்.

''அதனாலே என்ன? அவருக்குத் தெரியும்.''

"நான் அவரண்டை ஒரு வார்த்தை சொல்லாத போனால் ஏதாவது எண்ணிக்கப் போறார்?"

"அவர் 'டின்னரு'க்குப் போயிருக்கார், மாமா. வரத்துக்கு ராத்திரி பத்து மணிக்கு மேலே ஆகும். அதுவரையிலும், ரயில் வண்டி நிற்குமா?—உங்களை ஒண்ணும் சொல்லமாட்டார், பயப்படாதேங்கோ'' என்று விமலா தைரியம் சொன்னதன் பேரில், விசுவநாத ஐயர் விரைவில் பிரயாணத்துக்குத் தயாரானார். விமலா என்னவோ ஐந்து மணியிலிருந்தே சித்தமாய் இருந்தாள். விசாலாக்ஷி சுசீலாவோடு வழக்கம்போல் சங்கத்துக்குத் 'தொலைந்து' போயிருந்தாள். மாமனார் ஜானகிராம ஐயர், குழந்தை வத்ஸலாவை மடியில் வைத்துக்கொண்டு ஆரஞ்சுப் பழத்தை உரித்து கொடுத்துக்கொண் டிருந்தார். விமலா, தனக்கும்-தன் புருஷனுக்கும் பிரத்தியேகமாய் இருந்த அறையைப்பூட்டி,சாவியை மாமனாருக்கு அருகில்வைத்து, நமஸ்காரம் செய்து, தான் ஊருக்குக் போய்ச் சீக்கிரமே திரும்பி வருவதாகச் சொன்னாள். ஜானகிராமையர் 'திரு திரு' என்று விழித்தார். ''திடீர்னு, ஊருக்குப் போறதுக்கு என்ன விசேஷம், அம்மா? யாருக்காவது

உடம்பு சரியாய் இல்லையா என்ன? நாராயணன் வரல்லையா?'' என்று கேட்டார்.

''இப்போ நான் மட்டும்தான் போறேன். அம்மாவைப் பார்த்துட்டு வரணும். அவருக்கும் தெரியும்'' என்று விமலா ஒரு போடு போட்டாள்.

''அவனுக்குத் தெரியும்னால் சரி, போன உடனே க்ஷேம சமாசாரத்துக்கு ஒரு கடுதாசு போடு, அம்மா!'' என்று அவர் கேட்டுக்கொண்டார்.

''ஆகட்டும்'' என்று தலையை அசைத்து, விமலா விசுவநாத ஐயருடன் வண்டியில் ஏறிக்கொண்டாள். டாக்ஸியும் ஸ்டேஷனுக்குக் கனவேகமாய்ச் சென்றது.

விமலா ஊருக்குப் போன சமாசாரம் தெரிய வந்ததும் விசாலாக்ஷிக்கு ஆச்சரியமும், பயமும் உண்டாயின. அவளும் சுசீலாவும் அதைப்பற்றி வெகு நேரம் பேசினார்கள்.

''என் மேலே பழியைப் போட்டுட்டு போனாளோ என்னவோ!'' என்று விசாலாக்ஷி நடுங்கினாள்.

''ஆனாலும், நீ இவ்வளவு பயந்தாங்கொள்ளியாய் இருக்கப்படாது, விசாலம். உன் மேலே போடறதுக்கு என்ன பழி இருக்கு? அவாளுக்குள்ளே என்ன சண்டையோ... யார் கண்டாள்? அவள் போனது நாராயண அண்ணாவுக்குத் தெரியும்னு எனக்குத் தோணல்லை.''

''எனக்கும் அப்படித்தான் தோண்றது அக்கா! பாவம்! உங்கள் மாமா நிஜம்னு நம்பிட்டார். 'டாக்டர்' வந்தப்புறம்னா, எல்லாம் தெரியணும்!''

''அண்ணா எப்போ வரானோ? நீ பாட்டுலே படுத்துண்டு தூங்கு. வீணாய்ப் பயந்து சாகாதே—அது ஒரு அசட்டுக் கழுதை! போயும் போயும் அண்ணா அவளைப் பிடிச்சானே! பப்பள பளபளன்னு, வெள்ளை வெளேர்னு இருக்கிறதைப் பார்த்து மயங்கிவிட்டான் போலிருக்கு!''

''சரி, போதும். நீயும் உன் வாயும்! உனக்குத்தான் எந்த வேளையிலே எதைச் சொல்றதுன்னு தெரியாதே!''

"ஆமாம், எல்லாம் தெரிஞ்சுதான் நீ இப்படி நடுங்குகிறயாக்கும்? பிறந்தாத்துப் பணத் திமிர் அவளை அப்படிச் செய்யச் சொல்றது. அதுக்காக, நீ ஏன் அவஸ்தைப் படறே? எனக்குத் தூக்கம் வரது, அம்மா. நீயும் போய்ச் சமர்த்தாய்த் தூங்கு'' என்று சுசிலா அவளை அன்புடன் தட்டிக் கொடுத்துவிட்டுத் தன் வீட்டுக்குப் போனுள்.

விசாலாக்ஷி படுத்துக்கொண்டாளே ஒழிய, தூக்கம் பிடிக்கவில்லை: விமலா, நாராயணனுக்குத் தெரிந்து போனுளா என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆத்திரம், தேள் விஷம்போல் ஏறிக்கொண்டே போயிற்று. கடிகாரம் பத்து அடித்தது. அவள் தலையின் மேல் அடிப்பதுபோல் இருந்தது. கால் மணி நேரத்துக் கெல்லாம் மோட்டார் வந்து வீட்டு வாசலில் நிற்கும் சத்தம் கேட்டது.

ஜானகிராம ஐயருக்கு எப்பொழுதுமே தூக்கம் கிடையாது. கூட விசாரமும் சேர்ந்தால் கேட்கவேண்டியதில்லை. அவசரத்தில், தூண்மீது சிறிது இடித்துக் கொண்டு அவர் கதவைத் திறந்தார்.

விசாலாக்ஷி பயத்தோடு, ஹாலில் ஒரு மூலையில் நின்ருள். நாராயணன் வண்டியை 'ஷெட்'டில் நிறுத்தி 'ஷெட்'டைப் பூட்டிக்கொண்டு வந்தான்.

''விசுவநாத ஐயரோடு விமலாவைக் கோயம்புத்தூருக்கு அனுப்பிச்சுட்டேன். யாருக்கோ உடம்பு சரியாய் இல்லை போலிருக்கு—''

"என்னது...!'' என்று நாராயணன் சீறினன்.

அதிலிருந்தே, விசாலாக்ஷி உண்மையைக் கிரகித்துக் கொண்டாள்.

"உங்கிட்டே சொல்லியிருக்கேன்னு சொன்னளேடா, அப்பா!'' என்று தந்தை கஷ்டப்பட்டபொழுது,

நாராயணன் வேகத்தை அடக்கிக்கொண்டு, "ஆமாம், ஆமாம். ஆனால், என்ன அவ்வளவு அவசரம்?—சரி— உனக்கு என்ன உடம்பு, சித்தி? கண்ணெல்லாம் சிவந்து கிடக்கே. ஒருத்தரை வழிக்குக் கொண்டுவரவே பிராணன் போறது, நீ லோகத்தையே மராமத்து பண்ணணுமிங் கறே!" என்று சிரித்தானே தவிர, அது நடிப்பென்று விசாலாக்ஷிக்கு நன்ருய்த் தெரியும். பிறகு, "ஒரு மாத்திரை தரேன், சாப்பிடேன். நன்ருத் தூக்கம் வரும்" என்ருன்.

'வேண்டாம்' என்பதுபோல், விசாலாக்ஷி தலையை அசைத்தாள். அவன் முன் அவள் அழாதிருந்தது தெய்வச் செயல்.

நாராயணன் தகப்பனரிடமிருந்து சாவியை வாங்கிக் கொண்டு மாடிக்குச் சென்ருன். தன் அறையைத் திறந்தான். மின்சார விளக்கைப் போட்டு அறை முழுவதையும் ஒருமுறை பார்வையிட்டான். மேஜையின் மீது இருந்த காகிதத் துண்டு கண்ணில் பட்டது. தாவி அதை எடுத்துப் படித்தான். கோபத்தால் கொதித்துக் கொண்டிருந்த அவன் முகத்தில் மின்சார விளக்கின் உஷ்ணம் நெருப்பில் எண்ணெயை ஊற்றுவதுபோல் இருந்தது. கை, காகிதத் துண்டைக் கசக்கியது; நாற்காலியின்மீது உட்கார்ந்தான். கசக்கிய காகிதத்தைச் சுருக்கங்கள் நீங்கப் பிரித்து மறுபடியும் படித்தான்.

சொல்லாமல் போகும்படி அவ்வளவு அலட்சியமா? என்ன அசம்பாவம்? தாயின் 'பிடாரி' குணத்தில் பெண்ணுக்கும் பாதி இருக்கத்தான் இருக்கிறது. அந்தக் காகிதத் துண்டை எறியப்போனன். பிறகு அதைப் பத்திரப் படுத்த வேண்டுமென்ற எண்ணம் வந்தது. ஆனல் எரிச்சல் மட்டும் அடங்கவில்லை. மறுபடியும் அதைப் படித்தான். "இங்கே இருந்தால் என் உயிருக்கே ஆபத்து நேரிடும்போலிருக்கிறது. எனக்கு என்ன என்னவோ

எண்ணங்கள் வருகின்றன. நீங்களும் கொஞ்ச காலம் வந்து என்னுடன் கோயம்புத்தூரில் இருக்கக்கூடாதா? நான் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லையா? என் துக்கத்தை நீங்கள் ஏன் அறியமாட்டேன் என்கிறீர்கள்? பங்களாவை 'ரிப்பேர்' செய்வதற்கு எத்தனை நாழிகை யாகும்? என்னைச் சுகமாய் வைக்கவேண்டியது உங்க ளுடைய கடமை அல்லவா? அன்பில்லாத வாழ்வு எனக்கு வேண்டாம். இனி இந்த ஜன்மத்தில் தினம் சித்தி முகத் தைப்பார்த்துக்கொண்டு, ஒரே வீட்டில் நான் இருக்க மாட்டேன். இது ஸத்தியம்!''

நாராயணனுக்கும் என்ன செய்வதென்று தெரிய வில்லை. உடனே கோயம்புத்தூரில் போய்க் குதிக்க வேண்டுமென்று இருந்தது. அந்தக் காலத்தில், விமானப் பிரயாணம் கிடையாது. அவனுடைய மோட்டார் வண்டி யும் தூரப் பிரயாணத்துக்கு லாயக்கு இல்லாமல் இருந்தது. மறுநாள் மாலை ஏழேகால் மணி வரையில் எப்படிக் காலத்தைத் தள்ளுவது? அந்த க்ஷணமே அவளைச் சென்னைக்கு இழுத்துக்கொண்டு வரவேண்டும்போல் இருந்தது. ஊரார் என்ன நினைப்பார்கள். சொல்லாமல் ஓடும்படி யார் என்ன தப்பைச் செய்துவிட்டார்கள். ''இடியெட், இடியெட்'' என்று முணுமுணுத்துக் கொண்டு, காகிதத்தை அவன் தன் பெட்டியில் பத்திரப் படுத்தினான்.

பிறகு, சிறிது நேரம் படுக்கையில் படுப்பதும், சிறிது நேரம் மொட்டை மாடியில் உலாவுவதுமாய் அவன் இரவை ஒரு யுகமாகக் கழித்தான்.

## 22

# தாய்க்கு ஏற்ற மகள்

காலையில், ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு, நாராயணன் வழக்கம்போல் தன் வேலைகளைக் கவனித்தான்; ஆஸ்பத்திரிக்கும் போனான். அங்கேயும், யந்திரம்போல், மனக்குழப்பத்தைச் சட்டை செய்யாமல் தன் கடமைகளைச் செய்தான். கோயம்புத்தூரில் ஒரு தினத்துக்கு மேல் தங்க அவனுக்கு இஷ்டமில்லாவிடினும் எதற்கும் அநுகூலமாயிருக்குமென்று, இரண்டு தினங்களுக்கு 'லீவ்' வாங்கிக்கொண்டான். பிறகு, தினம் அத்தியாவசியமாய்க் கவனிக்க வேண்டிய தன் நோயாளிகளில் சிலரைத் தன் நண்பன் ஒருவனைப் பார்த்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டு, மாலை ஐந்து மணி வரையிலும், சிரம பரிகாரம் செய்து கொள்ள வேண்டுமென்ற உத்தேசத்தோடு, அவன் தனிமையாய்ப் படுத்திருந்தான். அவன் ஊருக்குப் போகும் தகவல் முன்னதாகவே தெரிவிக்கப்பட்டதால், அவனுக்கு இஷ்டமான சாப்பாடு சீக்கிரமாகவே தயாரிக்கப்பட்டது. ஜானகிராம ஐயரும், வழக்கத்துக்கு விரோதமாய், ஐந்து மணிக்கே ஆபீஸிலிருந்து திரும்பி வந்துவிட்டார். எப்பொழுதும் போல், 'வாய்விட்டு'ப் பேசாமல் நாராயணன் வார்த்தைகளைக் கணக்கிடுவது போல் பேசினான். விசாலாக்ஷியின் முகத்திலும் ஒரே சோகம் குடிகொண்டிருந்தது. புறப்படும்பொழுது, "வரபோது, விமலாவைக் கட்டாயம் அழைச்சிண்டு வந்துடுங்கோ" என்றாள் விசாலாக்ஷி வணக்கத்துடன்.

"அதுக்குத்தானே போறேன், சித்தி—"

அப்பொழுது எதிர் வீட்டிலிருந்து சுசீலாவும் வரவே, அவன் அவளைப் பார்த்துச் சொன்னான்: "சித்தி முகத்தைப் பாரேன்! எங்கேயோ எல்லாத்தையும் பறிகொடுத்தவளாட்டம் இல்லை? —நீ ஏன் மனசுக்கு இவ்வளவு கஷ்

டத்தைக் கொடுத்துக்கறே, சித்தி? உலகத்துலே மூளை கெட்டதுகள்தான் ஜாஸ்தி. அவாளுக்காக நாம் எவ்வளவு அழறது? சுசீலாவோடே இத்தனை நாள் பழகியும் உனக்குத் தைரியம் வரல்லையே - சுசீலா, சித்தியைப் பார்த்துக்கோ!'' என்று சொல்லிவிட்டு, அவன் போய்விட்டான். ஜானகிராம ஐயர், விஷயம் தெரியாதவராய் விழித்தார்.

ஸ்டேஷனிலிருந்து வாடகை மோட்டார் வண்டியில் நாராயணன் மாமனார் வீட்டுக்கு வந்தபொழுது, வீடு நிச்சப்தமாய் இருந்தது. மேடையில் கட்சிக்காரர்கள் கும்பலும், டைப் அடிக்கும் சத்தமும்—எல்லாம் ஒரே சந்தடியாய் இருக்கும் இடம் காலியாய்க் கிடந்தது. வாசலில் இருக்கும் வேலைக்காரனையும் காணோம். வண்டிக்காரனுக்குச் சத்தத்தைக் கொடுத்துவிட்டுக் கீழே இறங்கி வண்டியிலிருந்த சின்ன 'ஸூட் கேஸை'த் தானே எடுத்துக்கொண்டு உள்ளே நுழையும் சமயத்தில் தெருப்பக்கத்திலிருந்து வேலையாள் ஓடி வந்து, ''இப்படிக் கொடுங்க'' என்று அதை வாங்கிக்கொண்டான். ''என்னடா, மாடியெல்லாம் காலியாய் இருக்கு?'' என்று நாராயணன் அவனைக் கேட்டான்.

''நேத்துக் காலையிலே, எல்லாரும் திருப்பூர் போயிட்டாங்க, சாமி. பெரிய கேஸு நடக்குது. அந்தக் கவுண்டருக்கு லச்ச லச்சமாயிருக்குது. இன்னிக்கி, சாயந்தரம் எல்லாரும் வந்துட மாட்டாங்க..'' என்று சொல்லிக் கொண்டே, அவன் உள்ளே துரிதமாய்ச் சென்று, முற்றத்திலிருந்த தருமாம்பாள் அம்மாளுக்குத் தகவல் தெரிவித்தான். உடனே, அந்த அம்மாள், மாப்பிள்ளையை எதிர் கொண்டு, ''வாங்கோ, வாங்கோ'' என்று முக மலர்ச்சியுடன் வரவேற்றாள். ஆனால் நாராயணன் பதில் சொல்லவில்லை. அவளுடைய ஆனந்தம் அவனுக்குப் புரியவில்லை. அது எரிச்சலைத்தான் உண்டாக்கியது. எதற்காக அவ்வளவு சந்தோஷம்; தன் மகளாகத் தொட்டு அவ்வளவு

மேன்மையாக நடந்துகொண்டாள் என்ரு? தன் உள்ளத்தி லிருந்த கோபத்தையும் அதிருப்தியையும் எள்ளளவும் மறைத்துக்கொள்ளாமல், "விமலா எங்கே?" என்று கடுப் புடன் கேட்டான்.

"உட்காருங்கோ. ஸ்நானம் பண்ருள், இதோ வந்து டுவாள். போய்ச் சொல்றேன்—அடே முத்து, காப்பி கொண்டுவந்து கொடுடா" என்று அவள் நகர்ந்த பொழுது, "காப்பி ஒண்ணுதான் குறைவாய் இருக்கு" என்று முணுமுணுத்துக்கொண்டு, நாராயணன் அந்த ஹாலில் கிடந்த ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். கொண்டுவந்த காபியைத் திரஸ் கரிக்காமல் நிதானமாய்ப் பருகிக்கொண்டு, நாராயணன் யோசித்தவாறு இருந்தான். இதற்குள், தருமாம்பாள் அம்மாளும் திரும்பி வந்து, "ரெண்டே ரெண்டு நிமிஷத் துக்குள்ளே விமலா வந்துவிடுவாள் - எல்லாரும் சௌக் கியந்தானே?" என்று அசட்டுப் புன் சிரிப்புடன் விசா ரித்தாள். அவள் முகத்தில் அநுதாபமோ, அல்லது மற்ற எந்த விதமான வருத்தக் குறியோ இல்லாததைக் கண்டு, நாராயணனுக்குக் கோபம் பீரிட்டுக்கொண்டு வந்தது. ஆனால், அதை அடக்கிக்கொண்டு பேசாமல் இருந்தான் ஆனல் மறுபடியும் அவள், "என்ன யோசிக்கிறேள்?" என்று கேட்டபொழுது, சுபாவமாகவே அவன் சிறிது முரடனுகையால், அவன் சினம் கரைபுரண்டுவிட்டது. "ஒண்ணுமில்லே; உங்கள் பெண் இருக்கிற இடத்திலே, சௌக்கியம் எப்படி யிருக்கும்னு யோசிக்கிறேன்!" என்ருன்.

தருமாம்பாள் பதில் சொல்லத் தெரியாமல் விழித் தாள். அகம்பாவமே உருவெடுத்தவள் அவள். இதுவரை யில் யாரும் அவளை இப்படி நேருக்கு நேராகத் துணிந்து அவமதித்ததில்லை. கோபத்தினுல் வாயில் வார்த்தை வர வில்லை. "நீங்கள் என்னத்தைக் கண்டுட்டேள்?—எனக்கு

ஒரு சொட்டு, என் பெண்ணுக்கு ஒரு சொட்டா? நீங்கள் சொன்னதுக்கு என்ன—என்ன அர்த்தம்? நீங்கள் இப்போ அதைச் சொல்லித் தீரணும்!'' என்று இடது கையில் வலது கையால் குத்திக்கொண்டு, கோபாவேசத்தோடு குதித்தாள்.

''என்னத்தைச் சொல்றது. புருஷனுக்குத் தெரியாதே வீட்டை விட்டு வந்ததிலிருந்தே, பெண்ணைத் தாயார் வளர்த்த லக்ஷணம் தெரியல்லையா? புருஷனுடைய மானம் — அவமானத்தை அவள் கவனிக்கவில்லையே! நாலுபேர் என்ன எண்ணிப்பாள்! கூத்தாடிகளைவிடக் கேவலமான்னு போச்சு!''

''ஜாஸ்தி பேசாதங்கோ! ஆமாம், சொல்லிப்பிட்டேன். நாங்கள் தொம்பம் கூத்தாடிகளானால், நீங்கள் என்ன? உங்கள் முதுகு உங்களுக்குத் தெரியல்லை. வீட்டை விட்டு வெளியிலே துரத்தாதே, அந்த எச்சிக்கலைக் கழுதை!—அந்த மானங்கெட்ட கழுதையோடே கொட்டம் அடிச்சுண்டு—''

''சீ! வாயை மூடுங்கோ!'' என்று நாராயணன் கர்ஜித்தான். ''எனக்கு வர கோபத்துக்கு—'' என்று பல்லைக் கடித்துக்கொண்டு அவன் கையை மடித்தான்.

''என்ன பண்ணிடுவேள்! என்ன பண்ணிடுவேள்?'' என்று எகிறிக்கொண்டு அவன் சமீபத்தில் வந்து, ''நீங்கள் சொல்றபடியெல்லாம் ஆடறத்துக்கு, நாங்களும் அதைப்போல் தரித்திரப் பீடை இல்லை!'' என்று இரைந்தாள். இந்தக் கூச்சலைக் கேட்டு, ''ஐயோ, அம்மா சும்மா இரேன்!'' என்று புடைவையைச் சுற்றிக்கொண்டு விமலா ஓடி வந்தாள். நாராயணன் கோபத்தை அடக்க, உதட்டைத் துண்டித்து விடுவதுபோலக் கடித்துக்கொண்டிருந்தான். அவன் கை தருமாம்பாளின் பற்களை உதிர்க்கத் துடித்துக்கொண்டிருந்தது. நடுங்கிக்கொண்டிருந்த விமலாவைக் கண்டதும், அவன் அவளை ஏற இறங்கப்

பார்த்தான். ''பேஷ்! நீ இவ்வளவு பெரிய மனுஷின்னு, எனக்கு ஆதியிலேயே தெரியாமல் போச்சே! தாய்க்கு ஏத்த பெண்தான்.—சரி, ஒரே வார்த்தை: நீ என்னோடு இப்போ புறப்படறயா, இல்லையா?''

தருமாம்பாள் குறுக்கே வந்தாள். ''அவள் வர முடியாது! அவள் அப்பா வந்து, இது ரெண்டுலே ஒண்ணு ஸெட்டில் ஆகணும்—தாயிக்கு ஏத்த பெண்ணு? —எவ்வளவு கொழுப்பு! எவ்வளவு அலட்சியம்! தாயைப் பத்தி உங்களுக்கு என்ன தெரியும்?—குலம் கோத்திரம் இல்லாத தரித்திரப் பீடைகள் இல்லை நாங்கள்!'' என்று அவள் போட்ட கூச்சலில், ''நான் வறேன்... வறேன்'' என்று விமலா புலம்பியதுகூட நாராயணன் காதில் விழுந்ததோ என்னவோ, சந்தேகந்தான். கைக்குட்டை யால் நாராயணன் முகத்திலிருந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டான்.

''அந்த மடையன், சிந்தாமணி, இந்தக் கும்பியிலே என்னை இழுத்துவிட்டானே!'' என்று அவன் வாயை மூடுவதற்குள், தருமாம்பாள் காளிபோல் கிளம்பிவிட்டாள். ''கும்பியா! உங்கள் வீடுதான் கும்பி! 'சித்தி' 'சித்தி' ன்னு அந்தத் தேவடியா—''

''சீ..சீ....! பீடை....பீடை!!—சித்தி செருப்பைத் தூக்கக்கூட உங்களிலே யாருக்கும் யோக்கியதை கிடையாது.''

தருமாம்பாள் கோபாவேசத்தால் பேச முடியாமல், ''ஹாம், ஹூம்'' என்று திக்குமுக்காடினாள். விமலா அவளுடைய வாயை மூட யத்தனித்துக் கொண்டு, ''அய்யய்யோ! சும்மா இரேண்டி! நான் என்ன பண்ணுவேன்!—இதோ, நானும் வறேன்! நானும் வறேன்!'' என்று நாராயணன் ஸூட்கேஸைக் கையில் எடுத்துக்கொண்டதைப் பார்த்துக் கதறினாள்.

''நீ வந்தால் வா, இருந்தால் இரு!—யாருக்கு வேணும்? தூ! இப்படியா சந்தி சிரிக்கணும்!'' என்று

அவன் வாசற்படியைத் தாண்டினான்.

"நான் வந்துட்டேன்! வந்துட்டேன்!" என்று விமலா அடித்துக்கொண்டாள். ஆனால், இன்னும் கோப வெறியில் தள்ளாடிக்கொண்டிருந்த அவள் தாயார், "போ—போகட்டும்!" என்று கூவிக்கொண்டு, பெண்ணைத் தள்ளி, வாசற் கதவைப் 'படார்' என்று சாத்தித் தாழ்ப்பாளிட்டாள்.

நாராயணன் திக்கு திசையை நினைக்காமல், மளமள வென்று நடந்தான்; அவன் தோற்றத்தைப் பின்புறத்திலிருந்து கவனித்து வந்த ஒரு 'டாக்ஸி' க்காரன், அவன் பக்கத்தில் வண்டியை நிறுத்தி, "ஸார், ஸ்டேஷனுக்குப் போகணுங்களா? நான் ஈரோட்டிலிருந்து ஸ்பெஷல் சவாரி வந்தேன். திரும்பிப் போறேன். நீங்கள் கொடுத்ததைக் கொடுங்க" என்றான். நாராயணன் ஒன்றும் சொல்லாமல் உடனே அதில் உட்கார்ந்துகொண்டான். பிறகு, "இங்கேயிருந்து ஈரோடு எவ்வளவு மைல் இருக்கும்?" என்று அவன் வண்டிக்காரனைக் கேட்டான். பழம் நழுவிப் பாலில் விழுந்துவிடுமென்று நினைத்துக் கொண்டு, அவன், "முப்பத்தெட்டு மைல்தான், ஸார். ஒரு மணியிலே போயிடலாம்!" என்றான்.

"சரி, நேராய் ஈரோடு ஸ்டேஷனுக்குப் போ" என்று நாராயணன் உத்தரவிட்டான். ஸ்டேஷனுக்கு வந்ததும், முதல் வகுப்புப் பிரயாணிகள் தங்குமிடத்தில் ஒரு சாய்வு நாற்காலியின்மீது அவன் அமர்ந்துகொண்டான். அவன் மூளைக் கொதிப்பில் மூட்டைப் பூச்சிகள் கடித்ததும் தெரியவில்லை. மாமியார் வீட்டில் நடந்த நாடகத்தை நினைக்க நினைக்க, அவனுக்குப் பித்துப் பிடித்துவிடும் போல் இருந்தது. காபியைத் தருவித்துக் குடித்தான்; தான் அவசரப்பட்டுத் தருமாம்பாளுக்குக் கோபம் வரும்படி செய்திருக்கக்கூடாதென்று நினைத்துத் தன்னைத் தானே நொந்துகொண்டான். அவன் ஒருவனுய்ச்

சென்னைக்குத் திரும்பினால், ஊரார் என்ன நினைப்பார்கள்? விமலா சண்டை போட்டுக்கொண்டு சொல்லிக் கொள்ளாமல் போனதை எத்தனை நாட்கள் மூடிவைக்க முடியும்? அப்பொழுதே எத்தனை பேருக்குத் தெரியுமோ! அவளை அழைத்துவராமல் வந்தது எவ்வளவு மடத்தனமாய்விட்டது! மறுபடியும், அங்கே திரும்பிப் போவது கனவிலும் நினைக்க முடியாத விஷயம். ஆனால் விமலா கோயம்புத்தூரிலும், அவன் சென்னையிலும் இருந்தால் அந்த ராக்ஷஸி மாமியார், என்ன என்னவோ கதைகளைக் கட்டிவிடுவாளே? தனக்கு நேர் நேராகவே, தான் சித்தியோடு 'கொட்டம்' அடிப்பதாகச் சொன்னவள் - தன் மறைவில் எவ்வளவுதான் தூஷிக்கமாட்டாள்?

'ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு' என்று அவன் தாயார் அடிக்கடி எச்சரித்தது அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தது. அதை இப்பொழுது நினைத்து என்ன பிரயோஜனம்? அட கடவுளே! முந்தியும் போக முடியாமல், பிந்தியும் திரும்ப முடியாமல் இந்தக் கதியா அவனுக்கு வரவேண்டும்? தனிக் குடித்தனம் போட வேண்டுமென்று விமலா கங்கணம் கட்டியது நிறைவேறி விடும்போல அல்லவா இருந்தது! அவளுக்கு அவ்வளவு பிடிவாதமா? தங்களுக்குள் ஆயிரம் இருந்தாலும் சொல்லாமல் கொள்ளாமல் ஓட்டம் பிடிப்பதா? கழுதை!— பற்கள் 'நறநற' வென்றன. அவள் செய்த தப்புக்குச் சரியான சிக்ஷையை அளித்துதான் தீரவேண்டும்; ஆனால், இந்த வெறியிலும், அரை மணி நேரத்துக்கு முந்தி, துக்கத்தால் தகிக்கப்பட்ட முகத்தோடு, தீனக்குரலில் அவள் கெஞ்சியதும் அவனுக்கு ஞாபகத்துக்கு வராமல் போகவில்லை. அது பாசாங்கல்ல, உண்மையிலேயே அவள் மனம் உடைந்துதான் கிடந்தாள். அது அவனுக்கு நன்றாகத் தெரியும். அப்படிப்பட்டவள், தன் மனத்தை ஏன் புண்படுத்தவேண்டும்? ஆனால் புண்படுத்தவேண்டு

மென்ற கெட்ட எண்ணத்தினுலா இவ்வாறு நடந்து கொண்டாள்? அது ஒருகாலும் இருக்காது. பிறகு எதற்காக இவ்வளவு சச்சரவு, கஷ்டம், துக்கம்—எல்லாம் அசூயையால் ஏற்பட்ட கஷ்டந்தானே? அதிலிருந்து விடுவித்துக்கொள்ள வேறு வழியை அல்லவா தேட வேண்டும்? விரல்களைச் சொடுக்கினுன்; மேலே யோசனை ஓடவில்லை. ஒன்றை மட்டும் அவன் நன்ருக உணர்ந்தான்.—சென்னையில், தான் விமலா இல்லாமல் வசித்து வந்தால், அது 'சித்தி'க்குச் செய்யும் மகாபாதகம் ஆகும். ஆகவே, ஒரு மாதம் 'லீவ்' எடுத்துக்கொண்டு, அதை எங்கேயாவது கழிப்பதென்ற தீர்மானத்துக்கு வந்தான் தன் நோயாளிகளைக் கவனித்துக்கொள்ள நண்பன் இருந்ததால், அவர்களைப்பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. தன்னை அறிந்தவர்கள் மறுபடியும் தன்னையே நாடுவார்கள் என்ற தைரியமும் அவனுக்கு ஒருவித சாந்தியைக் கொடுக்கவே, அவன் எழுந்து ஸ்நானம் செய்யப் போனுன்: சிக்கல்களுக்குத் தக்கவாறு யுக்திகளையும் தெரிவிப்பது மனத்தின் சுபாவமாகையால், குளித்துக்கொண் டிருந்தபோது, இரண்டு மூன்று தினங்களுக்குள், தன் பேராசிரியர் ஓர் ஆலோசனைக் கூட்டத்தில் கலந்துகொள்வதற்கு டில்லிக்குப் போவது அவனுக்கு ஞாபகம் வந்தது. தன்னையும் அழைத்த பொழுது, அவன் ஏதோ சாக்குச் சொல்லித் தப்பித்துக் கொண்டான். இப்பொழுது அவருடன் டில்லிக்குப் போவது பல விஷயங்களிலும் நன்மையைத் தரும் என்று அவனுக்குப் பட்டது. முதல் முதலாக வீட்டுப் பிடுங்கல்களைச் சில வாரங்களுக்கு அடியோடு மறந்திருக்கலாம். அதற்குமேல் என்ன வேண்டும்? அவனுக்குச் சுபாவமான சுறுசுறுப்பும் உற்சாகமும் திரும்பின; ஸ்நானத்தை முடித்துக்கொண்டு சாப்பிட்டான். பிறகு, சென்னை மெயில் வரும் வரையில், பொழுதைப் போக்க, நிறையப் பத்

திரிகைகளை வாங்கிக்கொண்டு, அவைகளைப் படிப்பதில் ஈடுபட்டான்.

மறுநாள் காலையில், அவன் வீட்டுக்கு வந்து, வண்டியை விட்டு இறங்கியபொழுதே கோயம்புத்தூரில் நடந்த ரஸாபாஸம் தன்னைச் சேர்ந்தவர்கள் அனைவருக்கும் தெரிந்துவிட்டதென்று அவன் ஊகித்துக் கொண்டான். அவனைக் கண்டதும் சுசீலா ஓடி வந்தாள். அவளுடைய தாயாரும் தகப்பனுருங்கூட வாசற்புறமாக வந்து, "அதுக்குள்ளே வந்துட்டாயா, அப்பா!" என்று விசாரித்தார்கள். 'சித்தி' ஒரு மூலையில் நடுங்கியவாறு நின்ருள். ஜானகிராம ஐயர், "சம்பந்தி தந்தி கொடுத்திருக்காரடா அப்பா. அவரே விமலாவை அழைச்சிண்டு வருராம். ராத்திரி இரண்டு மணிக்குத் தந்தி வந்தது—' என்று அவர் முடிப்பதற்குள், "இப்போ என்ன அவசரம் வந்துடுத்து? சரி, அந்தத் தந்தி எங்கே?" என்று ஆத்திரத்தோடு அவன் அதை வாங்கிப் படித்தான். அது ஒரு ராமாயணமாக இருந்தது. தாம் வீட்டில் இல்லாதபோது தம் மனைவி கோபத்தில் அசட்டுத்தனமாய் நடந்து கொண்டதற்குத் தாமும், தம் மனைவியும் மிகவும் வருந்துவதாகவும், நாராயணன் போன ஒரு நிமிஷத்துக்கெல்லாம் விமலா ஊரெங்கும் அவனைத் தேடி அலைந்ததாகவும், அவள் அழுதவண்ணம் ஆகாரமில்லாமல் இருந்தாள் என்றும்-இவ்வாறெல்லாம் அதில் கண்டிருந்தது. தந்தியை மடித்து ஜேபியில் போட்டுக்கொண்டு, "நான் ஜெனரல் போஸ்ட் ஆபீஸுக்குப் போய் அவருக்கு ஒரு தந்தி கொடுத்துவிட்டு வறேன், அப்பா. இன்னும் இரண்டு நாளிலே நான் டெல்லிக்குப் போகணும். இப்போ என்ன அவசரம்? போனவள் இரண்டு மாசந்தான் இருந்துட்டு வரட்டுமே!" என்று உடுப்பையும் மாற்ருமல், மோட்டார் ஷெட்டைத் திறந்து, காரை ஓட்டிக்கொண்டு, ஜெனரல் போஸ்ட் ஆபீஸுக்குப் போனுன். அங்கே, சிறிது

யோசித்து, செலவையும் லட்சியம் செய்யாமல், பின்வருமாறு தந்தியைக் கொடுத்தான்: "நான் டெல்லிக்குப் போகிறேன். திரும்பி வர ஒரு மாதத்துக்குமேல் ஆகும். நான் இல்லாதபோது, நீ சென்னைக்கு வருவது எனக்கு இஷ்டமில்லை. போகும்போது நீ உன் இஷ்டம்போல் சென்றாய்; வரும்போது என் இஷ்டம்போல்தான் வர வேண்டும். உன் வழக்கம்போல் இதையும் நீ மதிக்காமல் வந்தால், உனக்காக நான் நம் தேசத்தை விட்டே விலக வேண்டியிருக்கும்—ஜாக்கிரதை!"

## 23

## குடும்பம் கலைந்தது

கோயம்புத்தூரிலிருந்து திரும்பிய மூன்றாவது தினமே நாராயணன் தன் பேராசிரியருடன் டில்லிக்குப் போய் விட்டான். போவதற்முன், எல்லா விஷயங்களுக்கும் அநுகூலமாக இருக்கும் என்று நினைத்து, புதிதாக வாங்கின பங்களாவைச் செம்மையாக 'ரிப்பேர்' செய்வதற்கு ஏற்பாடு செய்துவிட்டுப் போனான். விமலா மனஸ்தாபத்தின்பேரில் பிறந்தகம் சென்றது அக்கம் பக்கத்தாருக்கு எல்லாம் எப்படியோ தெரிந்துவிட்டது. அவளுடைய புருஷன் ஓடி அழைத்ததாகவும், அவள் அவனை லட்சியம் செய்யாமல்வர முடியாதென்று மறுத்துவிட்டதாகவும் ஜனங்கள் கதைகளைக் கட்டி, தங்கள் இஷ்டம்போல் பேச ஆரம்பித்தார்கள். விசாலாக்ஷி அசடல்ல. அவளுடைய கண்களும், செவிகளும் விஷயங்களை வெகு சூக்ஷ்மமாகக் கிரகித்தன. விமலா தன்னை நேருக்கு நேராகத் திட்டியது போதாமல், பிறரிடமும் நிந்தித்தாளோ என்ற சந்தேகமும் பயமும் பிடித்துக்கொண்டன. இதை ஊர்ஜிதப் படுத்துவதுபோல், நாராயணன் டில்லிக்குச் சென்ற மறுநாள், அவள் சுசீலா வீட்டுக்குப் போனபொழுது, சுசீலாவும் அவளுடைய தாயாரும் தங்களுடைய சம்

பாஷையைச் சட்டென்று நிறுத்தி அசடு தட்டியது போல் முகம் வெளுத்தார்கள். ''ஏதோ ரகசியம் பேசிக்கிறேள் போலிருக்கு. நான் வந்து சேர்ந்தேன்'' என்றாள் விசாலாக்ஷி, வருத்தத்துடன்.

''ரகசியம் ஒண்ணுமில்லை. வீட்டுக்கு வீடு வாசல் படிதான்!'' என்று சுசீலாவின் தாயார் மழுப்பினாள்.

சுசீலா தன் தாயாரை உற்றுப் பார்த்தாள். பிறகு விசாலத்தை நோக்கி, ''அந்த மூடம் விமலாவைப் பத்தித் தான் பேசிண்டு இருந்தோம், விசாலம். அசட்டுக் கழுதை! எல்லாருக்கும் எவ்வளவு கஷ்டத்தை உண்டாக்கிடுத்து' பாரு. அதுக்குத் தனியாய்ப் போகணும்னு இருந்தால், போய்த் தொலையறதுதானே? இருக்கிறவாள் பிராணனை வாங்குவானேன்?'' என்று சொன்னாள்.

''அட ராமா! அவளுக்குத் தனியாய்ப் போகணும்னு இருக்கா என்ன? எனக்குத் தெரியவே தெரியாதே! மகா ராஜியாய்ப் போகட்டுமே. நான் வேணும்னாலும் போறேன். இதுக்கா இவ்வளவு கூத்து? எங்கிட்டே ஒரு வார்த்தை சொல்லப்படாதா? மனசுலேயே வச்சிண்டு ஏன் இப்படி என் கழுத்தை அறுக்கணும்?'' என்று சொல்லியபொழுதே, விசாலாக்ஷிக்குக் கண் கலங்கி விட்டது.

''விட்டுத் தள்ளு, விசாலம். அல்பம்! மஹா அல்பம்!—பெரிய வக்கீல் பொண்ணும், 'இண்டர்மீடியட்' பாஸ் பண்ணியிருக்காளாம்! அம்மாகிட்டே சொன்னால் எனக்குத் தெரியாமல் போயிடுமா?—மக்கு!''

''சுசீலா, என்னத்துக்கு உனக்கு அவ்வளவு வாய்த் துடுக்கு? அவளுக்குச் சொல்ல வேறே ஆள் இல்லை. அவளுக்கோ எப்படியாவது பிரிஞ்சு போகணும்னு இருக்குது'' என்றாள் அவளுடைய தாயார்.

''நீ என்ன அம்மா, இது? அதுக்காக இல்லாத்தையும் பொல்லாத்தையும் சொல்றதோ?'' என்று சுசீலா சீறினாள்.

"என்னத்தைச் சொன்னுள், அக்கா?" என்று விசாலாக்ஷி கெஞ்சினுள்.

"என்னத்தை வேணும்னுலும் சொல்லட்டுமே! அந்த மக்கு வார்த்தைக்கு ஏதாவது கௌரவம் இருக்கா?—அர்த்தம் இருக்கா? அது எதோடே கணக்கு?"

"என்னதான் சொன்னுள்—சொல்லேன்! அய்யோ!" என்று விசாலாக்ஷி பெருமூச்சு விட்டாள்.

"நீ இப்படி பயப்பட பயப்படத்தான் அந்தக் கழுதைக்கு அவ்வளவு கொழுப்பு ஏறிடுத்து. என்ன பயம் வேண்டியிருக்கு? நீ காரியதரிசி ஆனுல், வாழ்ந்தாப் படிதான் இருக்கும்—"

விசாலாக்ஷிக்கு இது 'சுருக்' என்று பட்டது.

"அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம், அக்கா? எனக்கு பயம்னு நான் சொன்னேனு?—மானம் பெரிசில்லையா? பிராணனை விட்டாவது மானத்தைக் காப்பாத்திக்கணும்னு பெரியவாள் சொல்லல்லையா?"

"ஆமாம், ரொம்ப மானத்தைக் கண்டுட்டே! இதோ தெருவுலே போறதே—பயித்தியம்—வாத்தியார் பொண்டாட்டி. அது எல்லாரையும் ஆயிரம் வசவு வைகிறது. அதை யாராவது லட்சியம் பண்ருளா? அதுக்கும்-விமலாவுக்கும் என்ன வித்தியாசம்? குண்டுச் சட்டியிலே குதிரை ஓட்டிண்டு, கழுதை! அவளுக்கு சொல்றதுக்கு எங்கம்மாதான் கிடைத்தாள். நான் அப்போ இல்லாத போனேனே, இருந்தால் தெரியும் சேதி!"

"என்ன தூஷிச்சான்னு சொல்லமாட்டேங்கறயே?" என்ருள் விசாலாக்ஷி அழாக் குறையாய்.

"இப்போ உனக்குத் தெரிஞ்சு என்ன ஆகணும்? அது ஒரு பதர்."

"இது ஒரு பேச்சா! அவள் எவ்வளவு பதர்னு நான் தெரிஞ்சுக்க வேண்டாமா?—சொல்லேன்.. சொல்லேன்!"

என்று விசாலாக்ஷி சுசீலாவின் கரங்களைப் பிடித்து அசைத்து மன்றாடினாள்.

"அவளுக்கும், அவள் புருஷனுக்கும் நீ ஆகாதே பண்றயாம். அதனாலேதான்—"

"அய்யோ! அய்யோ!" என்று விசாலாக்ஷி இரு கைகளாலும் தன் தலையைப் பிடித்துக்கொண்டாள்.

"அப்பவே சொன்னேனே விசாலம், அந்தப் பைத்தியத்தின் பேச்சு ஒரு கணக்கா? இத்தனையும் அவள் தனிக் குடித்தனம் போடறதுக்கு. இப்போ நான் சொல்றது என்னவென்றால், அவள் தனிக் குடித்தனம் போட்டுண்டு வீட்டை விட்டுப் போனால் ஒழிய, இங்கே ஒரு நிமிஷங் கூடத் தங்கப்படாது. நீ நாளைக்கே சேலத்துக்குப் புறப்பட்டுப் போ. அது எத்தனை நாளானாலும் சரி, அவள் வீட்டை விட்டு ஒழியற வரையிலும் நீ வராதே. இந்த வீட்டிலே இருக்கிறதுக்கு அவளைவிட உனக்கு அதிக 'ரைட்' உண்டு. அது என்னதான் ஆகிறதோ, பார்க்கலாமே!" என்று விசாலாக்ஷியின் கவனத்தைக் கவர, சுசீலா வேகத்தோடு சொல்லியும், அவள் பரத்தியானமாகவே உட்கார்ந்திருந்தாள்.

"சரி, பகவான் விட்ட வழி விடட்டும். இந்த ஆத்துலே நான் இனிமேல் இருக்கமாட்டேன், அக்கா. டாக்டர் டில்லிக்குப் போனதும் ஒரு நல்லதுக்குத்தான். மாமா ஆத்துலே சும்மாத்தான் இருக்கார். நீ போய் அவரண்டை ஒண்ணுவிடாதே சகலத்தையும் சொல்லிடு. ஒண்ணையும் மூடி வைக்காதே. அவர் வேலை இருக்கு, கீலை இருக்கு; நாள்-நக்ஷத்திரம் சரியாய் இல்லைன்னு சாக்குப் போக்குச் சொன்னால், நானே தனியாய் பொம்மனாட்டி வண்டியிலே ஏறிக்கிண்டு போயிடுவேன்னு சொல்லு. கண்டிப்புதான், சந்தேகம் கிடையாது."

"அவர் வரவில்லையின்னால், நான் வறேன், விசாலம். நீ ஒண்ணும் பயப்படாதே. நீ போகமாட்டேன்னாலும், நான் ஒத்துக்கமாட்டேன். இந்த விமலாவைக் காலுலே

விழுந்து, சன்னத்துலே போட்டுக்கும்படி பண்ணுத போனுல் என்னைக் கேள்!'' என்று சொல்லிக்கொண்டே, சுசீலா ஜானகிராம ஐயரிடம் சென்றுள். ஜானகிராம ஐயருக்குக் கேட்கக் கேட்க, சித்த பிரமை ஏற்பட்டு விட்டது. 'திரு திரு' என்று விழித்தார். ''நான் என்ன பண்றது, அம்மா?'' என்று தவித்தார். சதா, தகப்பனு ரிடமே இருந்த குழந்தை வத்ஸலா, அவர் முகத்தைப் பார்த்து அஞ்சியது.

''பண்றதுக்கு என்ன இருக்கு, மாமா? முதல்லே, விசாலத்தை அவள் அப்பாகிட்டே விட்டுட்டு வாங்கோ. அப்புறம் செய்ய வேண்டியதைச் செய்யலாம். கால தாமதம் பண்ணப்படாது. இன்னிக்கி ராத்திரியே நீங்கள் புறப்பட்டாகணும். இல்லாத போனுல் அனர்த்த மாகும். இதைப் போல இன்னும் எத்தனை பேரண்டை சொல்லி யிருக்காளோ! யாருக்குத் தெரியும், மாமா? ஒரு நல்ல குடும்ப ஸ்திரீயினுடைய நடத்தையா இது? நீ வழியிலே போறவள். உனக்கு என்ன வந்ததுன்னு என்னைக் கேட்கலாம். இருந்தாலும் நியாயம்-அநியாயம் இல்லையா, மாமா? அதுவும் விசாலத்தையா இப்படி ஹிம்சிக்கறது! எனக்கே உடம்பு எரிஞ்சு போறதே. அவளுக்கு எப்படி இருக்கும்! பாவி! துரோகி! இதுக்கு அவள் எப்படி அநுபவிக்கப் போறுள், பாருங்கோ!'' என்றுள் சுசீலா சாந்தத்தை இழந்து.

''வேண்டாம், அம்மா! வேண்டாம், அம்மா! யாரு மேலேயும் தப்பு இல்லை. எல்லாம் பகவத் ஸங்கல்பம். நான் இன்னிக்கு ராத்திரியே சேலத்துக்கு அழைச்சிண்டு போய் விட்டுடறேன், அம்மா'' என்று ஜானகிராம ஐயர் வருத்தத்தோடு சம்மதித்தார்.

திடீரென்று விசாலாக்ஷி சேலத்துக்கு வந்தது, அவ ளுடைய பெற்றோர்களுக்குச் சிறிது ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஆனுல், அவளுடைய வருகையால் அவர்களுக்கு

உண்டான ஆனந்தத்துக்கு மாத்திரம் குறைவேயில்லை. செல்லப் பேத்தி வத்ஸலாவைச் சீதாலக்ஷ்மி அம்மாள் இடுப்பை விட்டு இறக்கவேயில்லை. அண்ணுசாமி ஐயர் மாப்பிள்ளை ஜானகிராம ஐயருக்கு ஆசார உபசாரங்கள் செய்தார். சுசீலா போதித்தவாறு, இடம் மாற்றினால் விசாலாக்ஷியின் தேக நிலைமைக்கு நன்மை ஏற்படுமென்ற எண்ணத்தோடு, அவளை இரண்டொரு மாதம் சேலத்தில் விட உத்தேசித்ததாக ஜானகிராம ஐயர் தெரிவித்தார். ''இங்கே விடணும்னு உங்களுக்கு மனசு வந்தது எனக்கு ரொம்ப சந்தோஷம்'' என்று அண்ணுசாமி ஐயர் ஆனந்தப்பட்டார்.

''நான் இரண்டு நாளைக்கு மேலே தங்கறத்துக்கு இல்லை. அதுக்குள்ளே ஒரு வேளையாவது, சிந்தாமணி ஆத்துக்குச் சாப்பிடப் போகணும். சாப்பிடாத போனதுக்கு, போன தடவையே ரொம்பக் கோவிச்சிண்டான். 'பிராக்டிஸ்' விருத்தியாகிக்கிண்டு இருக்கோ, இல்லையோ? அவனுக்கு என்ன, பகு புத்திசாலி!'' என்றார் ஜானகிராம ஐயர்.

''எல்லாம் உங்கள் புண்ணியந்தான். இன்னும் சித்தே நாழிக்கெல்லாம் அவரும் பாகியும் வருவார்கள். நீங்கள் வந்தது தெரிஞ்சால் அப்பவே ஓடி வந்திருப்பாள்!''

''மெள்ள வரட்டுமே; என்னைக் கூப்பிடணுமா அவன்'' என்று அவர் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, விசாலாக்ஷி அவரைத் தனியாக அழைத்துச் சென்றாள். ''பாகியும் அவாத்துக்காரரும் வறேன்னு சொல்லி அனுப்பிச்சிருக்காளாம். பங்களூரிலேயிருந்து, காய்கறிகள் நிறைய வந்ததாம்; அதை எடுத்துண்டு வறாளாம். நீங்கள் ஏதாவது ஒண்ணுக்கொண்ணு சொல்லி வைக்காதங்கோ. தெரியறபோது எல்லாம் தானாகத் தெரியட்டும். இந்தப் பிரஸ்தாபத்தையே எடுக்காதங்கோ....ஆமாம்'' என்றாள்.

"நான் ஏன் எடுக்கறேன், விசாலம்!" என்ருர் ஜானகிராம ஐயர், கருடாழ்வார்போல் இரண்டு கைகளையும் விரித்துக்கொண்டு. சிறிது நேரத்துக்கெல்லாம் பாகீரதியும் சிந்தாமணியும் வந்தார்கள். தன் தமக்கையைக் கண்டதும், பாகீரதிக்கு மனம் பூரித்துவிட்டது. எதிர்பாராமல், மாமாவும் 'சித்தி'யும் வந்ததில் சிந்தாமணிக்கும் பரம சந்தோஷந்தான். ஆனலும், அது அவன் மனத்தில் சிறிது கலக்கத்தை உண்டாக்கத்தான் செய்தது: பாகீரதி மாத்திரம் பைத்தியக்காரியா? புருஷனும் மனைவியும் அர்த்தத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்தனர். அதுவும், தன் கணவனுடன் பழகப் பழக, அவனுடைய மனத்தில் உதித்த எண்ணங்கள் எல்லாம் மறுகணத்திலேயே அவளுடைய மனத்திலும் முளை எடுக்கும். மனோபாவத்திலும் அந்தரங்கத்திலும் இருவரும் ஒன்றுபட்டுவிட்டார்கள். இந்த அந்நியோந்நியம் விசாலாக்ஷிக்குப் பரம ஆனந்தத்தைக் கொடுத்தது. அதில், தான் கஷ்டத்துடன் மறைத்து வைத்திருந்த வருத்தத்தையும் மறந்து, அவள் அவர்களோடு குதூகலமாய் அளவளாவினள். தன் கிருகத்தில் இரண்டு வேளையாவது சாப்பிட வேண்டுமென்று சிந்தாமணி வற்புறுத்தியதால் ஜானகிராம ஐயர் ஒப்புக்கொண்டார். பாகீரதி தங்கிவிடவே, சிந்தாமணி மாத்திரம் விடை பெற்றுக்கொண்டு சென்ருன்.

ஜானகிராம ஐயர் ஊருக்குப் புறப்படும் சமயம் வந்தபொழுது, அவரால் துக்கத்தை அடக்க முடியவில்லை.

"நான் குழந்தையை விட்டு எப்படி இருப்பேன், விசாலம்? யாரிட்ட சாபமோ! குடும்பம் கலைந்து போச்சே. நாராயணன் ஒரு மூலை, அவன் பெண்டாட்டி ஒரு மூலை. நீ இங்கே யதா பிரகாரம், நான் ஏகாங்கியாய்க் காலம் தள்ளணும். நீ சொன்னபடி ஏற்பாடு செய்யறேன். நீ சீக்கிரம் வந்துடு" என்று அவர் கேட்டுக்கொண்டார்.

"எனக்கு மட்டும் இங்கே இருக்கணும்னு ஆசையா? முள் மேலே நிக்கறுப்போலன்னு இருக்கு? அக்காவோடே எல்லாம் சொல்லியிருக்கேன். அவள் நம்ப குடும்பத்து க்ஷேமத்துக்கு விரோதமாய் ஒண்ணும் செய்யமாட்டாள். அவள் போன வழி விட்டுடுங்கோ, ஒண்ணும் ஆக்ஷேபிக்காதங்கோ."

"நான் ஏன் ஆக்ஷேபிக்கறேன், விசாலம்!"

"அப்புறம், தங்கத்துக்கிட்டேயிருந்து எனக்குக் கடுதாசி வந்தால் எனக்கு உடனே அதை அனுப்பிச்சுடுங்கோ. இனிமேல் இந்த அட்ரஸுக்கு எழுதிவிடுவாள்.—டாக்டர் டில்லியிலே அவாத்துலேதானே தங்கியிருக்கார்?"

"ஆமாம், வேறே எங்கே போவான்? அவள் மேலே அவனுக்குப் பிராணன் ஆச்சே. சரி-நாழியாறது—நான் போயிட்டு வரட்டுமா? குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கோ" என்று கலங்கிய கண்களுடன், குழந்தையை மறுபடியும் முத்தமிட்டு, உடனே வருவதாக அதனிடமும் சொல்லிவிட்டு அவர் விடை பெற்றுக் கொண்டார்.

## 24

## விசாலாக்ஷியின் கடிதங்கள்

தாயாரும் பெண்களும், தங்கு தடையின்றி தங்களுடைய இதயக் குமுறலை வெளியிட, ஜானகிராம ஐயர் போவதற்காகக் காத்துக்கொண் டிருந்ததுபோல் காணப்பட்டது. துக்கத்தோடு விசாலாக்ஷி நடந்த விஷயங்களை யெல்லாம் சொல்லிக்கொண்டு வந்த பொழுது, சீதாலக்ஷ்மியம்மாளும் பாகீரதியும் அழத் தொடங்கி விட்டார்கள். ஐயோ! நான் ஒரு பாவமும் அறியேண்டி!—அடி அம்மா! அவ்வளவு வயசானவர்களுக்குக் கொடுக்க உனக்கு எப்படி மனசு வந்ததடி!" என்று விசாலாக்ஷி சொன்னபொழுது,

சீதாலக்ஷ்மியம்மாளுக்குத் துயரம் கரை புரண்டு ஓடி விட்டது. முதல் முதலாக, 'மாப்பிள்ளை'யைப் பார்த்த பொழுது, அவள் இதயம் துடித்தது. விசாலாக்ஷிக்கு எப்படித் தெரியும்? விசாலாக்ஷி மேல்மேலும் புலம்பிக் கொண்டே போனாள்: "நான் கிழட்டு ஆம்படையானைக் கட்டிண்டதுக்கு அழட்டுமா?—அவர் கிழவர் என்று என்னை இப்படியெல்லாம் வாய்க்கு வந்ததைச் சொல்லித் தூத்தருளே, அதுக்கு அழட்டுமா? பாவிகள், அவாள் என்ன கதிக்குப் போவாளோ! நான் நல்லவளோ கெட்டவளோ, அதோ அவனுக்குத் தெரியும். நான் கண்ணாலே எல்லாரையும் மயக்கறேனாமே!—பாழும் தெய்வமே! இந்தக் கண்ணை அவிச்சுடேன்!" என்று வெறு பிடித்தவள்போல், அவள் கண்களைப் பிடுங்கிக் கொள்ளவே, தாயார் வெகு கஷ்டத்தோடு அவளைத் தடுத்து, தன் கண்ணீர் அவள்மீது சிந்தச் சிந்த, அவளைக் கட்டி அணைத்துக்கொண்டாள். இருதயக் கொந்தளிப்பு சிறிது அடங்கவே, விசாலாக்ஷி தன் தாயின் அணைப்பி லிருந்து விலகிக்கொண்டு, "அம்மா! நீ கஷ்டப்படாதே, உன்மேலே தப்பு இல்லே! எல்லாம் தெரிஞ்சும், என்னை அறியாதே எனக்கு எங்கிருந்தோ ஒரு பயித்தியம் வந்துடறது. நான் என்ன பண்ணுவேன்! சமூகம் செஞ்ச பாவத்துக்கு, சமூகம் எல்லாந்தான் அநுபவிச்சாகணும். அதனாலே யாரு மேலேயும் தப்பு சொல்லறதுக்கில்லே. அக்காதான் கெட்டிக்காரி. தான் செய்யறதைச் சரி யாய்ச் செஞ்சிடுவாள். பிறத்தியார் என்ன சொன்னாலும் லட்சியம் பண்ணமாட்டாள். என்னையும் அப்படி இருன்னு சொல்றாள். அவள் சொல்றது என்னவோ 'ரைட்'. எனக்குத்தான் இன்னும் தைரியம் வரல்லே. ஆனால் இப்படி எல்லாம் இமிசை பண்ணினால், அது வந்து தான் தீரும்.—என்ன சொல்றே?" என்று தயைக் கேட் டாள். சீதாலக்ஷ்மியம்மாள் வாய் திறக்கவில்லை. "ஆமாம்,

அம்மா! இந்த விமலியைப் பதர்னு வச்சிடப்போறேன். எனக்கு எவ்வளவு வேலை இருக்கு! இந்த மூளை கெட்ட கழுதைக்காக நான் பயந்துண்டு இருக்கிறதா? சூரியனைப் பார்த்து நாய் குலைக்கிறுப்பபடிதான். நான் இங்கே எத்தனை நாள் இருக்கப்போறேன்னு நினைச்சிண்டு இருக்கே? முப்பதே முப்பது நாள்தான். அதுக்குள்ளே அவர் வேறே வீடு பார்த்தாகணும். அவராலே முடியாமற் போனால், அக்கா ஏற்பாடு பண்ணிடுவாள். அப்போ தான், நான் யார் என்பது இந்த விமலிக்குத் தெரியப் போறது!'' என்று அவள் ஆவேசம் வந்தவள்போல் பேசினாள்.

''இதைப் பத்தித் தங்கத்துக்கு எழுதினயா, அக்கா?'' என்று பாகீரதி கேட்டாள்.

''எழுதாமலா இருப்பேன்? அவள் தங்கம்னால் தங்க மாச்சே! பட்டணத்துலே யிருந்தே எழுதிப் போட்டுட் டேன். ஆச்சு, இன்னிக்கோ நாளைக்கோ, எனக்கு இந்த அட்ரஸுக்குக் கடுதாசு வரணும்.—ஆமாம், நான் திடீர்னு வந்ததைப்பத்தி, உங்காத்துக்காரர் ஏதாவது சொன்னாரா?''

''ஒண்ணும் சொல்லல்லை. ஆனால், ஏதோ மனசுக்குக் கஷ்டம்போலே இருக்குன்னு ஊகிச்சிண்டிருக்கார்.''

''அவர் புத்திசாலி; அவரண்டை ஒண்ணையும் ஒளிக்க முடியாது. நீ ஏதாவது சொன்னயா?''

''நான் ஒண்ணும் சொல்லல்லை.— இப்போதானே அக்கா, எனக்கே எல்லாம் தெரியறது?''

''என்ன அம்மா, பாகியை அவரண்டை சொல்லச் சொல்லட்டுமா, வேண்டாமா?''

''சொல்லட்டுமே, அவருக்கு விமலா குணமும் அவள் அம்மா குணமும் தெரியாதா? வேணுமானால், கோயம் புத்தூருக்குப் போய் அவள் மூஞ்சியிலே இடிக்கட்டுமே.''

"சீ, சீ! அவர் போய் அந்தப் பதரண்டை எனக்குச் சிபார்சு பண்ணணுமா என்ன? இனிமேல் அவளும் சரி, என் கால் செருப்பும் சரி.—நீ அது மாதிரி எல்லாம் அவரண்டை சொல்லி வைக்காதே, பாகீ!—இல்லாத போனால், ஏதுக்கு அம்மா, அவருக்கு இதெல்லாம் தெரியணும் இப்போ! வேண்டாம், நீ ஒண்ணும் சொல்லாதே, பாகீ!—அவர் ஒருவேளை கோயம்புத்தூருக்குப் போவாரோ?''

''அவர் ஏன் போறார், அக்கா? ஏழெட்டுப் பெரிய கேசுகள் ஆபரேஷன் ஆகியிருக்கு. இன்னும் இரண்டு மூணு வாரத்துக்கு அவர் எங்கேயும் நகரக்கூட முடியாது. என் மாமியார் உன்னை வரச் சொன்னார். அவருக்கு யாரோடையாவது பேசிண்டு இருக்கணும். அதுவும் உன்னை அவருக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சு. ஆத்துக்கு வாயேன்."

"வறேனே! அந்த அம்மாவோடே பேசினால் எனக்கும் சந்தியாவது ஏற்படும்'' என்று கனைத்துக்கொண்டு, 'யாரோ நினைக்கிறாள் என்னை.—தங்கமாத்தான் இருக்கும். அவள் மனசு எனக்குத் தெரியாதா?'' என்று தண்ணீரைக் குடித்து, அவள் பொறை ஒட்டத்தை நிறுத்திக்கொண்டாள்.

* * * *

உண்மையிலேயே, அதே காலத்தில் டில்லியில் தங்கம் விசாலாக்ஷியைக் குறித்துத் தன் அண்ணனோடு பேசிக் கொண்டுதான் இருந்தாள்.

"இருந்தாலும், சித்தியை நினைச்சிண்டால்தான் எனக்கு ரொம்பப் பரிதாபமாய் இருக்கு. போன ஜன்மத்துலே மகாபாபம் பண்ணியிருக்கணும் அவள்! புத்தி என்ன, குணம் என்ன?—அப்போ, உன் மாமியார் தூண்டுதலே இருக்காதுங்கறயா, அண்ணா?''

"ஊம், அது எல்லாம் ஒண்ணும் இல்லே, தங்கம். அசூயைதான் காரணம்."

"அப்போ தனிக் குடித்தனந்தான் போட்டுத் தொலேச்சுடேன்."

"அவள் அர்த்தமில்லாதே என்ன சொன்னுலும், அதன்படி நான் ஆடணும்னு ஆச்சு? அதென்ன அவ்வளவு அலட்சியம், தங்கம்? சொல்லிக்காதே போறவள் போகட்டுமே!'' என்று நாராயணன், சினத்தோடு உட்கார்ந்தவன் எழுந்து நடமாடினுன்.

''செல்லமாய் வளர்ந்ததன் பலன் இது. சொல்லி என்ன பிரயோசனம்? நீதான் பொறுமையாகப் போகணும். போகப் போக, அவளுக்கே புத்தி வரும். அவளே சித்தியை எவ்வளவு கெளரவப் படுத்தப்போருள் பார்!''

"ஆமாம், சித்தி இவள் கெளரவத்துக்குத்தான் காத்திண்டு இருக்காளாக்கும். போகப்போக, உலகமே அவளுக்கு மரியாதை செய்யும். சித்தி சாமான்யமானவள்னு நினேச்சுக்காதே, தங்கம்!''

''எனக்குத் தெரியாதா, அண்ணு? அவள் விமலாவுக்காக என்ன என்ன வேலே செஞ்சிருக்காள் தெரியுமா? நீ சொன்னுல் சிரிப்பே. மூட பக்தீன்னு சொல்லுவே. எதாயிருந்தால் என்ன? அவளுடைய மனேபாவத்தைத் தானே நாம் கவனிக்கணும்? நாளாகாத போனுலும் விமலாவுக்கு இதுவரையிலும் குழந்தை உண்டாகாததைப்பத்தி, அவளுக்கு எவ்வளவு வருத்தம் தெரியுமா? உன் ஜாதகம், விமலா ஜாதகம் இரண்டையும் அவள் அப்பாவுக்கே அனுப்பிச்சு, அவாளுக்குத் தெரிஞ்ச நல்ல ஜோஸியரண்டை காட்டினுளாம். இரண்டு பேருக்கும் தோஷம் இருக்கு. சுப்பிரமணிய ஸ்வாமிக்கு அர்ச்சனே பண்ணிண்டு வந்தால் சரியாய்ப் போயிடும்னு சொன்னுளாம். இப்போ ஆறு மாசமாய் உங்கள் இரண்டு பேர் பேருலேயும், திருச்செந்தூர், திருத்தணி, பழனி மூணு இடங்களிலேயும் அர்ச்சனே நடந்துண்டு வரதாம், மாசா

மாசம் பிரசாதத்தைக்கூட உங்களுக்குக் கொடுத்துண்டு வராளாமே!—''

"அப்படியா!—ஆமாம், தங்கம். எனக்கு ஞாபகம் இருக்கு! விமலா அடிக்கடி விபூதி, குங்குமம் கொண்டு வந்து கொடுத்து, ஸ்வாமி பிரசாதம் நெற்றியிலே வச்சுக்கணும் சித்தி சொல்றுள்னு உளறுவான். சிந்தி ஏதாவது நினைச்சுக்கப்போறுளேன்னு, அதை நெத்தியிலே பூசிக்கிறது உண்டு—அப்படியா சங்கதி இது? பொம்மனுட்டிகள் எவ்வளவு புத்திசாலிகளாய் இருந்தாலும், இந்த விஷயத்துலே கொஞ்சம் பயித்தியந்தான்'' என்றுன் நாராயணன்.

"ஆமாம், நானும் அப்படித்தான் இருந்தேன். ஸ்வாமி அநுக்கிரகம் இல்லாதே எந்தக் காரியந்தான் முடியும்? விமலாவுக்கு எப்படி இவ்வளவு விவேகமில்லாதே போச்சுன்னு எனக்கே ஆச்சரியமாய் இருக்கே. அவள் சுகமாம் இருக்கணும், அவள் குடும்பம் விருத்தியாகணும்னு ஊருலே இருக்கிற ஸ்வாமிகளை எல்லாம் சித்தி வேரோடு இழுக்கிறுளே! அதுக்கு இதுவா விமலா செய்யற பிரதி உபகாரம்! இதோ பத்து நாளைக்கு முந்தி கூட ஒரு கடுதாசு வந்ததே. அதைக் கொண்டு வறேன் பார்'' என்று தங்கம் உள்ளே சென்று விசாலாக்ஷி எழுதிய ஒரு கடிதத்தை நாராயணனிடம் கொடுத்தாள்; அதில் வழக்கமாக யோக க்ஷேம விசாரணைகளைத் தவிர, முக்கியமான சமாசாரம் பின்வருமாறு இருந்தது:—

"'ஜோசியர் சொன்னபடி பாக்கி இருக்கும் நான்கு மாதங்களுக்கும் அர்ச்சனையை நடத்திவிடுகிறேன். அப்பொழுதும், பகவான் கண் திறக்காவிட்டால், நாகப் பிரதிஷ்டை செய்தால் பலன் இல்லாமல் போகாதென்று பெரியவர்கள் சொல்லுகிறுர்கள். அந்தக் காரியம் நீ இங்கே வராவிட்டால் ஒருகாலும் நிறைவேருது. உன் அண்ணு எல்லாரையும் உதறித் தள்ளிவிடுவார். விமலாவுக்கும் எடுத்ததற்கெல்லாம் கோபம் வருகிறதே தவிர, சாமர்த்தியம்

போதாது. எல்லாம் அசட்டுச் சமர்த்தாய்த்தான் இருக்கிறது. ஆகையால் நீ கட்டாயம் வரவேண்டும். போனவள் வருஷக் கணக்கிலா உட்கார்ந்துகொள்வது? நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி; உன்னைப் பார்க்காமல் என் கண் பூத்துப் போகிறது. நீ வராவிட்டால் என் கஷ்டத்தையும் பார்க்காமல், உன்னை அழைத்துக்கொண்டு வர, நானே புறப்பட்டு வந்துவிடுவேன். உடனே பதில்.

இப்படிக்கு,
உன் அன்புள்ள சித்தி,
விசாலாக்ஷி.

மற்றச் சமயங்களில், நாராயணன் இந்தக் கடிதத்தைப் பார்வையிட்டதற்குச் சிரித்துப் பரிகாசம் செய்திருப்பான். ஆனால் இப்பொழுது அது அவன் மனத்தில் வருத்தத்தைத்தான் உண்டாக்கியது.

"முதல்லே, சித்தி அர்ச்சனை முதலானது பண்ணப் போறேன்னு எழுதின கடுதாசு இருக்கா, தங்கம்?"

"இருக்கு."

"சரி, அதையும் கொடு! இந்த இரண்டையும் வச்சு, ஒரு துண்டு எழுதி அவளுக்கு அனுப்பறேன்; அப்போவாவது அவளுக்குப் புத்தி வரதா பார்க்கலாம்!"

"இதுவரையிலும் நீ அவளுக்குப் பதில் எழுதலையா?"

"நான் ஏன் எழுதறேன்?—எழுதறுப்படியே எனக்கு எண்ணமில்லையே. சித்தி கடுதாசுகளைப் பார்த்தப்புறம், அவளுடைய அல்பத்தனத்தை அவளே தெரிஞ்சுக்கும்படி செய்யணும்னு தோணித்து" என்று நாராயணன், விமலாவின் புத்திர ஸந்தானத்தை உத்தேசித்து விசாலாக்ஷி முதல் முதலாக எழுதின கடிதத்தையும் வாங்கி, தன் அபிப்பிராயத்துடன், அவ்விரண்டு கடிதங்களையும் தன் மனைவிக்கு அனுப்பினான்.

தங்கமும், அன்பும் ஆதரவும் ததும்பத் ததும்ப, ஒரு நீண்ட கடிதத்தை விசாலாக்ஷிக்கு எழுதினாள்.

# 25

## விமலாவின் குறைகள்

**வி**மலாவுக்குக் கோயம்புத்தூரில் இருக்கப் பிடிக்கவில்லை. தான் எழுதிய கடிதங்களில் ஒன்றுக்காவது தன் புருஷனிடமிருந்து பதில் வராமல் இருந்தது அவளுக்குச் சகிக்கமுடியாத வேதனையையும், பயத்தையும் உண்டாக்கிவிட்டது. எவ்வளவு தாழ்மையுடன் கெஞ்சிக் கூத்தாடி எழுதினாள்! அதற்கும் பதில் இல்லையென்றால், உண்மையாக அவர் எச்சரிக்கை செய்ததுபோல், தேசத்தை விட்டே விலக ஏற்பாடு செய்துகொண் டிருந்தாரோ! சென்னையிலிருந்து எழுதுவோரும் அவளுக்கு யாரும் இல்லை. சென்னை விருத்தாந்தங்களைத் தெரிந்துகொள்ள அவள் ஆத்திரப்பட்டதால், சுசீலாவுக்காவது எழுதலாமென்று ஒருதரம் நினைத்தாள். ஆனால், விசாலாக்ஷியும் சென்னையிலே இருப்பதாக அவள் நினைத்துக்கொண்டிருந்ததால், இருவருமாகச் சேர்ந்து, தன் கடிதத்தைப் படித்துப் பரிகாசம் செய்து, கிழித்துப் போடலாமென்று பயந்தாள். அவளுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஏதோ கோப வெறியில் தன் கணவனிடம் சொல்லாமல் வந்துவிட்டாளே தவிர, அவருடைய காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்போல் இருந்தது. அவருடைய மனம் எவ்வளவு கஷ்டப்பட்டதோ என்று தவித்தாள். இனி அவளுக்குச் சகாயம் செய்யக்கூடியவர் சிந்தாமணி சித்தப்பா ஒருவர்தான். தன் புருஷனுடைய மனத்தை அவர் ஒருவரால்தான் மாற்ற முடியுமென்பதும் அவளுக்குத் தெரியும். ஆகவே, சேலத்தில் தன் தந்தையின் தாயாதிகளில் ஒருவரின் சாவுக்காகத் தன் பெற்றோர்கள் அங்கே இரண்டு மூன்று

தினங்களில் போக நிச்சயித்திருந்ததால், தானும் அவர்களோடு சேலத்துக்குச் சென்று, சிந்தாமணி சித்தப்பாவினிடம் தன்னுடைய துக்கத்தை எல்லாம் சொல்லி, தன்னைக் காப்பாற்றும்படி கேட்டுக்கொள்வதென்று தீர்மானித்துக்கொண்டாள்.

அவளுடைய மனம் இவ்வாறு தத்தளித்துக்கொண்டு இருந்தபொழுது, டில்லியிலிருந்து கடிதம் வந்தது. மேல் விலாசத்திலிருந்தே, தன் கணவனுடைய கையெழுத்து என்று தெரிந்துகொண்டாள். கை நடுங்க, இருதயம் துடிக்க, கூட்டைக் கிழித்து உள்ளிருந்த தன் கணவன் குறிப்பையும் 'சித்தி' தங்கத்துக்கு எழுதின இரண்டு கடிதங்களையும் வாசித்தாள். தலை சுழன்றது. உடம்பெல்லாம் வேர்த்து விட்டது. தன் வயிற்றில் பிறந்த 'பேரனை'ச் சீராட்டவேண்டுமென்று சித்தி கடவுளுக்குப் பிரார்த்தித்தாளா? அர்ச்சனைகள் செய்தாளா? அது உண்மையா?—கைகளில் இருந்த கடிதங்கள் அவளைப் பார்த்து நகைப்பதுபோல் இருந்தன. திருப்பித் திருப்பிப் படித்தாள். பிறகு அவைகளை ரஸித்தாள். அவைகளைத் தன் தாயார் படிப்பது அவளுக்கு இஷ்டமில்லை. தன் சிந்தனைகளை யாரும் கலைக்காமல் இருக்கும்பொருட்டு அவள் ஏகாந்தமாக இருக்கத் தோட்டத்துக்குச் சென்றாள்; மாதுளம்பழங்களை ஆராய்ந்து பறிப்பதுபோல் நடித்தாள். உலகமே ஒரு மர்மமாகத் தோன்றியது. இதுவரையிலும் சித்தியின் நடத்தையில் யாதொரு அப்பழுக்கும் கிடையாதென்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அவள் பயந்ததெல்லாம் வருங்காலத்தைப் பற்றிதான். ஆனால், சித்தி இருதய பூர்வமாய்த் தங்கத்துக்கு எழுதியிருந்த கடிதங்களைக் காணும்பொழுது, அவள் அவ்வாறு பயந்தது நியாயமாகுமா என்று அவள் தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள். ஆனால், அவள் பயத்தோடு நிற்கவில்லையே! எவ்வளவு நிந்தித்துவிட்டாள்! என்ன

பாதகம்!—ஆனால்—ஆனால், அவ்விருவருக்கும் ஏன் அந்நியோந்நியமாய் அவ்வளவு அபிமானம் இருக்கவேண்டும்! என்ன பிரேமை! என்ன சலுகை!—அவளால் சகிக்க முடியாமல் போய்விட்டதே! தன் புருஷன்மீது வைத்திருந்த மோகத்தில் ஆணுக்கும்-பெண்ணுக்கும் ஒரே ஒரு விதமான அபிமானந்தான் இருக்கக் கூடும் என்று அவள் நினைத்தாள். இப்பொழுது சித்தியின் கடிதங்கள் பல சந்தேகங்களைக் கிளப்பின. ஒருவேளை பிரேமையில் பல ரகங்கள் இருந்தனவோ? அவளோடு கூடப் பிறந்தவர்கள் ஒருவரும் இல்லை. அண்ணன் தம்பிமாரின் அன்பு அத்தகையதோ? கடவுள் அன்புஸ்வரூபமென்று அவள் கேள்விப்பட்டதுண்டு, படித்ததும் உண்டு. ஆனால் அந்த அன்பு எப்படிப்பட்டதோ, அவளுக்குத் தெரியாது. ஒருவேளை சித்தியின் அன்பு அந்த வகையைச் சேர்ந்ததோ? சிந்திக்கச் சிந்திக்கக் குழப்பந்தான் அதிகரித்தது. சித்தியால் தனக்குத் தீங்கு ஏற்படலாமென்ற எண்ணத்தினால் அல்லவா அவள் அவ்வளவு 'ரகளை' செய்துவிட்டாள். அதுவும் சாதாரண ரகளையா? சித்தியின் வாழ்க்கையைச் சின்னபின்னமாகச் சிதற அடித்த பீரங்கிக் குண்டு அல்லவா!—ஆனால், சித்தி கனவிலும் தனக்கு அபகாரத்தை நினைத்திருக்காவிடில்!—மேலே யோசிக்க முடியவில்லை. நாவு வரண்டது. நெஞ்சில் ஏதோ அடைத்துக் கொள்வதுபோல் இருந்தது. தலைகால் தெரியாமல் தவித்தாள். ஆனால், அந்த அவஸ்தையிலும் அவர்களுடைய அந்நியோந்நியத்தில் விகல்பம் இருக்கலாமோ என்ற சிறிது சந்தேகம் ஊசலாடிக்கொண்டுதான் இருந்தது. இனி, தனிமையாய் இருந்தால் பித்துப் பிடித்துவிடும் போல் இருந்தது. எது எப்படி இருந்தாலும், 'எல்லாவற்றுக்கும் சிந்தாமணி சித்தப்பாதான் 'ஜட்ஜ்'. அவருக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அவருடைய சொல் அவளுக்கு வேதவாக்கு. அவரிடம் ஒளிவு மறைவில்லாமல் சகலத்

தையும் 'கக்கி'விட வேண்டியது. பிறகு அவர் உத்தரவுப் படி நடக்கவேண்டியது'-என்ற தீர்மானத்துக்கு வந்தா ஆகவே, இரண்டு தினங்களுக்குப் பிறகு தன் பெற்றோர்கள் சேலத்துக்குச் சென்றபொழுது, அவளும் அவர்களைப் பின்பற்றினாள்.

சேலத்தில் இறந்தவர், கொள்ளுப்பேரன் பேத்திகளை அடைந்த வயோதிகர் ஆனதால், அவரைச் சேர்ந்தவர்கள் பத்தாவது தினத்தன்று செய்யவேண்டிய சடங்குகளை விட, அன்று நடைபெற வேண்டிய விருந்திலேயே மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள் என்று சொல்லவேண்டும். எங்கே பார்த்தாலும் காய்கறிகளும் பழ வகைகளும் குவிந்து கிடந்தன. சிறுவர்களின் அமர்க்களத்துக்குச் சொல்லவேண்டியதில்லை. அது ஒரு கல்யாண கிருகமாக இருந்ததே ஒழிய, சாவு வீடாகத் தோன்றவில்லை. இந்தச் சந்தடியிலும், விமலாவும், தன் பெற்றோர்களும் உள்ளே நுழைந்ததை முதல் முதலாகச் சிந்தாமணிதான் பார்த்தான். விமலாவின் முகத்தில் உலகத்துக்கே விளம்பரம் செய்வதுபோல் துயரம் படர்ந்து கிடந்தது. இரு தரத்தாருக்கும் மனம் அவ்வளவு நோகும்படி என்ன நடந்திருக்குமென்று அவன் ஆச்சரியப்பட்டான். அதிக வேலை இருந்ததால், அங்கே தாமதிக்காமல் சீக்கிரமாக அலுவல்களை முடித்துக்கொண்டு, சாப்பாட்டு நேரத்துக்கு வந்துவிடுவதென்று அவன் புறப்பட்டான். போகும்பொழுது, அவனே கோபால ஐயரிடம் சென்று பேசினான். 'மன்னி' தருமாம்பாள் முகத்திலும் உற்சாகம் குன்றி இருந்தது. அவனைக் கண்டதும் விமலா அழாததுதான் குறை.

"பாகி வரல்லையா, சித்தப்பா?" என்று அவள் துக்கத்தோடு கேட்டாள்.

"இல்லை, அம்மா. அவளுக்கு நாலைந்து நாளாய் ஜுரம், ஜலதோஷமாய் இருந்தது. அவள் அம்மாவாத்துலே விட்டிருக்கேன். இங்கே வந்தால் ஸ்நானம் பண்ணுமேன்னு அழைச்சிண்டு வரல்லை" என்றான் சிந்தாமணி.

பிறகு, அவள் சிந்தாமணியை வாசல் வரைக்கும் தொடர்ந்து, மெதுவாகப் பிறர் காதில் விழாதபடி சொன்னாள்: "உன்னைப் பார்க்கணும்னுதான் வந்திருக்கேன், சித்தப்பா! உன்னோடு சொல்றதுக்கு எவ்வளவோ இருக்கு! நீதான் என்னைக் காப்பாத்தணும்!" என்று சொல்லும்போதே, மளமளவென்று கண்ணீர் சொரிந்து விட்டாள்.

"வேண்டாம், அம்மா! தலை போறது ஒண்ணுமில்லை. நிதானமாய்க் கவனிச்சால் எல்லாம் சரியாய்ப்போயிடும். கண்ணைத் துடைச்சுக்கோ. சாப்பாட்டுக்கு வராதே போனால் நன்றாய் இருக்காது. அதனாலே, எத்தனை நாழியானாலும், நான் கட்டாயம் வருவேன். அப்புறம் சாவகாசமாய்ப் பேசிக்கலாம்.—பின்னே, நான் வரட்டுமா?"

"சரி, போயிட்டு வா: ஒருவேளை நீ வரதுக்கு ரொம்ப நாழியாச்சுன்னால், சாப்பாடானதும் நான் நேராய் உங்காத்துலே போய் உட்கார்ந்துடப் போறேன்."

"சரி, அப்படியே செய்யேன். இன்னும் நல்லதாய்ப் போச்சு" என்று அவன் மோட்டார் வண்டியில் ஏறிக் கொண்டு போய்விட்டான்.

நேராகத் தன் மாமனார் வீட்டுக்குச் சென்று, விசாலாக்ஷி, பாகீ முதலானவர்களுக்கு விமலாவின் வரவைத் தெரிவிக்கலாமா என்று சிந்தாமணி யோசித்தான். பிறகு, சாவு வீட்டுக்குச் சென்ற பிறகு ஸ்நானம் செய்யாமல் வேறெங்கும் போகக்கூடாதென்ற எண்ணத்தால், நேராகத் தன் வீட்டுக்கே போனான்: ஸ்நானத்தை முடித்துக்கொண்டு, உடைகளை அணிந்து, தன் மனைவியிடம் தகவல் சொல்ல அவன் புறப்பட்டான்.

அவனைக் கண்டதும், குழந்தை வத்ஸலா, "சித்தப்பா!" என்று கூவிக்கொண்டு ஓடி வந்தது. சிந்தாமணி அன்புடன் அதை எடுத்து அணைத்து முத்தமிட்டான்.

பிறகு விசாலாக்ஷியைப் பார்த்து, "சித்தி, விமலா வந்திருக்காள்" என்றான்.

இதைக் கேட்டதும், விசாலாக்ஷி ஸ்தம்பித்து விட்டாள். பேயறைந்தாற்போல் பீதியால் முகம் வெளுத்து விட்டது. அவளுடைய முகபாவத்தில் ஏற்பட்ட மாறுதல் சிந்தாமணிக்கே ஆச்சரியத்தைக் கொடுத்தது.

"இங்கே எதுக்காக வந்திருக்காள்?" என்று அஞ்சிய குரலில் விசாலாக்ஷி கேட்டாள்.

"அன்னிக்கி எங்கள் தாயாதிக்காரரர் ஒருத்தர் செத்துட்டார்னு சொல்லலலையே! அவருக்கு இன்னிக்கிப் பத்து. அதுக்காக அண்ணாவும் மன்னியும் வந்திருக்காள். இவளும் கூடவே புறப்பட்டாள்போல் இருக்கு."

"அப்பா-அம்மா இருக்கிறபோது, பெரிய மனுஷி, இவள்கூட விசாரிக்கணுமா?" என்று பாகீரதி எடுப்பாகச் சொன்னாள்.

"அவள் ஏதோ காரியமாய் வந்திருக்காள், பாகி; அங்கே பேச அவகாசம் இல்லை. சாயங்காலம் ஆத்துக்கு வறேன்னு சொல்லியிருக்காள்." பிறகு விசாலாக்ஷியைப் பார்த்து, "அவள் முகத்துலேயும் 'ஸௌரத்' இல்லை, சித்தி! அழுது வழியறது—அழுதே விட்டாள், போங்களேன். என்னோடு சொல்றதுக்கு எவ்வளவோ இருக்காம். நான்தான் அவளைக் காப்பாத்தணுமாம் - பயித்தியம்!" என்று அவன் சொல்லும்போதே, விசாலாக்ஷி மூர்ச்சை அடைந்து கீழே விழுந்துவிடுவாள் போல் இருந்தது.

"அடி சண்டாளி! என்னை ஏன் இப்படிச் சித்திர வதை பண்றாள்? நான் அவளுக்கு ஒரு அபகாரமும் செய்யலலையே!" என்று விசாலாக்ஷி பெருமூச்சு விட்டுத் திணறிக்கொண்டு கீழே உட்கார்ந்தாள். சிந்தாமணி திகைத்துப் போனான்.

"அதுக்குத்தான் அப்பவே அவரண்டை எல்லாத்தையும் சொல்றேன்னு சொன்னேன்.—நீ கேட்டயா?" என்று பாகிரதி அழத் தொடங்கிவிட்டாள்.

"இது என்ன, பாகீ, எனக்கு ஒண்ணும் புரியல்லையே! எதுக்காக நீங்கள் இவ்வளவு கஷ்டப்படணும்? இப்போ தலை போறது என்ன வந்துடுத்து?" என்று சிந்தாமணி அவர்களைச் சமாதானப்படுத்த முயன்றான்.

"இன்னும் தலை போறதுக்கு என்ன இருக்கு?" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள் குறுக்கிட்டு. கண்களைத் துடைத்துக்கொண்டு, "விசாலத்தின் தலையிலே எவ்வளவு பெரிய கல்லைப் போடலாமோ, அவ்வளவையும் போட்டுட்டாள்! அவள் குடும்பத்தைக் குலைத்தாள்!—இவ்வளவு அக்கிரமத்தைப் பண்ணி, இவள் எப்படித்தான் வாழப் போறாளோ, பார்க்கலாமே! பகவான் ஒருத்தன் இல்லாமலா போயிட்டான்!" என்றாள் சீதாலக்ஷ்மியம்மாள், குமுறிக்கொண்டு.

"என்ன, உங்களுக்குக்கூடச் சாந்தமில்லாமல் போயிட்டுதே! விமலா சொல்றதையெல்லாம் நான் நம்பிடுவேனா? சித்தியின் குணத்தை எனக்கு யாராவது எடுத்துச் சொல்லணுமா? விமலாவின் குணம் மாத்திரம் எனக்குத் தெரியாதா? அவள் அவளுடைய 'அம்மா'வின் பெண்தானே? அதுக்குள்ளே மறந்துட்டேளே! சித்தியைப்பார்த்ததுனாலேதானே நான் பாகியைக் கலியாணம் பண்ணிண்டேன். நான் சித்திமேலே வச்சிருக்கிற களரவத்தை இதுக்கு மேலே என்னாலே எடுத்துச்சொல்ல முடியல்லே. சித்தி, நீங்கள் வீணாய் மனசைப் புண்படுத்திக்காதேங்கோ. அவள் எவ்வளவு அபாண்டமான வார்த்தைகளைத்தான் சொல்லட்டுமே: நான் நம்பிவிடுவேனா? நான் நம்புவேன்னு நீங்கள் நினைத்தால், நான் அப்புறம் என்ன செய்கிறது? என்னை ஒரு பதர்னு நீங்கள் பாவிக்கிறதுபோல்தான் நான் எண்ணிக்கணும்—"

"அய்யோ! அப்படிச் சொல்லாதங்கோ!" என்று விசாலாக்ஷி கைகளைக் கூப்பினாள்.

"பின்னே சும்மா இருங்கோ! உங்கள் மனசு கஷ்டப்படறது, எங்களையும் எப்படி பாதிக்காமல் போகும்?—அந்த அசட்டுக் கழுதை என்ன சொல்றதோ, பார்க்கலாமே!"

"அவள் எதை வேணும்னுலும் சொல்லட்டும்—எக்கேடு கெட்டுப்போகட்டும்! நான் இல்லாத சமயத்துலே, என் வீட்டிலே அவள் காலை வைக்கப்படாது. நீங்கள் 'நர்ஸிங் ஹோம்'லேயிருந்து திரும்பிப் போற போது, என்னைக் கொண்டுபோய், ஆத்துலே விட்டுடுங்கோ. அவள் பித்தலாட்டத்தை நான் தெரிஞ்சுக்கணும். ஆமாம்!" என்று பாகீரதி கோபத்தோடு சொன்னுள்.

பாகீரதியின் மனம் இருந்த நிலைமையில், அவளை எதிர்த்துப் பேசக்கூடாதென்று சிந்தாமணி, 'சரி' என்று தலையை அசைத்துவிட்டுப் போய்விட்டான்.

சிந்தாமணி சென்றதும் வீட்டில் ஒரு அசம்பாவிதமான அமைதி உலாவியது. அவரவர்கள் வாய் திறவாமல் தங்கள் காரியங்களைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். விசாலாக்ஷி மாத்திரம் தரையில் சுருட்டிப் படுத்துக்கொண்டுவிட்டாள். துக்கத்திலும், சிறிது சுகம்போல் தன்மீது சிந்தாமணி வைந்திருந்த கௌரவம் கொஞ்சம் அவளுக்கு உற்சாகத்தைக் கொடுத்தது. ஆனுல், கரைத்தால் கல்லும் கரையுமே! அவளுக்கு, 'அவரோடு சொல்றதுக்கு எவ்வளவோ இருந்ததாமே! என்னத்தைச் சொல்லப்போருளோ, பாவி! தன் கண்களால் அவளுடைய புருஷனை மயக்கித் தன்வசப்படுத்திக் கொண்டுவிட்டதாகச் சொல்வாளோ? புருஷனுக்கும்—பெண் ஜாதிக்கும் ஆகாமல் செய்து, தான் அவளை வீட்டைவிட்டுத் துரத்த யத்தனிப்பதாக வர்ணிப்பாளோ? டாக்டரைத் தன் வலையில் போட்டுக்கொண்டு அவருடைய வருமானத்தை யெல்லாம் அபகரித்துக் கொள்வதாகச்

சொல்வாளோ? 'மயக்கற கண்ணுலே கொள்ளியை வை!' என்று சொன்னவள் வேறு எதைத்தான் சொல்லமாட்டாள்?'—பற்பல எண்ணங்கள் ஒன்றுக்கொன்று தாறுமாருய் ஓடிக்கொண்டு, அவள் மனத்தைத் துளைத்தன. தலை கனத்துச் சுழன்றது. சிந்திக்கச் சக்தியற்றவளாய், மனக்குரங்கின் சேஷ்டைகளுக்கு அடிமையாகித் தவித்துக் கிடந்தாள்.

## 26

## தலைக்கு வந்தது

விசாலாக்ஷிக்குத் தனிமையாகப் படுத்திருக்கவும் முடியவில்லை. அவளால் சமாளிக்க முடியாத ஒரு சஞ்சலம் அவளைப் பிடித்துக்கொண்டது. விமலாவின் வருகை ஏதேதோ பிரச்னைகளைக் கிளப்பிவிட்டது. யந்திரம் போல் எழுந்து கை கால்களை அலம்பிக்கொண்டாள். அவளுடைய பார்வை குறி இழந்துவிட்டது; மறுபடியும் தரையில் படுத்துக்கொண்டாள். திருப்பித் திருப்பி அதே எண்ணங்கள்; விமலா எதற்காக வந்திருக்கிருள்?—தூற்றுவதற்குத்தானே? அவ்வாறு தூற்ற அவள் என்ன பாவத்தைச் செய்துவிட்டாள்? தான் விலகிப் போவதற்காகத் தன்மீது இவ்வளவு பெரிய அவதூறைச் சாட்ட வேண்டுமா? அவளுக்கு ஏன் அவ்வளவு பொருமை? தான் அழகிய கண்களைக் கொண்டிருந்ததனுலேயா? கண்களால் அனைவரையும் மயக்குவதுதானே அவளுக்கு வேலை? கண்கள் அவிந்து, தான் குருடாய்ப் போனுல் அப்பொழுதாவது விமலாவுக்குத் திருப்தி ஏற்படுமா?

இவ்வாறு அவளுடைய சிந்தனைகள் ஓடிக்கொண்டிருந்தபொழுது, சமையல் அறையில் வேலை செய்து கொண்டிருந்த பாகீரதியை அவளுடைய தாயார், காய் கறிகளைத் தயாரிக்க நேரமாகிவிட்டபடியால் சில அப்ப

ளங்களைப் பொரிக்கும்படிச் சொன்னாள். பிறகு, நினைவு வந்ததன் பேரில், "அம்மா, அன்னிக்கு மழையிலே எண்ணெய் ஜாடி இருக்கிற பக்கமாக ஒழுகினதுபோல இருக்கு! எண்ணெயிலே மழைத் தண்ணி விழுந்திருக்கோ என்னவோ—ஜாக்கிரதை, அம்மா! மூஞ்சியிலே வெடிச்சு வைக்கப் போறது. எல்லாரும் பால் சூடுன்னால், நான் மோர் சூடுன்னு இருக்கேன்'' என்று அவள் அனற்றினாள். ஆனால், அந்த எச்சரிக்கை அவள் மனத்தைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்த கெட்ட யோசனைகளுக்குத் தூபம் போடுவதுபோல் இருந்தது. பேய் பிடித்தவள்போல் அடித்துப் புடைத்துக்கொண்டு எழுந்திருந்தாள். குடுகுடு வென்று சமையல் அறையில் நுழைந்தாள். பாகீரதி அடுப்புக்குப் பின்புறத்திலிருந்த அலமாரியிலிருந்து அப்பளங்களை எடுத்துக்கொண் டிருந்தாள். அடுப்பின்மீது சட்டியில் எண்ணெய் கொதித்துக்கொண் டிருந்தது. சுற்றுமுற்றும் பார்த்தாள். மூலையில் செம்பு நிறைய ஜலம் இருந்தது. "என் கண்ணைக் கரிச்சுக் கொட்டறுளே, பாவி! என் கண் அவிஞ்சு, அவள் சுகமாக இருக்கட்டும்!'' என்று பைத்தியத்துக்குள்ள ஆவேசத்தோடு. அடுப்பின் முன் உட்கார்ந்து, எண்ணெய்ச் சட்டியில் நீரைக் கொட்டப் போனாள்—கொட்டிவிட்டாள் என்றே சொல்லலாம். அதே க்ஷணத்தில், 'ஐயோ!' என்று அலறிக்கொண்டு, பாகீரதி மின்னல்போல் பாய்ந்து விசாலாக்ஷியின் தோள்பட்டைகளைப் பிடித்துப் பின்புறமாக இழுத்தாள். விசாலாக்ஷி நீரைக் கொட்டியதும், பாகீரதி அவளைப் பின் இழுத்ததும், இரண்டும் ஏககாலத்தில்-ஒரே கணத்தில்-சம்பவித்ததால், கொதிக்கும் எண்ணெய் வெடித்துச் சிதறுவதற்குள், விசாலாக்ஷியின் முகம் பின்புறமாகக் கீழே சாய்ந்துவிட்டது. அதனால், இரண்டொரு துளிகள் விசாலாக்ஷியின் முகத்தில் விழுந்தனவே ஒழிய, புண்பட்டதெல்லாம் அவளுடைய

கால்களே. பாகீரதிக்கும் கைகளில் சிறிது தெறிக்காமல் போகவில்லை. இந்த நாடகம் நடந்தது, இதைச் சொல்லும் நேரங்கூடப் பிடித்திருக்காது. ஒரே கூக்குரலும் அழுகையும் வீட்டை நிரப்பின.

"என்னை ஏண்டி இழுத்தே! ஏண்டி இழுத்தே!" என்று விசாலாக்ஷி நொந்துகொண்டாள். எண்ணெய் பட்ட இடத்தில் எல்லாம் கொப்பளங்கள் கிளம்பி விட்டன. கண்ணீர் தாரை தாரையாய் விட்டுக்கொண்டு சீதாலக்ஷ்மியம்மாள் விசாலாக்ஷியை மெள்ள ஒரு கட்டி லின்மீது படுக்க வைத்தாள். ஆனால், அப்பொழுதே விசாலாக்ஷியால் ரண பாதையைச் சகிக்க முடியவில்லை. குழந்தை வத்ஸலா வீரிட்டுக் கதறியது அவளுக்கு மேலும் துக்கத்தை அதிகரித்தது. பாகீரதி வாசற்புறம் ஓடி, பக்கத்து வீட்டில் இருந்த சிறுவனை அழைத்து, "அம்பி, ஸைக்கிளை எடுத்துண்டு, டாக்டர் நர்ஸிங் ஹோமுக்குப் போய், நான் உடனே வரச் சொன்னேன்னு சொல்லேன்; உனக்கு இடம் தெரியுமோ, இல்லையோ?" என்றாள்.

"தெரியும், அம்மாமி! எதுக்குன்னு கேட்டால்—"

"சொல்றேண்டாப்பா! எங்கள் அக்கா, விசாலம், சீடை செஞ்சுண்டு இருந்தாளாம், அப்போ அது வெடிச்சு, எண்ணெய் மேலே யெல்லாம் விழுந்துடுத்தாம்னு சொல்லு! உடனே புறப்பட்டு வரச் சொன்னேன்னு சொல்லு."

"ஆகட்டும், அம்மாமி,—ரொம்பக் காயமா?" என்று பையன் உருக்கத்தோடு கேட்டான்.

"நல்ல வேளையாய் இல்லையடா, அப்பா!" என்று பாகீரதி கண்களைத் துடைத்துக்கொண்டாள். சிறுவன் சிட்டுக் குருவிபோல் ஸைக்கிளை எடுத்துக்கொண்டு ஓடினான்.

பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் சிந்தாமணி வந்து விட்டான். உபாதை தெரியாமல் இருப்பதற்குத் தயா

ராய், தான் கொண்டுவந்திருந்த மருந்தை விசாலாக்ஷியை உட்கொள்ளும்படிச் செய்தான். ஆனால் அவனைக் கண்டதும், அவள் சகல ஜீவன்களும் ஒடுங்கிவிட்டவள்போல், விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள். தனக்கு அதிக பாதை இல்லை என்றும், தேங்காய் எண்ணெயைத் தடவினாலே சொஸ்தமாய் விடுமென்றும் சொல்லி, அவன் தன்னைப் பரிசோதிப்பது தனக்கு இஷ்டமில்லாத முறையில் அவள் நடந்துகொண்டாள். பாகீரதி அந்நியர் யாரும் உள்ளே வராமலிருக்கும் பொருட்டுத் தன் தாயாரை வாசற் கதவைத் தாழ்ப்பாளிடச் சொல்லி, 'படபட' வென்று ஆத்திரத்தோடு ஐந்து நிமிஷங்களுக்குள் விசாலாக்ஷி சேலத்துக்குத் திடீரென்று வரவேண்டிய காரணங்களைச் சொல்லிவிட்டாள். கடைசியாக, விசாலாக்ஷி வெறியோடு செம்பு ஜலத்தை எடுத்துக்கொண்டு, ''என் கண்ணைக் கரிக்கிறாளே, பாவி! என் கண் அவிஞ்சு அவள் சுகமாய் இருக்கட்டும்'' என்று சொன்ன வார்த்தைகளையும் அப்பட்டமாகத் தெரிவித்துவிட்டாள். உட்கார்ந்திருந்த சிந்தாமணி எழுந்திருந்தான்.

''சித்தி, நீங்கள் இவ்வளவு பயித்தியக்காரத்தனமாய் நடந்துப்பேள்னு நான் ஸ்வப்பனத்துலேயும் நினைக்கல்லை. யார் என்ன சொன்னாலும் நம்பிடறதுதானா? கேழ்வரகுலே தேன் ஒழுகுகிறதென்றால் கேட்பாருக்கு மதி இல்லையா? அந்த 'இடியெட்' உங்களைத் தூக்ஷிச்சுட்டால், எல்லாரும் அதை ஸத்திய வாக்குன்னு நினைச்சுண்டுடுவாளா? பாகீரதி இல்லாத போனால், என்ன ஆயிருக்கும் தெரியுமா? உங்கள் கண் அவிஞ்சு போனால், அந்த நஷ்டம் உங்களோடே மாத்திரம் போயிடுமா? உங்களை விடப் பத்து பங்கு அதிகமாய்க் கஷ்டப்படறவள் பாகீதான்—அதை மறந்துடாதங்கோ!'' என்று அவன் சொன்னபொழுது, பாகீரதி அடக்கி வைத்திருந்த

துக்கத்தையெல்லாம் வெளியிட்டுக்கொண்டு, 'ஹோ!' என்று கதறத் தொடங்கிவிட்டாள்.

"வேண்டாண்டி, அம்மா! பகவான் இவ்வளவு தூரம் கிருபை செய்தாரேன்னு சந்தோஷப்படணும். தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சே!" என்று சீதாலக்ஷ்மியம்மாள் பாகீரதியைத் தட்டிச் சமாதானப் படுத்தினுள்.

"சரி, இந்த மெழுகைப் புண்பட்ட இடத்துலே எல்லாம் தடவிடுங்கோ. மூணு, நாலு நாளுலே சரியாப் போயிடும். ஆனுல், சித்தி, நீங்கள் எனக்கு ஒரு வாக்குத் தத்தம் செய்யணும். மனசுக்கு எவ்வளவு கஷ்டம் வந்தாலும், இந்த மாதிரி அசட்டுக் காரியங்களைக் கனவிலேயும் நினைக்காதங்கோ!..என்ன?"

"எனக்குப் புத்தி வந்தது. யாரு மேலேயும் குத்தம் சொல்றதுக்கு இல்லை. எல்லாம் காலக் கோளாறு. நான் பயந்தது-உங்கள் மனசும் கசந்து போயிடுமோன்னுதான்."

"அது எப்படிப் போகும், சித்தி? சரி, போனது போச்சு, இனிமேல் நடக்கிறதைப் பார்க்கணும். இவ்வளவு தூரம் வந்தப்புறம், தனியாய்ப் போயிடறதுதான் உத்தமம்.."

"அதுலே சந்தேகம் வேறயா?" என்ருள் விசாலாக்ஷி குறுக்கிட்டு.

"டில்லியிலிருந்து நாராயணன் கடுதாசி எழுதியிருக்கான். ஆனுல், இந்த விஷயத்தைப்பத்தி ஒண்ணுமே இல்லை. அவனுக்கும் மனச்சாந்தி இல்லைங்கிறது மாத்திரம் நன்ருத் தெரியறது. இன்னும் நாலைந்து நாளிலே வருணும். ஒழிஞ்ச சமயம் பார்த்து என்னைக் கட்டாயம் பட்டணத்துக்கு ஒரு தடவை வந்து போகும்படி எழுதியிருக்கான்."

"இதை எல்லாம் சொல்றதுக்குத்தான் இருக்கும்" என்ருள் பாகீரதி.

"சொல்றதோடு மட்டும் இல்லை. மேலே என்ன செய்யலாம்னு யோசிச்சிண்டு இருப்பான்.—சரி, இனிமேல் அவாள் வீட்டுக்குச் சாப்பிடப் போக முடியாது. ரொம்ப நாழி ஆயிடுத்து. ஏதோ சாக்குச் சொல்லிக்கிறேன் இங்கேயே சாப்பிட்டுட்டு நேரே ஆத்துக்குப் போறேனே பாகி!" என்று சிந்தாமணி தன் மனைவியின் அபிப்பிராயத்தைக் கேட்டான்.

"நானும் அப்படித்தான் நினைச்சேன். அவள் வரத்துக்கு முன்னாலேயே நீங்கள் போயிடுங்கோ" என்று அவள் தன் கணவனுக்குப் பிரத்தியேகமான இடத்தில் இலை போட்டுப் பரிமாறி, மேலே நடக்கவேண்டிய விஷயங்களைக் குறித்து அந்தரங்கமாகப் பேசினாள்.

இப்பொழுது, வியாபார விஷயமாக அலைந்து வந்த அண்ணாசாமி ஐயர், விசாலாக்ஷி வேதனையுடன் மின்சார விசிறியின் கீழே கட்டிலில் படுத்திருந்ததைப் பார்த்துப் பிரமித்துப் போனார். அவரைக் கண்டதும் சீதாலக்ஷ்மியம்மாள், பேச வேண்டாமென்று சமிக்ஞை செய்து அவரைத் தனியாக அழைத்துச் சென்று, நடந்ததையெல்லாம் ரகசியமாக எடுத்துச் சொன்னாள்.

சிந்தாமணி தன் வீட்டுக்குத் திரும்பியபொழுது, அண்ணா, மன்னி, விமலா மூவரும் தனக்கு முந்தியே அங்கே வந்திருப்பதைக் கண்டு அவன் சற்று வியந்தான். "அங்கே தலையை சாய்க்கிறதுக்குக்கூட இடமில்லை அதனாலே, சாப்பிட்டுக் கை அலம்பினதும் கிளம்பிவிட்டோம்" என்று தருமாம்பாள் காரணம் சொல்வது போல் கூறினாள். பிறகு சிறிது நேரம் சாவு வீட்டுச் சமாசாரங்களைப் பேசிவிட்டு ஆத்திரத்தைக் கஷ்டத்தோடு அடக்கி வைத்துக்கொண்டிருந்த சிந்தாமணி, "எங்காத்துக் கிடாரி தலையீத்துக்கன்னு போட்டிருக்கு, வந்து பாரேன், விமலா!" என்று அவன் விமலாவைப் புழைக்கடைப்புறமாக அழைத்துக்கொண்டு சென்றான்.

ஆனால், அவன் மேலே பேசுவதற்கு முந்தியே, ஒரே நோக்கத்தோடு பதைத்துக்கொண்டிருந்த விமலா, "நான் எவ்வளவோ கோட்டை கட்டினேன், சித்தப்பா! எல்லாம் இடிஞ்சு போச்சே! நீதான் என்னைக் காப்பாத்தணும்" என்று புலம்பியபொழுது, சிந்தாமணியால் கோபத்தை அடக்க முடியவில்லை. அவளைக் கட்டி வைத்துச் சாட்டையால் ரத்தம் பெருகப்பெருக அடித்தாலும் பாவமில்லை என்று அவனுக்குத் தோன்றியது. சூழ்நிலைகளைச் சோதிக்கும் சாந்தத்தை இழந்தான். "பகவான் உன்னைக் காப்பாற்றுவாரான்னு எனக்குச் சந்தேகம்!" என்று அவன் சீறினான். "சரி, இங்கே வேண்டாம், தோட்டத்துக்குப் போகலாம் வா" என்று அவன் 'விடுவிடு' என்று முன் நடந்தான். விமலா, திகைத்து நடுங்கியவாறு அவன் பின் ஓடினாள்.

சாய்வு மணைகள் போடப்பட்டிருந்த மாமரத்தண்டை வந்ததும், "உன் ஆசை நிறைவேறிப் போச்சு, போ!—சித்தி கண்ணுலே கொள்ளியை வைக்கணும்னு சொன்னயோ இல்லையோ?—அவளே கொதிக்கிற எண்ணெயை ஊத்திண்டுட்டாள்! உனக்குத் திருப்திதானே? அவள் கண் அவிஞ்சு நீ சுகமாய் இருக்கணும்னு, எண்ணெய்ச் சட்டியிலே கொதிச்சுண்டு இருந்த எண்ணெயிலே சொம்புத் தண்ணியைக் கொட்டினாளாம். உடம்பெல்லாம் கொப்பளிச்சுப் போய், ரணபாதை தாங்கமுடியாதே அவஸ்தைப்படறாள். அந்தக் கண்றாவியினாலேதான் நான் அங்கே சாப்பிட வரல்லே—தெரிஞ்சுதா? இனிமேல் நீ சுகமாய்த் தூங்கலாம்; இனிமேல் இந்த ஜன்மத்துலே நீ இருக்கிற இடத்திலேயே அவள் இருக்கமாட்டாளாம்—இதுக்கு மேலே உனக்கு என்ன வேணும்? இதுக்காக எங்கிட்டேயும் அவளைத் தூஷிப்பானேன்?—அதுலே உனக்கு என்ன சந்தோஷம்?"

"அய்யோ சித்தப்பா! நான் தூஷிக்க வரல்லையே! சித்தியைப் பார்த்து மன்னிப்புக் கேட்டுக்கணும்னுதான்

வந்தேன். ஐயய்யோ! நான் என்ன பண்ணுவேன்! (கைகளைப் பரிதாபகரமாய் உதறினாள்.) சித்திக்குக் கண் வராதா? இதோ பார், சித்தப்பா, உன் காலுலே விழறேன், சித்திக்கு என் கண்ணைக் கொடுத்துடறேன்! நல்ல கண்ணைப் பிடுங்கி வச்சால் வரும்னு சொல்றாளே, புறப்படு, புறப்படு, இப்பவே எடுத்து வச்சிடுங்கோ.—என் பேச்சைக் கேழ்க்காத போனையோ, சித்தி கண் போனது போய், நான் சாகறது நிஜம். அதோ பார்! திருமணி முத்தாறுலே நுங்கும் நுரையுமாய் வெள்ளம் வருது! விழுந்துடறேன்! அணைக்கட்டுலேகூட என் பிணத்தைக் கண்டுபிடிக்க முடியாது!'' என்று அவள் இரைந்தபொழுது, பேசியது அண்ணா கோபால ஐயரின் பெண் அல்ல, தருமாம்பாள் வயிற்றில் பிறந்த மகள் என்று சிந்தாமணி ஊகித்துச் சிறிது பயந்துவிட்டான் என்றே சொல்லவேண்டும்.

''உயிரோடே இருந்து ஒரு குடும்பத்தை நாசமாக்கி விட்டே! செத்து இன்னொண்ணையும் பாழாக்கி விடு; உன்னாலே வேறே நல்லது என்ன செய்ய முடியும்? நீ நல்ல இடத்துலே வாழ்க்கைப்பட்டு, சுகமாய் வாழணும்னு நான் எவ்வளவு பிரயத்தனம் செய்தேனோ, அது பகவானுக்குத் தெரியும்! சே! சே!! பதர்!'' என்று அவன் மெய்ம் மறந்து சலித்துக்கொண்டது, விமலாவின் இருதயத்தில் பாணம்போல் பாய்ந்தது. விமலா சிந்தாமணியின் பாதங்களைப் பிடித்துக்கொண்டாள். ''சித்தப்பா! சித்தப்பா! நீ கஷ்டப்பட்டதை நான் மறக்கல்லே. உன் மனசு எனக்குத் தெரியும், சித்தப்பா! புத்தி இல்லாமல் பிசகு செஞ்சுட்டால், மன்னிப்பே கிடையாதா? உன்கிட்டே சொல்லாமல், வேறே யாரண்டை நான் சொல்லுவேன், சித்தப்பா?—அவருக்கு என் மேலே இருந்த பிரியம் குறைஞ்சிடுமோன்னு பயந்துட்டேன். எனக்கு புத்தி

கெட்டுப் போச்சு. சித்தியின் அழகாலே எனக்கு ஆபத்து வரும்னு நம்பினேன். அவளும் சின்னவள்தானே!— சித்தப்பா, சத்தியமாய்ச் சொல்றேன், எனக்கு ஒண்ணும் புரியவில்லை. ஆத்திரத்திலே என்னென்னமோ செஞ்சுட்டேன். நாலு நாளைக்கு முந்தி, சித்தி தங்கத்துக்கு எழுதின இரண்டு கடுதாசிகளை எனக்கு அவர் அனுப்பிச்சார். அதைப் படிச்சதும், எனக்குத் தலையிலே இடி விழுந்தாப்போலே ஆயிடுத்து - நீயே படிச்சுப் பார் - எப்படியாவது சித்திக்குக் கண் வரும்படி செஞ்சுடு. நான் பதர் இல்லை, சந்தோஷமாய் என் கண்ணைக் கொடுக்கிறேன்...."

அவளைச் சும்மா இருக்கும்படி கையைக் காட்டி, சிந்தாமணி அவ்விரண்டு கடிதங்களையும் முழுக் கவனத்தோடு படித்தான். அவள்மீது இருந்த துவேஷமும் கோபமும் தணிந்தன.

"பயப்படாதே! சித்தி கண்களுக்கு ஒரு ஆபத்தும் இல்லை. எண்ணெய் கண் பக்கத்துலேயே விழவில்லை" என்று அவன் சமாதானப்படுத்தினதும், "அம்மாடீ!" என்று அவள் பெருமூச்சு விட்டு, மணையின்மீது சோர்ந்து சாய்ந்தாள். சிந்தாமணியும் மணையின்மீது உட்கார்ந்து கொண்டான்.

"இந்த மாமரம் நான் பிறக்கறதுக்கு முந்தியே பிடிச்சு இருக்கு. இதனுடைய பழத்தை எத்தனையோ பேர் சாப்பிட்டு இருக்காள். இதன் நிழலிலே எத்தனையோ பேர் சிரமப் பரிகாரம் பண்ணிண்டு ஆனந்தமாய்க் காலத்தைக் கழிச்சிருக்கா. இது இந்த ஸ்திதிக்கு வரதுக்கு எவ்வளவு காலம் ஆயிருக்கும்? செடியை வச்சவாள் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கணும்? — இப்போ இதை வெட்டித் தள்ளறதுக்கு எத்தனை நாழியாகும்? கொஞ்சம் யோசிச்சுப் பார். நீ செஞ்ச வேலையும் இதுமாதிரிதான்."

"நான் செஞ்சது தப்பு!..தப்பு!" என்று விமலா கன்னத்தில் போட்டுக்கொண்டாள். "அதுக்காக என்ன

தண்டனை செஞ்சாலும் நான் பட்டுக்கறேன். நான்தான் ஒத்துக்கறேனே; அவர் மேலே இருந்த பிரியத்துனாலே, நான் பயந்து பெரிய அபகாரத்தை செஞ்சுட்டேன் — குத்தம் செஞ்சவாளுக்கு விமோசனமே கிடையாதா, சித்தப்பா..?'' என்று அவள் அழுதாள்.

சிந்தாமணி பரத்தியானமாய் உட்கார்ந்திருந்தான்.

''என்னை சித்திகிட்டே அழைச்சிண்டு போ! அவள் காலுலே விழறேன்! அவள் சுகத்துக்காக நீ என்ன ஏற்பாடு செஞ்சாலும் நான் அதன்படி நடக்கறேன். இப்போதான் தெரியறது சித்தப்பா, அவளுக்கு எவ்வளவு அபகாரத்தை செஞ்சுட்டேன்னு! எனக்கு ஏதோ சனி பிடிச்சிருக்கு. என்னென்னவோ தோண்றது. அவளை இமிசை பண்ணினதுக்கு நான் அநுபவிச்சுத்தான் தீரணும் போலிருக்கு! ஸ்வாமி என்னை என்ன பண்ணப் போறாரோ!'' என்றாள் பயத்தோடு.

''சரி, போனதைப் பத்திப் பேசறதுலே என்ன பிரயோசனம்? நீ இந்த ஊருக்கு வந்திருப்பதைக் கேட்டதுக்கே, சித்தி அவ்வளவு ஆபத்தை உண்டாக்கிண்டாளே, முன் பின் சொல்லாதே, நீ அவளண்டை போனால், அது இன்னும் விபரீதமாயிடும். நான் சொல்றபடி கேள்: என்னோடே நர்ஸிங் ஹோமுக்கு வா. எங்கள் நர்ஸ் ரொம்ப நல்லவள். அவளோடு பேசிண்டு இரு. அதுக்குள்ளே நான் சித்தியைப் பார்த்து, அவளை சரிப்படுத்தி, அப்புறம் உன்னை அழைச்சிண்டு போறேன். சரி, எழுந்திரு'' என்று இருவருமாகத் தோட்டத்திலிருந்து வீட்டுக்குள் சென்றனர்.

# 27

# பட்ட காலிலே படும்

விசாலாக்ஷியின் ரண பாதையைத் தணிக்கச் சாதகமாயிருந்த மருந்துகள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு சிந்தாமணி தன் மாமனார் வீட்டுக்குச் சென்றான். அங்கே அனைவரும் அவன் வரவை ஆத்திரத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்ததை அவன் கண்டுகொண்டான். மனவேதனைக்குத் தக்கவாறு, தேக பாதையும் அதிகரித்து விசாலாக்ஷிக்கு ஜுரம் வந்துவிட்டது. ஆனால், இது சிந்தாமணி எதிர்பார்த்ததே. அவள் படுக்கையை நோக்கி வந்துகொண்டே, "சித்தி, விமலா வந்தது உங்கள் காலில் விழுந்து, மன்னிப்புக் கேட்டுக்கிறதுக்காக்கும்!—தூஷிக்கிறதுக்கு இல்லை. நீங்கள் தங்கத்துக்கு எழுதின கடுதாசுகளிலே இரண்டை நாராயணன் அவளுக்கு அனுப்பிச்சு, ஒரு சாட்டையும் கொடுத்திருப்பான் போலிருக்கு. இது நீங்கள் எழுதின கடுதாசுகள்தானே?" என்று அவன் விமலாவினிடமிருந்து கொண்டுவந்த இரண்டு கடிதங்களையும் அவளிடம் கொடுத்தான்.

விசாலாக்ஷி திக்பிரமை அடைந்தாள்; எழுந்து உட்கார முயன்றாள். ஆனால், சிந்தாமணி கண்டித்து எழுந்திருக்காமல் தடுத்துவிட்டான்.

"சித்தி, நீங்கள் எல்லாம் காலக்கோளாறு என்று சொன்னதுதான் வாஸ்தவமான பேச்சு. உங்களைப் பார்க்கணும்னு அவள் புழுவாய்த் துடிச்சிண்டு இருக்காள். ஆனால், நீங்கள் இஷ்டப்பட்டால் ஒழிய, அவள் வரமுடியாதுன்னு கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டேன். அவளைத் திட்டிவிட்டு உங்களுக்கு கண்ணே போயிட்டதாக நான் சொன்னபோது அவள் தவிச்சதை என்னாலே சொல்லி முடியாது. தன் கண்ணை உடனே பிடுங்கிக் கொடுத்துடறேன்னு குதிச்சாள். உடனே கண் டாக்

டரைக் கூப்பிட்டு, அவள் கண்ணை எடுத்து உங்களுக்கு வச்சுடச் சொன்னாள். அப்படிச் செய்யாத போனால், ஆத்துலே விழுந்து பிராணனை விட்டுடறேன்னு ஆரம்பிச்சாள். நிஜம்மாவே, எனக்குப் பயமாய்ப் போயிடுத்து. அப்புறம் எல்லாத்தையும் சொல்லி, அவளைச் சமாதானப் படுத்தறத்துக்குள்ளே எனக்குப் போரும் போரும்னு ஆயிடுத்து. அவளும் அவ்வளவு கெட்டவள் இல்லை. ஆனால் அசடு,—அசடுலேயும் விபரீதமான அசடு. குத்தம் செஞ்சவாளுக்கு விமோசனமே கிடையாதான்னு அவள் அழறபோது என்ன செய்யறது, சித்தி?''—விசாலாக்ஷி ஒன்றும் பேசவில்லை. உலர்ந்த உதடுகளை நாவால் தடவிக்கொண்டாள்.

''அவளை இங்கே அழைச்சிண்டு வரதுலே உங்களுக்கு ஏதாவது ஆக்ஷேபணை இருக்கா?''

''ஆக்ஷேபணை என்ன இருக்கு? அவள் எங்கிட்டே மன்னிப்புக் கேட்கறதுக்குத்தான் வந்திருக்கான்னு நீங்கள் நம்பறேளா?'' என்று விசாலாக்ஷி ஈனஸ்வரத்தில் கேட்டாள்.

''அதுலே சந்தேகம் இல்லை, சித்தி! அவள் துடிக்கிறதைப் பார்த்தால், நீங்களே அவளுக்குப் பரிஞ்சுண்டு வருவேள். இல்லாத போனால், நீங்கள் தங்கத்துக்கு எழுதின கடுதாசுகளை ஏன் அவள் எடுத்துண்டு ஓடி வரணும்? இல்லை சித்தி, நிஜமாகவே மனசு உருகிச் சாகிறாள். இருந்திருந்து, உங்களுக்கு அவள் செய்த அபகாரத்துக்கு, பகவான் பெரிய தண்டனை விதிக்கப் போறதாகப் பேத்தறாள்.''

''ஐயய்யோ! வேண்டவே வேண்டாம். எல்லாக் கஷ்டங்களும் என்னோடு நிக்கட்டும்.—சரி, அழைச்சிண்டு வாங்கோ'' என்று விசாலாக்ஷி அநுமதி கொடுத்தாள்.

அரை மணி நேரத்துக்கெல்லாம், சிந்தாமணி விமலாவோடு வந்து சேர்ந்தான். விசாலாக்ஷியின் முகத்தில்

இருந்த கொப்புளங்களைப் பார்த்து, விமலா தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டாள். பிறகு, மிகுந்த கனிவோடு, 'சித்தி! . . சித்தி!' என்று சொல்லிக்கொண்டு, மெல்லிய வஸ்திரத்தால் மூடப்பட்டிருந்த அவளுடைய கால்களைப் பிடித்துக்கொண்டாள். விசாலாக்ஷி பாதை பொறுக்க முடியாமல், முகத்தைச் சுளித்து அவஸ்தைப் பட்டாள். அப்பொழுது, சிந்தாமணி, "தொடாதே, தொடாதே! சித்திக்குக் காலுலேதான் ரொம்பப் புண் பட்டிருக்கு" என்று எச்சரிக்கை செய்தான்.

"ஐயோ! எனக்குத் தெரியாதே!" என்று சரே லென்று விமலா கைகளை எடுத்தாள். "உன்னை இமிசை செய்யறதே எனக்குப் பிழைப்பாய்ப் போயிடுத்தே! எதுக்கோ எனக்கு இப்படி எல்லாம் வந்து சேருகிறதே: ஏதோ சனி என்னைப் பிடிச்சிண்டிருக்கு, சித்தி. இதெல் லாம் நல்லதுக்கு இல்லை. ஏதோ வரப்போறது. இன்ன தூன்னு எனக்குச் சொல்லத் தெரியல்லை!—"

"ஒண்ணும், வராது, விமலா — இவ்வளவு போதாதா?" என்று விசாலாக்ஷி கண்ணீர் விட்டாள்.

"அழாதே, அம்மா! கண்ணீர் பட்டால், புண் இன்னும் சித்தே எரியுமே" என்று சீதாலக்ஷ்மியம்மாள் தன் மகளின் கண்களை மெதுவாகத் துடைத்தாள். சித்திக்குக் கண்ணீர் வரும்படி தான் நடந்து கொண்டதும் விமலாவுக்கு ஒரு பிசகாகப்பட்டது. அதை நினைத்து அவள் குன்றியது போதாதுபோல், சீதாலக்ஷ்மி யம்மாள், "நீங்களெல்லாம் எப்போ ஊருக்குப் போறேள்?" என்று கேட்டாள்.

"இன்னி ராத்திரி வண்டிக்கு. ஆனால், அப்பாவையும் அம்மாவையும் போகச் சொல்லிவிட்டு, சித்திக்கு உடம்பு சரியாய்ப் போகிற வரையிலும், எனக்கு இங்கேயே இருக்கணும்னு இருக்கு, சித்தப்பா!" என்று, தன் கோரிக்கைக்குச் சிந்தாமணியின் உதவியை நாடுவது

போல் அவள் அவனைப் பார்த்தாள். பிறகு, "நான் உங்களுக்கு ஒரு கஷ்டத்தையும் வைக்கமாட்டேன், அம்மாமிபாகீ, இங்கே நான் ஒரு வாரம் இருக்கப்படாதா?'' என்று அவள் அவ்விருவரையும் கேட்டுக்கொண்டாள்.

"அவாளைக் கேழ்க்கணுமா, விமலா? மகராஜியாய் இரேன். ஆனால் உங்கம்மா ஏதாவது சொல்லப்போறாள்'' என்றாள் விசாலாக்ஷி.

''எங்கம்மா சொல்றதுக்கு என்ன இருக்கு? அவள் இனிமேல் என் வழிக்கு வரமாட்டாள். அவளாலே ஆன தீங்கை அவளும் பண்ணியாச்சு!'' என்று தன் மனத்தில் இருந்ததை எல்லாம் பச்சைக் குழந்தைபோல் லஜ்ஜை விட்டுச் சொல்லி அழுதாள். இருவர் துயரும் ஒன்றுபட்டது. அதன் மூலம் அன்பும் ஆதரவும் உதித்தன. சீதாலக்ஷ்மி அம்மாளுக்கும் பாகீரதிக்குங்கூட மனது இரங்கிவிட்டது.

ஒரு வாரம் கடந்ததே தெரியவில்லை. விசாலாக்ஷியின் ரணம் அநேகமாய் ஆறிவிட்டது. ஒரு வருஷமாகக் கொந்தளித்துக்கொண்டிருந்த விமலாவின் மனத்துக்கும் இப்பொழுது ஒருவித சாந்தி ஏற்பட்டது. இவ்வளவு அன்போடு கூடிய சுபாவமுள்ளவள் அவ்வளவு விபரீதமாய் நடந்துகொள்ள வேண்டுமானால், அது விதியின் கோளாறுதான் என்ற தீர்மானத்துக்கு, சீதாலக்ஷ்மியம்மாளுங்கூட வந்துவிட்டாள். சிந்தாமணி தினம் பட்டணத்துச் செய்தி ஏதாவது ஒன்று கொண்டு வந்துகொண்டேயிருந்தான்: நாராயணன் சென்னைக்கு வந்து ஆஸ்பத்திரியில் வேலையில் அமர்ந்து இரண்டு மூன்று தினங்களானதாகத் தெரிய வந்தது. சேலத்துக்கு விமலா வந்திருப்பதையும், விசாலாக்ஷிக்கு நேரிட்டிருக்கவேண்டிய பெரும் விபத்தைக் குறித்தும் சிந்தாமணி அவனுக்குத் தெரியப்படுத்தவில்லை. அவனுக்கு மனக் கஷ்டத்தைக் கொடுக்கச் சிந்தாமணி விரும்பாததேதான் காரணம். இப்

பொழுது அனைவரும் கூடி ஆலோசித்ததெல்லாம் நாராயணனுக்கும் விமலாவுக்கும் எவ்வாறு சமாதானத்தைச் செய்யவேண்டியது என்பதைப் பற்றித்தான்.

ஒரு நாள் சாயங்காலம். விசாலாக்ஷி, விமலா, பாகிரதி மூவருமாய் இந்த விஷயத்தைப்பற்றித் தீவிரமாய் ஆலோசித்துக்கொண்டிருந்தபொழுது, சிந்தாமணி வெகு வேகத்தோடு உள்ளே நுழைந்தான். என்றும் காணாத ஒரு பதற்றத்தை அவனிடத்தில் விசாலாக்ஷி கண்டாள். ஏதோ அநர்த்தமென்று அவள் அறிந்துகொண்டாள்.

"நாராயணன் சொல்லி மாமா எனக்குத் தந்தி அடிச்சிருக்கார், சித்தி. அவனுக்கு விஷ ஜுரம் கண்டிருக்காம்—" என்று சொல்லிக்கொண்டே சிந்தாமணி உடம்பை ஒடித்துக்கொண்டான். அவன் மனம் தவிப்பதை விசாலாக்ஷி ஊகித்துக்கொண்டாள்.

"இரண்டு மூணு நாளுலே சரியாய்ப் போயிடுமோ, இல்லையோ?"

"போகலாம்—இது சாதாரண ஜுரமில்லை, சித்தி! இதுக்கெல்லாம் இப்போதான் மருந்து கண்டுபிடிச்சிண்டு இருக்காள்" என்று அவன் சொல்லும்போது, ஒவ்வொரு வார்த்தையையும் அடி வயிற்றிலிருந்து வெட்டி எடுப்பது போலிருந்தது. "கெட்டிக்காரனாக இருந்து, என்ன பிரயோசனம்?—அவசரக்குடுக்கை! கையிலே காயத்தைப் பண்ணிண்டிருப்பான். சரி, விமலா, தயாராய் இரு. என்னோடே எட்டு மணிக்கு ரயிலில் ஏறணும். பகவான் இருக்கார்!"

"சித்தப்பா, உயிருக்குப் பயமில்லையே?" என்று விமலா கெஞ்சினாள்.

"பகவானுடைய கிருபை இருக்கிற வரையிலும் ஒரு பயமும் இல்லை. வைத்தியத்தினாலேயே எல்லாம் ஆயிடறதா என்ன? இருந்தாலும், அவனுக்கு வாழ்க்கையிலேயே இவ்வளவு வெறுப்பு வரும்படி பண்ணப்

படாது!'' என்று அவன் கூறியபொழுது, விமலா 'ஓ!' என்று கதறி அழ ஆரம்பித்துவிட்டாள்.

''சரி, எனக்கு இனிமேல் இங்கே இருக்கச் சகிக்காது. நானும் விமலாவோடு வறேன்'' என்ருள் விசாலாக்ஷி.

நீங்கள் அங்கே வந்து செய்யற காரியம் என்ன, சித்தி? உங்களுக்கு இன்னும் 'ரெஸ்டு' வேணும்.''

''எனக்கு என்ன வந்துடுத்து கேடு? உங்களை ரொம்பக் கேட்டுக்கறேன். என்னைத் தடுக்காதங்கோ, நான் வந்தால், அவருக்கு நிச்சயம் ஸ்வஸ்தமாயிடும். என் பிரார்த்தனை வீணுய்ப் போகாது. அவர் இல்லாத போனுல், அன்னிக்கே நான் பட்டணத்துலே செத்துப் போயிருப்பேனே! அவர் விருத்தியாகி, குழந்தை குட்டிக்ளோடே சுகமாய் வாழணும்னு நான் தினம் வேண்டிக்கிறேனே! இதுலே கூடவா என்னை பகவான் கை விட்டுடுவார்?'' என்று அவள் அழ ஆரம்பித்தபொழுது, விமலா தன் ஆதரவுக்கு அவள் தோள்பட்டைகளைப் பிடித்துக் கொண்டாள்.

அதன்பேரில், விசாலாக்ஷியின் வேண்டுகோளை மறுக்க முடியாதவனுய், சிந்தாமணி அன்றிரவு அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு சென்னைக்கு ரெயில் ஏறிஞன்.

# 28

## சமர்ப்பணம்

தந்தியைக் கண்டதும், சிந்தாமணி ஒரு நிமிஷங் கூடத் தாமதிக்கமாட்டான் என்ற நம்பிக்கையோடு, ஜானகிராம ஐயர் கீழே ஹாலில் கடிகாரத்தைப் பார்ப்பதும்—தெருப் பக்கம் போவதுமாக அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். கடைசியாக சிந்தாமணி வந்து இறங்கியபொழுது, ''அப்பா, சிந்தாமணி, வந்தாயாடா?

இனிமேல் எனக்குப் பயம் இல்லையடா, அப்பா. எனக்குப் பாதி உயிர் வந்துடுத்து'' என்று அவர் கண் கலங்கினுர்.

"எப்படி இருக்கு, மாமா?''

''நான் என்னத்தைச் சொல்லுவேன்? ஜுரம் குறையல்லே. இன்னும் இரண்டு நாள் போகணும்னு சொல்ருே. 105 டிகிரி இருக்கு. பிரக்ஞை இல்லே. ஆனுல், மெட்ராஸ்லே இன்னும் பெரிய டாக்டர்கள் கிடையாது. லக்ஷ லக்ஷமாய்க் கொடுத்தாலும் அவ்வளவு சிரத்தையாய்ப் பார்க்கமாட்டார்கள். ஈசுவரனுடைய கிருபை தான் வேணும். எனக்கு என்னவோ உன்னைக் கண்டாலே அவன் எழுந்திருந்திடுவான்னு தோண்றது'' என்று அவர் கண்ணீர் விட்டார்.

"ஒண்ணும் பயப்படாதங்கோ, மாமா. சரி; விமலா, சித்தி—நீங்களும் அவனைப் பார்க்க வந்தால் துளி சத்தங் கூடப் பண்ணப்படாது'' என்று எச்சரித்து, அவன் பக்கத்துக் கட்டிடத்து மாடிக்குச் சென்ருன். விமலாவும் விசாலாக்ஷியும் நிச்சப்தமாய்ப் பின்பற்றினுர்கள். நாராயணன் அசைவற்றுப் படுத்திருந்தான். உயர்ந்து தணியும் மார்பிலிருந்தே அவன் மூச்சு விடுவதாகத் தெரிந்தது. சிந்தாமணி, அங்கே வேலை பார்த்துக்கொண்டிருந்த நர்ஸுக்குச் சமிக்ஞை செய்து அவன் நிலைமையின் விவரங்களைக் குறித்திருக்கும் சீட்டை வாங்கிப் பார்வையிட்டான். அவன் யாரென்பதைத் தெரிந்துகொண்ட நர்ஸ் பணிவுடன் அவனுக்கு வேண்டிய சகாயத்தைச் செய்தாள்.

இதற்குள், விமலா வாயைக் கெட்டியாய் மூடிக்கொண்டிருந்தபோதிலும், துக்கத்தை அடக்க முடியாமல் தேம்ப ஆரம்பித்தாள். விசாலாக்ஷியும் கண்களைத் துடைத்தவாறே நின்ருள். சிந்தாமணி, அவர்களுக்கு ஜாடை காட்டிக் கீழே போகச் சொன்னுன். பிறகு, அரை மணி நேரம் அங்கிருந்துவிட்டு அவன் கீழே இறங்கி

வந்தான். ஜானகிராம ஐயரின் பிரச்னைகளுக்கு, "பய மில்லை" என்று சிந்தாமணி சொன்னபோதிலும், அவன் முகத்தில் 'ஈ ஆடாமல்' இருப்பதை விசாலாக்ஷி கவனித் தாள். நாராயணனைப் பார்ப்பதற்கு வந்தவர்களையெல் லாம் சிந்தாமணி அவனை உபத்திரவம் செய்யக்கூடா தென்று நல்ல வார்த்தைகளைச் சொல்லி அனுப்பிவிட் டான். ஆனல், புரசைவாக்கத்திலிருந்து ஜானகிராம ஐயரின் சிற்றம்மை காமாக்ஷியம்மாள் வந்தபொழுது, அவனல் தடைசெய்ய முடியவில்லை.

"என் குழந்தையைப் பார்க்கிறதுக்கு—நீ என்ன டாது?" என்று அவள் கடிந்துகொண்டபொழுது, "சத் தம் போடப்படாது, பாட்டி!" என்று சிந்தாமணி தாழ்மையுடன் அவளை எச்சரித்தான்.

"எனக்கு எல்லாம் தெரியும். நீ வாயை மூடிண்டு போ!" என்று அவள் அதட்டியபொழுது, சிந்தாமணி போகாமல், பூனைபோல் அவளைப் பின்பற்றினன்.

காமாக்ஷியம்மாளுக்குத் துக்கம் இல்லாமல் இருக் குமா? "இந்தப் பிள்ளைக்கும் இப்படி வருமா!" என்று கைகளை விரித்தாள். கடவுளைப் பிரார்த்தித்தாள். சிந்தாமணியை ஒரு துரும்புபோல் நினைத்து, நாராயணன் உடம்பைத் தொட்டுப் பார்த்தாள்.

பிறகு கீழே இறங்கி வந்து, "எப்போதும்போல இருக்கயாடா நீ? நீ பழைய ஜானகிராமனு! பெரியவாள், சின்னவாள்னு எதாவது வச்சிருக்கயா? குடுகுடுனு எத்தை யாவது பண்ணிடுறது, அப்புறம் அநுபவிக்கிறது. சில துடைகாலிகள் வீட்டுலே காலை வச்சாலே அநர்த்தம் தான். ஆனல் எனக்கு மனசு கேழ்க்கிறதா?—அழா தேடா, அப்பா! ஸ்வாமி புண்ணியத்துலே தேவலையாய்ப் போயிடும் பயப்படாதே. நான் போய், சாஸ்திரிகள் நாலுபேரை வச்சிண்டு ஜபம் பண்ணச் சொல்றேன். ஜுரம் இறங்கிடும். ஜபம் வீணகாது. நீ ஒண்ணும்

அதைரியப்படாதே. பகவானுய்ப் பண்றது பாதி, நாம்பளாப் பண்ணிக்கிறது பாதி. அம்மா, விசாலம், நான் போயிட்டு வறேண்டி. நாளேக்கு சீக்கிரமாவே வந்துடறேன்'' என்று காமாக்ஷி அம்மாள் புறப்பட்டுப் போனுள்.

அங்கிருந்தவர்கள் அனைவரும் புயல் அடித்து ஓய்ந்ததுபோல் பெருமூச்சு விட்டார்கள்.

ஜானகிராம ஐயர் முதலானோர் ஓர் இரவையும் பகலையும் எப்படிக் கழித்தார்களோ அவர்களுக்கே தெரியாது. சுசீலா்வும், சாப்பாட்டு நேரம் போக, மீதிக் காலத்தையெல்லாம் அவர்களுடனேயே கழித்து, அவர்களை ஆதரித்து வந்தாள். சிந்தாமணி வந்த மூன்ரும் நாள், ஜுரம் கட்டுக்கடங்கித் தணிந்துவிட்டது என்ற நற்செய்தியை அனைவருக்கும் குதூகலத்தோடு தெரிவித்தான்.

''பிரக்ஞை வந்துடுத்தா!'' என்று ஜானகிராம ஐயர் ஆவலோடு கேட்டபொழுது, ''நேத்திக்கே என்னைத் தெரிஞ்சிண்டுட்டானே, மாமா! ஆனுல் இப்போதான் பூர்த்தியாய் சித்த ஸ்வாதீனம் ஏற்பட்டிருக்கு'' என்று சிந்தாமணி பதில் அளித்தான்.

''நான் வந்திருக்கேன்னு சொன்னயா, சித்தப்பா?'' என்று விமலா பதறிக்கொண்டு கேட்டாள்.

''யாரார் வந்திருக்காள்னு அவனே கேட்க ஆரம்பிச்சுட்டானே!''

''எல்லாத்தையும் சொன்னேளா என்ன? பலஹீனத்திலே மறுபடியும் ஏதாவது செய்யப்போகிறது!'' என்ருள் விசாலாக்ஷி, பயத்தோடு.

''அப்படியெல்லாம் சொல்வேனு, சித்தி விமலா செஞ்சதெல்லாம் தப்புன்னு சித்தி காலைப் பிடிச்சிண்டு விடமாட்டேன்னு சொன்னுள்னு சொன்னேன்..''

''அதுக்கு அவர் என்ன சொன்னுர் சித்தப்பா?''

"இப்போவாவது புத்தி வந்ததேன்னு சொன்னுன்.— அப்போ, மாமா, இன்னிக்கி ராத்திரி நான் புறப்படறேனே. அங்கே நான் கவனிக்கிறதுக்கு ரொம்ப இருக்கு. இனிமேல் நீங்கள் கவலைப்படறதுக்கு இடமே இல்லே. அப்படி இருந்தால் நான் போவேனு?"

"அதுக்குள்ளேயா? கஷ்டத்தோடே கஷ்டமாய் இன்னும் ஒரு நாளாவது இருந்துட்டுப் போயேன். நீ இல்லாத போனுல், என் கதி என்ன ஆகியிருக்கும்? நீதாண்டா அப்பா, அவனுக்குத் தம்பி!" என்று ஜானகிராம ஐயர் கண் கலங்கினுர்.

சிந்தாமணி பதில் சொல்ல முடியாமல் சம்மதித்தான். இப்பொழுது, சுசீலா தான் போய் நாராயணனைப் பார்த்துவிட்டு வருவதாய்க் கிளம்பினுள். விமலாவும் கூடப் போவதாகச் சொன்னுள். ஆனுல், சிந்தாமணி புன்முறுவலுடன், "ஆளுக்கு ஒரு வார்த்தை சொன்னுல், அவனும் பேசவேண்டியிருக்கும், அவனுக்கு ஆயாசம் வரக் கூடாது. யாரும் இப்போ போகவேண்டாம்" என்ருன்.

"ரொம்ப பலஹீனமாய் இருக்காரோ?" என்று விசாலாக்ஷி கேட்டாள்.

"அவன் பலத்துக்கு ஒண்ணும் குறைவில்லே" என்ருன் சிந்தாமணி சிரித்த முகத்தோடு. "எல்லாருக்கும் எழுந்திருக்கப் பத்து நாள் வேணும்னுல், அவனுக்கு ஐந்து நாளே போரும். இருந்தாலும் கொஞ்சம் ஆகாரமெல்லாம் சென்றப்புறந்தான் பலம் ஏற்படும். மூணு மணிக்கு எல்லாரும் வாங்கோளேன். ஆனுல், இப்பவே சொல்லிடறேன்—பத்து நிமிஷத்துக்கு மேலே அங்கே யாரும் தங்கப்படாது!"

"உங்கள் அமலுக்குச் சேலம் சின்ன ஊர்போல இருக்கே!" என்ருள் சுசீலா. தங்களை அறியாமலே எல்லாருக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

சிந்தாமணியின் உத்தரவு பிரகாரமே அன்று மத்தியானம் இரண்டு மணிக்கு எல்லாரும் நாராயணனைப்

பார்க்கப் போனர்கள். முதலில் சென்ற விமலா, கண்ணும் கண்ணீருமாய்த் தன் கணவனுடைய கரங்களைப் பிடித்துக் கொண்டாள். தேகத்தை எல்லாம் தடவிக்கொடுத்தாள். பாதங்களை மெல்லப் பிசைந்தாள். பிறகு படுக்கையின் மீதே உட்கார்ந்துகொண்டு விம்மலை அடக்கிக்கொள்ளப் பிரம்மப் பிரயத்தனம் செய்தாள். நிச்சப்தமாய்க் கண்ணீர் வழிந்தபடி, விசாலாக்ஷி நாராயணனை நோக்கிய வாறு நின்றாள். சுசீலாவுக்கும் கண்கள் நனையாமல் போகவில்லை. ஒரு கண நேரம் யாரும் வாயைத் திறக்க வில்லை. கீழே ஹாலில், ஜானகிராம ஐயர் குழந்தை வத்ஸலாவை மடியில் வைத்துக்கொண்டு, ஊஞ்சலில் ஆடுவது 'கிறீச் கிறீச்' என்று மேலே சத்தம் கேட்டது.

"ஏன் நிற்கறேள்? உட்காருங்களேன்" என்று சிந்தாமணி அமைதியைக் கலைத்ததும் மூவரும் உட்கார்ந்து கொண்டார்கள்.

"எல்லாரையும் ரொம்ப பயப்படுத்திவிட்டே, அண்ணு!" என்றாள் சுசீலா.

"என்ன பண்றது, சுசீலா!" என்று நாராயணன் ஈன சுவரத்தில், முறுவலிப்பதுபோல் சொன்னான்.

"பயம்னால் போருமா?—நினைச்சிண்டாலே பகீர் என் கிறது! எவ்வளவு துக்கம்! எவ்வளவு விசாரம்!—அப்பா!" என்று விசாலாக்ஷி மயிர்க்கூச்சிட்டுக் குலுங்கினாள்.

"எல்லாத்துக்கும் நான்தான் காரணம்" என்றாள் விமலா மனம் நொந்து.

நாராயணன் விமலாவை உற்றுப் பார்த்தான். "நீ இல்லை. அப்பாதான்" என்றான். கீழே விரலைச் சுட்டிக் காட்டினான்.

"அவரும் இல்லை" என்றாள் விசாலாக்ஷி குறுக்கிட்டு; "நம்ம பாழாப்போன வழக்கங்கள்தான்."

"விசாலம் சொல்றதுதான் 'ரைட்'.—என்ன விமலா, நமக்கு எண்ணெய் ஊற்றுவானே வாணியச்செட்டி கிழவன்?—முழங்கை கூட வீங்கியிருக்கும்—"

"ஆமாம், ஆமாம்."

"அந்த மனுஷன் போன மாசம் மூணுங்கலியாணமாக, பன்னிரண்டு வயசுப் பொண்ணை பண்ணிண்டு இருக்கு. சொத்து வீணாய்ப் போயிடுமாம்—இதுக்கு நீ என்ன சொல்றே?" என்றாள் சுசீலா.

"சொல்றதுக்கு என்ன இருக்கு அக்கா? இந்தக் குட்டிச் சுவராய்ப்போன வழக்கங்களை யெல்லாம் வேரோடு பிடுங்கி வெந்நீர் ஊத்தவேண்டியதுதான் அடுத்த மாதம் தேர்தலிலே நான் காரியதரிசி ஆயிடப் போறேனே இல்லையோ?—சரி, அப்புறம் என்ன பாடு படுத்தறேன், பார்! என் பாழும் ஜன்மத்தை இந்த நல்ல காரியத்துக்குக்கூடச் சமர்ப்பிக்காதேபோனால் நான் வாழலைன்னு யார் அழுதாள்?" என்றாள் விசாலாக்ஷி வேகத்தோடு.

"இவர் என்னவோ அதுக்குள்ளே கடியாரத்தைப் பார்க்கிறாரே? 'டயம்' ஆயிடுத்தா என்ன?" என்றாள் சுசீலா, கிண்டலாய்ச் சிந்தாமணியைப் பார்த்து.

"அடேயப்பா! நீங்கள் பொல்லாத பேர்வழி! எனக்குக் கொஞ்சம் பாம்புக் காது. கீழே சமையல்காரன் டிபன் ரெடியாயிடுத்துன்னு சொல்லிண்டிருக்கான். போய் சாப்பிட்டுட்டு வந்துடலாம்னு பார்க்கிறேன். நீங்கள் இங்கேயே இருங்கோ" என்று சிந்தாமணி எழுந்தவன், "அவனுக்குக் கொஞ்சம் பழரசம் கொடுத்தால் தேவலையே; நர்ஸ்கூட வீட்டுக்குப் போயிட்டாள்—ஏம்மா, விமலா, கீழே சாத்துக்குடிப் பழம் இருக்கு, நீதான் ரஸம் பிழிஞ்சிண்டு வந்து கொடேன்" என்றான்.

"கொடுக்கிறேனே, சித்தப்பா" என்று விமலாவும் விரைவாய் அவனைப் பின்தொடர்ந்தாள்.

நாராயணன் விசாலாக்ஷியை ஒரு விண்ணப்பம் கேட்டுக்கொள்பவன் போலப் பார்த்தான். "சித்தி பங்களாவிலே நாங்கள் இருக்கோம். உனக்கும் அதே காம்பவுண்டுலே வேறே ஒரு வீடு கட்டச் சொல்றேனே நீ இங்கே தனியாய் இருக்கிறது எனக்குப் பிடிக்கல்லே" என்ருன்.

"அது இனிமேல் இந்த ஜன்மத்துலே இல்லே" என்று விசாலாக்ஷி பலமாகத் தலையை அசைத்தாள். அதே க்ஷணத்தில் மடை திறந்துவிட்டாற்போல் அவளுடைய கண்களில் நீர் ஆருகப் பெருகியது. நாராயணன் தலையை ஒருபுறமாகச் சாய்த்துக்கொண்டான். கண்ணோரத்தில் தேங்கிய நீரைச் சாமர்த்தியமாகத் துடைத்துக்கொண்டான். இப்பொழுது, ஒவ்வொருவருக்கும் ஒரு கணம் போவது ஒரு யுகம்போல இருந்தது. பிறகு விசாலாக்ஷியும் சுசீலாவும் சங்கத்துக் காரியங்களைக் கவனிக்க வேண்டியிருப்பதாக எழுந்து சென்றனர். மாடிப்படிகளில் எதிரே வந்துகொண்டிருந்த விமலாவின் வார்த்தையையும் சட்டை செய்யாமல், விசாலாக்ஷி சுசீலாவுடன் அவள் வீட்டில் நுழைந்தாள்.

இன்றைக்கு ஸ்திரீகள் அடைந்திருக்கும் சிற்சில உரிமைகளுக்காகப் போராடிய பெருமை அந்தக் காலத்துக் காரியதரிசி விசாலாக்ஷிக்கும் உண்டு.

முற்றும்

